## கொழும்பு ஜிந்துப்பிட்டி

அருள்மிகு

## வள்ளி தெய்வயானை சமேத

## சிவசுப்பிரமணிய சுவாமி

கோவில் வெளியீடு



# முருகன் பாடல்
## ஏழாம் பகுதி

தெட்சணத்தார் வேளாளர் மகமை
பரிபாலன சொசைட்டி லிமிட்டெட்
98, ஜிந்துப்பிட்டி தெரு
கொழும்பு-11, இலங்கை

உரிமை பதிவு
யுவ ஆவணி
திருவள்ளுவராண்டு 2026
1995 ஆவணி

**ஆறு பகுதிகள் கொண்ட ஒரு தொகுதியின் விலை.**

இலங்கையில் : ரூபா 2700|-
இந்தியாவில்: ரூபா 1200|-
பிறநாடுகளில் அமெரிக்க டாலர் 60|-

**பாட்டு முதற் குறிப்பு அகராதி
பாட்டுடைக் கோவில் அகராதி
பாட்டுத் தலைப்பு அகராதி
ஆசிரியர் அகராதி
என்பன
பன்னிரண்டாம் பகுதியில்
இறுதிப் பக்கங்களாக உள.
தொகுப்பின் பொருளடக்கம்
முழுமையும் எல்லாப் பகுதிகளிலும்
முன் பக்கங்களில் உள.**

**ஒளிஅச்சுக்கோப்பு, அச்சிடல்:**
*காந்தளகம், 4, முதல்மாடி, 834, அண்ணாசாலை,
சென்னை-600 002. தொலைபேசி: 834505, 8250050.*

**பதிப்பாசிரியர்**

சித்தாந்தச் செம்மல், சைவசித்தாந்த மாமணி
வித்துவான் இரா. அம்பை சங்கரனார்
ஆசிரியர், ''சித்தாந்தம்'' சென்னை.

**இணைப் பதிப்பாசிரியர்**

கலாநிதி நா. சுப்பிரமணியன்
முதல்நிலை மூத்தவிரிவுரையாளர், தமிழ்த் துறை,
யாழ்ப்பாணப் பல்கலைக் கழகம், யாழ்ப்பாணம்.

**நூல் தொகுப்பு சேகரிப்பில் உதவி, ஆலோசனை:**

மயிலங்கூடலூர் பி. நடராசன், யாழ்ப்பாணம்.
க. முத்துக்குமாரசுவாமி, சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழகம், சென்னை.
புலவர் வி. அண்ணாமலை முதலியார், பெங்களூர்.
புலவர் த. கனகரத்தினம், வெள்ளவத்தை, கொழும்பு.
எம்மெஸ். சுந்தரேச ஐயர், திண்டிவனம்.
ரெ. ராமசாமி, அலோஸ்டார், மலேசியா.
ஐ. குலவீரசிங்கம், கோலாலம்பூர், மலேசியா.
மகாவித்துவான் சி. அருணைவடிவேலு முதலியார், காஞ்சிபுரம்.
திருப்பழனஅடிகள், (பழனிசாமி படையாச்சி), ரோஸ் ஹில் மொரிசியசு.
வித்துவான். வே.ரா. தெய்வ சிகாமணிக் கவுண்டர், வேலம்பாளையம்.
ஐ. தி. சம்பந்தன், இலண்டன்.
கவிஞர். ந. கந்தசாமி, மல்லசமுத்திரம்.
முனைவர் ஆ. கந்தையா, சிட்னி, ஆஸ்திரேலியா.
மு. சு. சங்கர், திருநெல்வேலி.
முனைவர் பொ. பூலோகசிங்கம், கொழும்பு.
திருமதி சந்தனா நல்லலிங்கம், கொழும்பு.
சுப. ஆவுடையப்ப தேசிகர், அம்பாசமுத்திரம்.
டாக்டர் பழனிச்சாமிக் கவுண்டர், பிஜித் தீவு.
பீக்கே நாயுடு, தென் இந்திய சன்மார்க்க சங்கம், நந்தி பிஜித்தீவு.
கவிஞர் கலைவாணன், திருவானைக்கா.
ஈ. வி. சிங்கன், சிங்கப்பூர்.
வே. பேரம்பலம், மிச்சிகன், அமெரிக்கா.
வி. எஸ். குமாரசாமி, இசுக்கார்பரோ, கனடா.
ந. ஐயராமன், மேலமாம்பலம், சென்னை.

**நூலாக்கம், அகராதி, மெய்ப்பு, மேற்பார்வை**

புலவர், வெற்றியழகன், நங்கநல்லூர், சென்னை.
கௌசல்யா சுப்பிரமணியன், மயிலாப்பூர், சென்னை.
த. பஞ்சநாதன், பெசண்ட்நகர், சென்னை.
அம்பை ச. பரமசிவம், மாம்பலம், சென்னை.

**ஒளிஅச்சுக்கோப்பு, கணிப்பொறிப்பணி**

க. இரவி, க. சாந்தி, கோ. பார்த்தசாரதி, ம. இராசப்பா, மூவை ந. சுந்தரராசன், அ. ஜெயராஜசிங்கம், நா. உஷா, ச. செந்தில்குமார், சி. சண்முகம், சென்னை.

**பக்கமாக்கல்**

ஓவியர்கள் அ. சந்திரஹாசன், ஜெ. பூவரசு, லோ. பாலமுருகன்

**வண்ண ஓவியங்கள்**

இரா. சிவக்கொழுந்து, வண்ணாரப்பேட்டை, சென்னை.

**படச்சுருள் எதிர்மறை**

சக்தி வண்ண ஆய்வகம், சிந்தாதிரிப்பேட்டை, சென்னை.

**அச்சிடல், கட்டுவேலை**

உதயம் ஆப்செட், சிந்தாதிரிப் பேட்டை, சென்னை.
தங்க அச்சு: விநாயகா டைஸ்டாம்பு ராயப்பேட்டை சென்னை.
கிருஷ்ணன் கட்டாளரகம், வன்னியதேனாம்பேட்டை
செந்தில் கட்டாளரகம், திருவல்லிக்கேணி, சென்னை.

**அலுவலக உதவி**

செ. ரா. ஷோபனா, ச. பரமசிவம், கி. சரவணன், ச. முருகவேள், சென்னை.

**நிதிக்கட்டுப்பாடு**

தெ. அருணாசலம், சென்னை.

**பொதுத் தொடர்பு, இணைப்பு, மேற்பார்வை**

தெ. ஈஸ்வரன், கொழும்பு.

**தயாரிப்பு**

க. சசசிதானந்தன், மறவன்புலவு, சாவகச்சேரி.

## பதிப்புரை

கொழும்பு, ஜிந்துப்பிட்டி அருள்மிகு வள்ளி தெய்வ யானை சமேத சிவசுப்பிரமணிய சுவாமிகள், பல்வேறு அடியார்களால் பல்வேறு காலங்களில் பாடப்பட்ட முருகன் பாமாலைகளைத் தம் பன்னிருகாதுகளாலும் குளிரக்கேட்கும் விருப்பு உகந்தவராய், சங்ககாலம் தொட்டு இன்றுவரை முருகன் மீது பாடப்பட்ட பாடல்கள் அனைத்தையும் தொகுத்து வெளியிடத் தன் அடியார்கட்கு அருளாணை செய்தார்.

இந்த அருளாணையை ஏற்று, எம்மை உய்விக்க இத் திருத் தொண்டைச் செய்யுமாறு அருள் பாலித்த அப்பெருமானின் திருவடிகளைத் தொழுது, 2400 பக்கங்களை 6 பகுதிகளாகக் கொண்ட முதலாவது தொகுப்பை ஆங்கிரச ஆண்டு ஆவணியில் வெளியிட்டோம். தவத்திரு கிருபானந்தவாரியார் சுவாமிகள் இத்தொகுப்பை வெளியிட்டார்கள்.

முருகன் பாடல்கள் உள்ளத்தை உருக்கும்; சிந்தையை நெகிழ்விக்கும்; பாடப் பாடப் பரவசமாக்கும்; கேட்கக் கேட்க மகிழ்ச்சி வெள்ளம் பெருக்கும்.

இசைத் தமிழாய் இனிமை பயக்கும் முருகன் பாடல்களைக் காலந்தோறும் பலர் யாத்துத் தந்துள்ளனர். காலத்தைக் கடந்து வாழும் இப்பாடல்கள் தனித்தனி நூல்களாகக் கிடைக்கின்றனவே அன்றி ஒரே தொகுப்பில் கிடைப்பதில்லை.

இஃது ஓர் அருள் முயற்சி. ஆன்மிக முயற்சி. புதிய முயற்சி. வரலாற்றில் முதல் முயற்சி. ஏற்கனவே 2400 பக்கங்கள் வெளிவந்துள. இப்பொழுது 2400 பக்கங்கள் வெளிவருகின்றன. தொடர்ந்து பல பக்கங்கள் வெளி வர உள்ளன. தமிழில் இயற்றப்பட்டுக் கிடைக்கக் கூடிய சிறந்த பாடல்கள் தொகுக்கப்பட்டுள்ளன.

இந்தத் தொகுப்பு ஒவ்வொருவர் வீட்டிலும் இருக்க வேண்டிய தொகுப்பு; ஒவ்வொரு நூலகத்திலும் இருக்க வேண்டிய தொகுப்பு; ஒவ்வொரு கல்வி நிறுவனத்திலும் இருக்க வேண்டிய தொகுப்பு; ஒவ்வொரு பூசை அறையிலும் இருக்க வேண்டிய தொகுப்பு; இந்தத் தொகுப்பு இன்றி எந்தப் புத்தகத் தட்டும் நிறைவு பெறாது.

தொகுப்பாசிரியரும் பதிப்பாசிரியருமான சித்தாந்தச் செம்மல் சைவசித்தாந்தமாமணி வித்துவான் அம்பை இரா. சங்கரனார், தஞ்சாவூரில் உள்ள தமிழ்ப் பல்கலைக்கழகத் தில் பணிபுரிந்தவர்; சைவசித்தாந்தப் பெருமன்ற வெளி யீடான சித்தாந்தம் இதழின் ஆசிரியர்; தமிழிலும் சைவத்தி லும் ஆழ்ந்த புலமை உடையவர்; கற்றோரும் மற்றோரும் பாராட்டுந் தமிழறிஞர்.

இந்தப் பதிப்பின் இணைப் பதிப்பாசிரியர் கலாநிதி நா. சுப்பிரமணியன், யாழ்ப்பாணப் பல்கலைக்கழகத்தில் முதல் நிலை மூத்த விரிவுரையாளர்; முருகன் பாடற் பரப் பில் நுண்மாநுழைபுல வன்மையாளர். பிரபந்த வகை களைக் கற்றுத் துறை போகியவர்.

புலவர் வெற்றியழகன் மெய்ப்பு நோக்கியும் அச்சாக் கத்தின் பல்நிலைப் பணிகளிலும் தமது புலமைத் திறனை மிகுத்து நல்கியுள்ளார்கள்.

சென்னை காந்தளகம் நிறுவனப் பணியாளர்கள் பல் வேறு நிலைகளில் இந்நூல் செம்மையாக அச்சிட ஒத் துழைத்துள்ளார்கள்.

ஐக்கிய நாடுகள்; உணவு வேளாண்மை நிறுவன ஆலோசகர் க. சச்சிதானந்தன், இத்தொகுப்பைச் சிறப் பாகத் தயாரித்துத் தந்துள்ளார்கள்.

ஒவ்வொரு பகுதியும் தடித்த அட்டையில் சிறப்பு உறை யுடன் கட்டப்பட்டுள்ளன, ஆறு பகுதிகள் கொண்ட இத் தொகுப்பு ஒரே பேழைக்குள் வைத்து வழங்கப்படுகின்றது.

நூலாசிரியர்கள், பதிப்பாசிரியர், வெளிவருவதில் துணைநின்றோர், தயாரிப்பாளர், வாங்கிப் படிப்போர் யாவருக்கும் எம்பெருமான், ஜிந்துப்பிட்டி வள்ளி தெய்வ யானை சமேத சுப்பிரமணிய சுவாமிகள் திருவருள் கிட்டு வதாக.

**— தெட்சணத்தார் வேளாளர் மகமை பரிபாலன சொசைட்டி லிமிட்டெட்,**
**ஜிந்துப்பிட்டி,**
**கொழும்பு-11.**
**யுவ வைகாசி**

## பதிப்பாசிரியர் உரை

இயற்கையே முருகன்; முருகனே இயற்கை; இயற்கை வழிபாடு முருக வழிபாடே. தமிழர் இயற்கையை வழி பட்டனர்; முருகனை வழிபட்டனர். தமிழ் கூறும் நல்லுல கெங்கும் முருகன் கோவில்களை யாண்டும் காணலாம்.

முருகன் குறிஞ்சிக் கடவுள். குன்று தோறாடும் குமர னின் ஆறுபடை வீடுகளுள் ஐந்து மலைமேல் அமைந்துள. ஈழத்தில் கதிர்காமம், தில்லியில் மலை மந்திர் எனப்படும் உத்தரசுவாமிமலை, மலேசியாவில் பத்துமலை யாவும் மலைக் கோயில்களே.

மலைகளிலன்றிச் சமவெளிகளிலும் முருகன் கோயில் கள் உள. திருச்சீரலைவாய் என்ற திருச்செந்தூர், வயலூர், ஈழத்து நல்லூர், செல்வச் சந்நிதி, கொழும்பு ஜிந்துப்பிட்டி ஆகியவற்றில் அமைந்த முருகன் கோயில்கள் சமவெளிக் கோயில்களே.

முருகப்பெருமான் உலகம் முழுவதும் பரந்து வாழும் தனது அடியவர்களுக்குக் காட்சி கொடுக்கப் பல நாடுகளில் உள்ள கோவில்களில் குடிகொண்டுள்ளார். தமிழகம், இலங்கை, சிங்கப்பூர், மலேசியா, தாய்லாந்து, மொரி சியசு, சீசெல்சு, இறியுனியன், வியட்நாம், கம்போடியா, ஹாங்காங், இந்தோனேசியா, ஆஸ்திரேலியா, பிஜித்தீவு கள், சுவிட்சர்லாந்து, ஜெர்மனி, பிரான்சு, பிரிட்டன், கனடா, அமெரிக்கா ஆகிய நாடுகளில் முருகன் கோவில் கள் உள.

முருகன் கோவில்களை இந்நாடுகளில் அமைப்பதற்கு முருகப் பெருமான், திரை கடலோடியும் திரவியம் தேடு கின்ற தமிழர்களுக்கு அருள்புரிந்துள்ளார். நகரத்தார், தட் சணத்தார், சோழ நாட்டினர், ஈழ நாட்டினர் எனத் தொழில் நடத்தச்சென்ற தமிழ் நெஞ்சங்கள் தாம் வாழ்ந்த இடங் களில் முருகப் பெருமானின் அருள் நடத்தவும் சென்றனர்.

இவற்றுள் ஜிந்துப்பிட்டி முருகப் பெருமானின் அருளாணையின்படி மேற்கொள்ளப்பட்ட நூல் தொகுப்பு முயற்சி இது. அப்பெருமான் தன் புகழைத் தன் பன்னிரு செவிகளும் குளிரக் கேட்க விருப்புற்றவனாய்த் தமிழில் உள்ள முருகன் பாடல்கள் அனைத்தையும் ஒரு சேரத் தொகுக்க அருளாணை தந்தான். அவ்வாணையின்படி மேற்கொள்ளப்படும் 'முருகன் பாடல்' தொகுப்பு முயற்சியில் முதல் தொகுதி ஆறுபகுதிகளாக முன்பு வெளிவந்தது.

முதல் தொகுதி வெளிவந்ததும், முருகனடியார்கள் உச்சிமேல் கைவைத்தனர். உள்ளம் உருகி முருகன் அருள் போற்றினர். இத் தொகுதியைத் தமது அகத்துக்கு அணியாக்கினர்.

இதன் தொடர்ச்சியாக இப்பொழுது இரண்டாவது தொகுதி உங்கள் கைகளில் உலா வருகின்றது. முதல் தொகுதியில் வெளிவந்தவற்றுக்கப்பால் பல்வேறு பிரபந்த வகைகளை இத்தொகுதியில் அடைவு செய்துள்ளோம். முன்பு போலவே புராண நூல்கள் சேர்க்கப்படவில்லை.

அகவல் 3, அந்தாதி 5, அநுபூதி 1, அம்மானை 1, அருட்பா 2, அலங்காரம் 1, ஆயிரம் 1, ஆற்றுப்படை 3, உலா 2, ஊஞ்சல் 5, கண்ணி 2, கலம்பகம் 3, கவசம் 1, காவியம் 1, கீர்த்தனை 5, குறவஞ்சி 1, கொச்சகக் கலிப்பா 1, கோவை 2, சந்நிதி முறை 1, சரிதை 1, சிந்து 2, திருப்புகழ் 3, துதியமுது 1, தூது 2, நாற்பது 1, நிந்தாஸ்துதி 1, ஒருபஃது 1, பஞ்சகம் 1, பத்து 4, பதிகம் 17, திருப்பள்ளி எழுச்சி 2, பள்ளு 1, பஜனை 1, பாட்டு 5, பிள்ளைத் தமிழ் 18, தேன் மலர்கள் 1, மாலை 9, வகுப்பு 1, வண்ணம் 1, விருத்தம் 6, வெண்பா 3 என முருகப் பெருமானைப் பாடு பொருளாகக் கொண்ட 123 பிரபந்தங்கள் இத்தொகுப்பில் இடம் பெற்றுள. இவை தவிர, பிரபந்த வகைகளுள் அடங்காததும் அன்பர்கள் விரும்பிப் படிப்பனவுமாகிய 11 பாடல் வகைகள் இடம் பெற்றுள.

அருணகிரி நாதரின் 1-1326 திருப்புகழ்ப் பாடல்கள் முதல் தொகுதியில் இடம் பெற்றன. எஞ்சிய 1327-1378 பாடல்கள் இத்தொகுதியில் இடம் பெறுகின்றன.

முதல் தொகுதியில் பிள்ளைத் தமிழ் 14 உள. இதில் 18 உள.

இத் தொகுப்பு முயற்சி, நூல்கள் தோன்றிய கால வரிசையைக் கருத்திற் கொண்டு அமைந்ததன்று; இலக்கிய வகைகளின் பெயர் அகர வரிசைப்படி அமைந்ததாகும். அகவல் முதல் வெண்பா வரை 41 இலக்கிய வகைகள், அகர வரிசைப்படி அமைந்துள்ளன. எல்லாமாக 135 தலைப்புகளில் இத்தொகுப்பு அமைந்துளது.

பகுதி 1-6 என முதல் தொகுதி அமைந்தது. 1-2404 எனப் பக்க எண்கள் ஆங்குள. பகுதி 7-12 என இத் தொகுதி அமைந்துளது. 2405-4844 எனப் பக்க எண்கள் இதில் உள.

முருகன் அடியார்களுள் தண்டபாணி சுவாமிகளும் பாம்பன் சுவாமிகளும் அண்மைக் காலத்தவர்கள். தலையிடத்து வைக்கத் தக்கோர். அவர்கள் பல நூல்கள் இயற்றியுளர். தண்டபாணி சுவாமிகள் 25000க்கு மேற்பட்ட பாடல்களையும், பாம்பன் சுவாமிகள் 6666 பாடல்களையும் இயற்றியுள்ளனர். தண்டபாணி சுவாமிகளின் பாடல்கள் முதல் தொகுதியில் சில உள. சில இத் தொகுதியில் உள. பாம்பன் சுவாமிகள் பாடல்கள் முழுவதும் அடுத்து வெளிவர உள்ள மூன்றாம் தொகுதியில் அமையும்.

இத்தொகுதியில் கடல்கடந்த நாடுகளில் உள்ள முருகனடியவர் இயற்றிய பிரபந்தங்கள் பல உள்ளடக்கப் பட்டுள்ளன.

எல்லாப் பகுதிகளிலும் தொடக்கத்திற் பொருளடக்கம் முழுவதும் தரப்படுவதால் எந்த இலக்கியம் எந்தப் பகுதியில் இடம் பெற்றுள்ளது என்பதை வாசகர்கள் எளிதில் கண்டுகொள்ளலாம்.

இத்தொகுப்பில் அமைந்த பாடல்கள், அவற்றுக்கான மூல அச்சுப்படிகளில் அமைந்தவாறே உட்பிரிவுகள், யாப்பு, இசை தொடர்பான குறிப்புகள் முதலியவற்றில் எவ்வித மாற்றமுமின்றி எடுத்தாளப்பட்டுள்ளன.

பெரும்பாலான நூல்களுக்கு ஆசிரியர் பெயர் அறியக் கூடியதாயுளது. சிலவற்றுக்கு அறியக்கூடவில்லை. பெயர் களுடன் முன் அல்லது பின் அமைந்த பட்டங்கள் தரப்பட வில்லை.

85 நூலாசிரியர்களின் பெயர்கள் அகர வரிசைப்படி தனியே தொகுக்கப்பட்டுள. அவ்வந் நூலாசிரியர்களின் பாடல்கள் தொடங்கும் பக்க எண்கள் அதில் தரப்பட்டுள. நூலாசிரியரின் சொந்தப் பெயர் முதலிலும் அதனை அடுத்து ஊர்ப்பெயர், பட்டம் (இருப்பின்) என்பன அமையத்தக்க வாறும் இந்த அகரவரிசை அமைந்துள்ளது. (உதாரணம்: இளைய பெருமாள், வித்துவான் கோ.353)

65 பாட்டுடைக்கோயில்களின் அகர வரிசையொன்று தனியாகத் தயாரித்துத் தரப்பட்டுள்ளது. கோயில்களுடன் தொடர்புடைய பாடற்பகுதிகள் எவ்வெப் பக்கங்களில் இடம்பெற்றுள்ளன என்பதைக் கண்டறிய ஏற்றவாறு கோயில் அகரவரிசையில் பக்க எண்கள் தரப்பட்டுள்ளன.

இந்த அகரவரிசையில் சில கோயில்களுக்கு இரண்டு பெயர்கள் அமைந்திருப்பின் இரண்டாவது பெயர் அடைப் புக்குறிக்குள் தரப்பட்டுள்ளது. (உதாரணம்: திருச்செந்தூர் (திருச்சீரலைவாய்), திருவாவினன்குடி (பழநி))

இத்தொகுப்பில் இடம்பெற்றுள்ள பாடல்கள் அனைத் துக்குமான பாட்டு முதற்குறிப்பு அகர வரிசை தயாரிக்கப் பட்டு பன்னிரண்டாவது பகுதியின் பின்னிணைப்பாகத் தரப்பட்டுள்ளது. இதன் துணை கொண்டு பாடல்கள் இடம் பெற்ற பக்கங்களை எளிதில் கண்டு கொள்ளலாம்.

ஆறுபகுதிகளும் ஒரே இடத்தில் அமையக்கூடிய விதத் தில் ஒரு பேழைக்குள் வைக்கப்பட்டிருப்பதால் இந்தத் தொகுப்பும் முதல் தொகுதி போல் ஒரு தனி நூல் போன்ற காட்சியைத் தரும்.

தமிழ்நாடு, பாண்டிச்சேரி, இலங்கை, மலேசியா, சிங் கப்பூர், மொரிசியசு, பிஜி, இங்கிலாந்து, கனடா, ஆஸ்தி ரேலியா ஆகிய இடங்களில் வாழும் முருகனடியார்கள் பலர் இத்தொகுப்பில் உள்ள நூல்கள் பலவற்றைத் தந்து உதவினார்கள். பிறிதொரு பக்கத்தில் இவர்களின் பெயர் களைக் காண்க. நூல்களைத் தந்தது மட்டுமல்லாமல் நூலாக்கத்திலும் ஆலோசனை வழங்கினார்கள்.

கொழும்பு ஜிந்துப்பிட்டி அருள்மிகு சிவசுப்பிரமணிய சுவாமி கோவில் அறங்காவலர்கள் இப்பணியில் எமக்கு முழுமையான ஆதரவையும் ஒத்துழைப்பையும் நல்கினர்.

நூல் சேகரிப்பு, நூலாக்கம் என்பனவற்றில் எமக்கு உதவியர்கட்கும் ஆலோசனைகள் வழங்கியவர்க்கும் எம் உளம் நிறைந்த நன்றி. அவ்வாறே ஜிந்துப்பிட்டி கோவில் அறங்காவலர்கட்கும் நாம் நன்றி உடையோம். யாவர்க்கும் நெஞ்சார்ந்த நன்றி கூறுகிறோம்.

நூல்சேகரிப்பு, ஜிந்துப்பிட்டி கோவிலாருடன் தொடர்பு, ஆலோசனைகள் பெறல், என்பன உள்ளிட்ட யாவற்றை யும் இணைத்தமைத்து, அச்சிடல், பதிப்புச் செம்மை என்ப வற்றில் ஈடுபட்டுப் பணி புரிந்த தயாரிப்பாளர் எமக் களித்த ஊக்கத்திற்கும் ஆக்கத்திற்கும் நன்றி.

புன்னெறி அதனிற் செல்லும் போக்கினை விலக்கி, மேலாம் நன்னெறி ஒழுகச் செய்து, இந்தத் திருப்பாடல் தொகுப்புப் பணியில் ஈடுபடுத்தி எம்மையும் தம் அடியவர் களாக்கிய பன்னிருகரத்தோன் பாத பங்கயங்களைத் தலை மேல் வைத்து வழுத்துகிறோம். எம் வாழ்நாளில் இத்தகைய திருப்பணியைச் செய்ய எம்பெருமான் அருள்புரிந்து ஆட்கொண்டான். எல்லாம் அவன் செயல்.

**நா. சுப்பிரமணியன்**
**இணைப்பதிப்பாசிரியர்**
யாழ்ப்பாணம்

**அம்பை இரா-சங்கரன்**
**பதிப்பாசிரியர்**
அம்பாசமுத்திரம்-627401
தமிழ்நாடு.

## பத்தாம்பகுதி



## பதினோராம் பகுதி



## பன்னிரண்டாம் பகுதி

# பொருளடக்கம்

உ

# சுப்பிரமணியர் அகவல்

## க. சரவணமுத்து

### காப்பு

இப்பிரபஞ்சந் தன்னி லெமக்கருள் குருவாய்வந்த
சுப்பிரமணியர் மீது சொல்லுவ னகவற்பாயான்
அப்பனே மருதில்வைகு மைங்கரத்தோனே யெற்குச்
செப்புவை சுவைதோய் சொல்லுஞ் செறியருள்
வாக்கு மாங்கே.

### நூல்

சீர்தரு ஞானச் செழுஞ்சுட ருருவே
கார்நிற மேனிக் கணபதிக் கிளையவா
பொன்னங் கிரியுடைப் பூங்கொடி யுமையவ
ளன்புடன் பயந்த வருமைக் கண்மணி
நஞ்சணி கண்டர் நட்புட னெமக்குத்
தஞ்சமென் றளித்த சற்குரு நாதா
மாயவன் தனக்கு மருக னாகியே
ஆயபல் லுயிருங் காத்திடு மமலா
அன்றுநஞ் சிவனார்க் கன்புடன் குருவாய்
நின்று பிரணவப் பொருளுரைத் தவனே
அருணகிரி நாத ரன்பாய் வேண்டவே
கருணைகொண் டவரைக் காத்திரட் சித்தவா
நற்பொருள் விளக்க ஞானதே சிகனாய்
வெற்புறு முனியால் விரும்பி நின்றவனே
அறுமீன் மகிழ வாறுருக் கொண்டே
சரவண வாவியிற் றங்கிய குழந்தாய்

மும்மல மாய வசுரரை வதைத்த
செம்மலர்ப் பாதச் சிறியபா லகனே
குடிலையின் பொருள்சொலாப் பிரமனைக் குட்டிக்
கொடியவெஞ் சிறைதனி லமர்த்திய குமரனே
அன்புறு மணியே யரியபே ரமுதே
இன்பம் விளைக்கு மினிய தோற்றமே
உறுதுயர் நீக்கு முலகநா யகனே
அறுமுகங் கொண்டா யையனே யவற்றுள்
உலகத் திருளைக் கெடுத்த தொருமுகம்
உலகத் தவர்க்கருள் கொடுத்த தொருமுகம்
மறையவர் வேள்வியைக் காத்த தொருமுகம்
மறைபொருள் திசைதொறும் விளக்கிய தொருமுகம்
பகைவரா மசுரரை வதைத்த தொருமுகம்
மகிமைசேர் வள்ளியை வேட்ட தொருமுகம்
இவ்வண மாகிய முகங்கட் கிசையவே
செவ்விய கரமும் பன்னிரண் டாயின
இடமகல் பூமியி லென்று மிளைஞனாய்
நடைபயில் கொள்வதும் நட்பாய்ப் புவிகளை
யொருநொடிப் பொழுதி லோடியே வலமாய்
வருவதும் வள்ளிவாழ் தினைப்புன மீதிலே
திரிவதும் முனிவர்க் குரிமைய தாகிய
வாரிய தபோபல மாகி யிருப்பதும்
மறைமுத னடுவொடு கடையிலு மேவியே
யறைதர நின்றது மன்றி யெனக்கயன்
விதியினால் விளைந்த வெலற்கரு மெழுத்தையோர்
மதியினா லழிக்க வல்லது மாகிய
மலரடி கொண்டனை மன்னவுன் வேலாற்
பலவிடை யூறுக ணீக்கினை பக்தியாய்
வழிபடு வோர்க்குறும் வன்பிணி முழுதா
யழியவுஞ் செய்தா யன்றுநக் கீரருக்
குறுதுயர் போக்கினை யுலகுள திசைக
டோறுமுன் கைவே றோன்றிப் பெருஞ்சீர்
படைத்து முன்னாட் பகைவனாஞ் சூரனை
யடக்கியே விட்டதென் னறியாமை நோய்துயர்
துடைக்கவுன் வேலினை யனுப்புதற் குன்றிருக்
கடைவிழிப் பார்வையாற் கருத்தது கொள்ளென



நின்றுநின் றிரந்து நித்தமுந் தொழுதே
னின்றே யென்னைநீ யடிமை கொள்ளையா
தொண்டைமா னாற்றிற் சோதியாய் விளங்கியே
கண்டவர் மனதினைக் கவர்ந்திடும் வேலாய்
கந்த வனந்தனிற் கருணைகொண் டெழுந்தே
வந்தனை செயவருள் வானவர் முதலே
நல்லைமா நகரில் நமக்கருள் குருவாய்
அல்லல்க ணீக்கு மருட்பிர காசா
அணுவணு தோறு மந்தரி யாமியா
யிணுவையி லுறைதரு மெம்மிறை யீஸ்வரா
மாவையில் முன்னாள் மாருதப் புரவியைத்
தாவிய வருத்தந் தணித்த பிரானே
மயிலினி லிவர்ந்தே மனமகிழ் வோடும்
மயிலையி லுறைதரு மாணிக்க மணியே
பரங்கிரி யுறையும் பால குமரனே
திருச்செந் தூர்வாழ் தேவ தேவே
ஆவினன் குடியுறை யன்புடை யமலா
பாவலர் போற்றிசெய் பழனிப் பதியாய்
என்று மருள்செய்யுஞ் சுவாமி மலையாய்
குன்றுதொ றாடலை நன்றென மகிழ்ந்தாய்
பழமுதிர் சோலை யறுமுக வீசா
அழகுறு கதிர்கா மத்துறை நாதா
எட்டி குடிவா ழெண்கண் வேலோய்
கட்டுறு சமரா புரியமர் கடவுளே
யன்ப ருளத்தே யாநந்தத் தாண்டவ
மின்புற நடமிடு மெம்பிறை வள்ளலே
ஆவின் பாலத னுடம்பெலாஞ் செறிந்து
மேவி முலையா லதுவரும் பான்மைபோ
லெமையா ளன்பனே யெங்குநீ இருந்து
எமக்கருள் செய்திடக் கோவில்கள் கொண்டனை
நாட்டினிற் பழகிய நற்குஞ் சரமதைக்
காட்டியே காட்டுக் குஞ்சரம் பிடித்தல்போல்
மானுட வடிவாய் மானிடர்க் கருள்செய
ஞானதே சிகனே நினைத்திங் கேகினை
எத்தனை யோபல வன்பரைக் காத்திட
எத்தனை யோஉருக் கொண்டனை யதனால்

ஊர்க ளனந்தம் பெற்றனை யையா
உற்றா ரில்லா வொருவனா கியநின்
நற்றா டொழுவார் நாதனே நின்னை
யன்னையே தந்தையே யாருயிர்த் துணைவனே
என்குரு மணியே யிறைவா யென்ன
எத்தனை யோபே ரினமுறை கொள்ளுவ
ரத்தனே யதனை யறிவைநீ யன்றே
அலகிலா ஞான வமுதபே ருணவே
பளபளென் றொளிதரு பாலசொ ரூபமே
கலையெலாங் கடந்த கருணையங் கடலே
விலையிலா மாணிக்க விளங்குநற் குவியலே
அற்புதா னந்த வருள்மழை வெள்ளமே
தற்பரன் தந்த சண்முக வடிவே
கண்ணினுள் விளங்குங் களங்கமில் கண்மணி
விண்ணவர் தொழவருள் வேதநா யகனே
கோடை காலத்துக் குளிர்தரு தருவே
வாடிய முகத்தினர்க் கருள்தரு நிதியே
அடியார்க் கெளியனா யருள்கொடுப் பவனே
மிடிமைக ணீக்குமோர் மெய்த்தவ முதலே
எண்ணிலாக் காலமா யான்படுந் துயரங்
கண்ணினாற் கலதிமேன் கடாட்சம் வைத்திலை
பட்டது போதுமுன் பதமினித் துணையென்
றிட்டமாய்ப் போற்றினே னிரங்குவை யையா
இந்தியா இலங்கையி லெழுந்தருள் செய்யுங்
கந்தவே டலங்களைக் கண்டு தரிசனஞ்
செயவிரும் பினனாற் சிறியே னெண்ணஞ்
செயம்பெறச் செய்வாய் திருவுங் கல்வியுஞ்
சீர்பெறு மக்களுஞ் சிறந்தநற் சுகமு
மாண்பு மடக்கமு மறிவும் பொறுமையு
மின்புறு பக்தியு மெனக்களித் திடுவாய்
கல்லா மூட நாயே னின்னைப்
புல்லறி வாற்சில போற்றிசைத் தனனரு
ளெல்லா முன்னரு ளென்றே யிருக்க
நல்லா யுன்னருள் நாட்டந் தருவையே.

**சுப்பிரமணியர் அகவல் முற்றிற்று**



உ

# செல்வச்சந்நிதி அகவல்

## வைத்தியர் ஆண்டியப்பர்

சிந்தையி லெழுந்த செழுஞ்சுடர் வெள்ள
செங்க மலத்துள் செந்திப் பதியே
உந்தியி லுதித்த ஓங்கா ரத்துள்
அந்தமி லொத்த ஐங்கர முதல்வா
உகார உயிராய் ஓரைந் தெழுத்தாய்
சிகாரத்தி னுள்ளே செம்மை சிறந்தும்
அகாரத்தி னுள்ளே ஆட்டிய தாயும்
நகாரத்தி னின்ற நண்பா சரணம்
நாலிதழ் இருக்கும் நாதா சரணம்
ஆறிதழ் இருக்கும் ஆதீ சரணம்
பத்திதழ் இருக்கும் பதியே சரணம்
பன்னிரண்டு இதழில் பரமா சரணம்
பதினாறு இதழில் புருடா சரணம்
இரண்டாம் இதழில் இறைவா சரணம்
எல்லாம் தானாய் ஏகாந் தத்தில்
நில்லா நிலையில் நிறுத்தியே என்னை
ஒத்த இடத்தில் ஒருவரு மறியா
அந்தவெளி யதனில் ஆக்குமந் தன்னில்
நித்திய மான நிலாவுமண் டபத்தில்
மூல நாடியின் மும்மண் டலத்தில்
மேலை வாசல் ஆலயந் தன்னில்
ஆயி ரம்இதழ் அனந்த கோடி
ஆதித்தன் ஒளியும் சந்திரனொளியும்
மனந்தனில் உதித்த மதிமுக மாறும்
கதுவிய கன்ன கவச குண்டலமும்

விண்களிற் றோன்றிய கண்க ளீராறும்
வேத வொளியில் அணிமுடி யாறும்
விந்து நாதமும் மேலாந் தரத்தில்
சோதி நீறும் சுந்தரத் தழகும்
செவ்விதழ் கனிவாய் செம்முகச் சிரிப்பும்
பங்கய இதழ்சேர் பன்னிரு புயமும்
பன்மணி யணிந்த பதக்கமு மார்பும்
நன்மணி முத்தும் நவரத்தின மாலையும்
பொற்புரி நூலும் பொருந்திய அழகும்
விற்பொரு வேளை வென்றதோர் வீறும்
உந்திச் சுழியும் உரோமத் தொழுங்கும்
செந்தியை ஒத்த செவ்வரிப் பட்டும்
சிறந்த மருங்கிற் சீரா வழகும்
பாதச் சிலம்பும் பன்மணித் தண்டையும்
ஓங்கார மென்னும் ஒண்மயி லேறி
பாங்கான கோழிக் கொடியொரு கையும்
ஆங்கார மென்னும் மவ்வொரு கையும்
பாசந் தன்னைப் பகர்ந்த கையொன்றும்
அங்குசம் தன்னை அணிந்த கையொன்றும்
வச்சிரம் தன்னை வகுத்த கையொன்றும்
கடகம் தன்னைக் கவர்ந்தகை யொன்றும்
வள்ளியை மணந்து அணைத்த கையொன்றும்
தெய்வத யானையைச் சேர்த்த கையொன்றும்
நகார மொருகையும் தனுவொரு கையும்
சங்கொரு கையும் சக்கர மொருகையும்
மின்னிய வயிறும்' பன்னிரு கையும்
விண்ணும் மண்ணும் மேருவும் தானாய்
என்கணுள் நிறைந்த கந்தா சரணம்
காலும் கனலும் புனலு மாகப்
பொருந்தி யிருந்த புதல்வா சரணம்
சாக்கிரம் சாக்கிரம் சாக்கிரம் தன்னில்
தாக்கி யிருந்த சண்முகா சரணம்
சொப்பனம் சுழுத்தி துரியம் துரியாதீதம்
விற்பொரு ளாகி விழித்தாய் சரணம்
திசையும் திக்கும் தேவரும் தானாய்
அசைவா யமர்ந்தாய் சரணம் சரணம்



பசுவும் பாசமும் நேசமும் தானாய்
இதய மாக்கிய இறைவா சரணம்
ஊனாய் உயிராய் ஒன்றாய் எங்கும்
நீயாய் நானாய் நின்றாய் சரணம்
நின்சர ணம்தனை நினைப்பவர் தங்கள்
நீண்ட பிறப்பைத் தவிர்ப்பாய் சரணம்
நிலவுலா வியநீண் மணிமண்ட பத்துள்
உலவு கின்றதோர் ஒருவன் பெருமையை
அகில சோதியோ டானந்த மாகி
திலக மாமயில் தித்தியென் றாடும்
திருச்செங் கோட்டுறை செல்வமென் சிந்தையே. 72

**செல்வச்சந்நிதி அகவல் முற்றிற்று**

உ

# மாவைக்கந்தர் அகவல்

## காப்பு

### வெண்பா

சீர்மலியு மாவைநகர்ச் செல்வ ரகவலுக்குக்
கார்மலியுந் தெய்வக் கயமுகன்றாட்—பேர்மலரே
யுற்றதுணை யாக வுகந்திருத்தி னேனகத்திற்
குற்றமினி யாகா குறி.

### அகவல்

திருப்பரங் குன்றத் திருப்பமர் செல்வ
சீரலை வாயிடைச் சேறிய விமல
ஆவினன் குடிகக ணசைஇய பெரும்
ஏரகத் தருளொடு மினிதுறை யமல
குன்றுதொ றாடுங் குணனுடைத் தேவ
பழமுதிர் சோலைப் பருப்பத முதல்வ
சந்ததஞ் சுரர்தொழக் கந்தவெற் பிருந்தோய்
வள்ளியை மணங்கொளீஇ வள்ளிவெற் புறைந்தோய்
பிணிக ளகற்றித் தணிகைய மர்ந்தோய்
குமர கோட்டத் தமருபு வசித்தோய்
நிலைத்தகுங் கதிரை மலைத்தலை வதிந்தோய்
நாமம் பெறீஇக்கதிர் காமம் பயின்றோய்
அண்ணலஞ் சிவனார் கண்ணரு டனையா
மாதரார் கௌரி காதற் புதல்வ
கார்த்திகை தந்த சீர்த்திகொண் மைந்த
கங்கை பயந்த பங்கமில் குழவீ



அமரி யெண்டோளி சமரிதன் பால
காடுகா ளென்னு மோடிதன் சிறுவ
அஞ்செனுங் கரத்துக் குஞ்சரற் கிளைவ
வாசவ னம்பி கேசவன் மருக
மான்மக டேவர் கோன்மகள் கணவ
வானுறு மமரர் சேனைத் தலைவ
பகல்செயுஞ் செவ்வேற் படையுடை யானே
பசுங்கதிர் மஞ்ஞைப் பரியுடை யானே
கோழி யோங்கிய கொடியுடை யானே
குலவுறு நீப மலருடை யானே
மள்ளருண் மள்ள னாகுபு நிற்போய்
மாற்றார் தமக்குக் கூற்றாய் நிற்போய்
பொருகளந் தன்னி லொருவனாய் நிற்போய்
புகழ்பெறு மூவர் முதல்வனாய் நிற்போய்
நெடுவரைக் குறிஞ்சி நிலக்கிழ வோனே
புலமையின் முதிர்ந்த புலவர்க ளேறே
சான்றோர் புகழ்ந்த தகைமொழி மலையே
உயிர்க்குகை தோறு முறைதரு குகனே
எந்த ஞான்று மிளமைசேர் முருகா
குற்சிதம் போக்கிக் குணனருள் குமரா
சரவணோற் பவனே சாமி குழகா
பொன்னே மணியே பொலிநறும் விரையே
தண்ணார் கரும்பே ததைமலர்த் தேனே
என்னிரு விழிமணிப் பாவை யாவாய்
மனமெனுங் கண்ணுண் மணியெனு மறிவுட
பாவை யாகிய பல்லுயிர்க் குயிரே
பரிசில ராய்நின் பதம்பணி பண்பின்
வறியவர்க் கென்றுங் குறைகெடுத் தருள்வோய்
பிணியினர்க் கென்றுந் துனியறுத் தருள்வோய்
அடலிலார்க் கென்று மிடல்கொடுத் தருள்வோய்
கலைவரார்க் கென்றுங் கலைவரப் புரிவோய்
இன்னன மியாவ ரியாதியா தடைவான்
நச்சின ரஃததை நயந்தரு ணெடுவேள்
பெறலரு மோக்கத் திருவரு ளியவுள்
நின்செய லறிந்த நிலையுடைப் பெரியோர்
கருணைசேர் கந்த சாமிக் கடவுணீ

கண்டவர் யாரும் விண்டுவிண் டோட
முட்டிய தகர்ப்பின் னிட்டனை யென்பர்
சிரமது குனியாப் பிரமனைக் குட்டிப்
புகுத்தியுஞ் சிறைச்க ணகற்றினை யென்பர்
பூமல ரிருந்து தாவறு முலகப்
படைத்தற் றொழிலு னடத்தினை யென்பர்
ஓமெனுந் தாரக மாமொழிப் பொருளை
ஈசனுக் கருளிய தேசிக னென்பர்
கடலகத் திட்ட வடலகப் புயனை
வீக்கிய மாயை போக்கினை யென்பர்
வஞ்சக வுருவாய் விண்டொட நெடுகி
வளர்ந்ததோர் வரையைப் பிளந்தனை யென்பர்
கொடியவெஞ் சூரைக் குலமுட னறுத்தே
நீக்கரு மகிழ்சுரர்க் காக்கினை யென்பர்
விண்ணவர் கோமா னண்ணலங் களிற்றை
நெருக்கிய சாப முருக்கினை யென்பர்
தாரணி யாண்ட சீர்முசு குந்தற்
கந்தமி னல்வரந் தந்தனை யென்பர்
பாரகம் புகழு நாரத முனிவற்
கடுத்த பெருமை கொடுத்தனை யென்பர்
சீர்சால் பொதியச் சிறுமுனி வரற்குத்
தெளித்தன நூற்பொரு ளளித்தனை யென்பர்
பொய்வழிச் சமய மையிரு ளகற்ற
நீயே சம்பந்த னானா யென்பர்
அற்புத மின்னன பற்பல வியற்றிச்
சிறந்த நின்பெருமை யறைந்திட முடிமோ
நல்லிசை மண்டிய நலங்கிளர் சேய்நீ
ஒல்லென் றிரைபிற ழுவர்நீர்க் கடல்சூழ்
கல்லெ னருவிக் கான்யாற் றடைகரை
ஊர்மலி யிலங்கைச் சீர்மகண் முகனாய்ப்
பேர்பெறக் கிடந்து பிறங்கியாழ்ப் பாண
மாநகர்த் துலங்கு மணமிகு திலதம்
நாடொறுங் குன்றிற் குவைஇய பண்டங்
கலத்தாற் றரீஇய கழிக்கரை நெய்தற்
பலத்தாற் றிணியுடற் பரதவர் வணிக
மாக்க ளந்நியர் மற்றவர் போகித்



தேக்கிய வீதிகள் செறிகாங் கேயன்
துறைக்குத் தென்பாற் றுகளறு நிலயம்
நிறைக்குந் தரும நிலைக்கள னாகிக்
கோவி றடமடங் கோபுர மாதி
தேவநற் புண்ணிய தீர்த்தமு மல்கி
நிருத்தன் சினகரந் திருத்தக மேவி
நுரைத்தலைப் புனலால் வரன்றிடு மணிகொள்
சாரற் குறிஞ்சிக் கீரி மலைக்கு
நேரிற் றென்கீழ் நிலவுறு பாக்கங்
காடுசார் முல்லை கழிந்ததற் கப்பால்
நாடுசார் மருத நன்னிலத் திடையே
இஞ்சி கருணை யியல்வகை மூலம்
மஞ்சடாம் பூல வல்லிமற் றவைகள்
பைங்கிளி மஞ்ஞை பகர்குயி லாதி
தங்கிய வைப்பிற் றண்டலை தோறும்
வாழை வருக்கை மாவொடு தெங்கு
பூக நரந்தம் புகழெலு மிச்சை
மாதுளை கன்ன லாசினி மருவித்
தேம்படு பனைநல் வேம்பொடு நாவல்
தண்புளி யாலர சாத்தி யிருப்பை
ஆதிய விரசி யழகுறு மாவையில்
வீதிகள் மடங்கள் விரையுறு பூங்கா
கொடிதவழ் கோபுரங் கூவல்கள் பல்குங்
கடிமதிற் கோவிற் கடவையின் கண்ணே
முழுமதி யன்ன மூவிரு முகனுஞ்
செழுமல ரன்ன பன்னிரு விழியுஞ்
செங்கை யிராறும் பொங்குறு படையுங்
கொங்கல ரணிக டங்கிய புயனுங்
கொழுமலர்க் கஞ்சக் கழலடி யிணையுங்
கெழுமிய வடிவோ டரிவையர் சகிதம்
எழின்மயின் மிசையே யெழுந்திருந் தருளல்
நம்மனோர்க் கருடருஞ் செம்மையி னன்றோ
தாயுந் தந்தையு மாகிய நீயிஞ்
ஞாலத் திருள்கெட மோலி கவித்துங்
கருநீ றடையத் திருநீ றணிந்தும்
மண்டலம் மகிழக் குண்டலம் புனைந்துங்

காப்புப் புரிதரக் காப்புச் செறித்துந்
துயராழி போக்க விரலாழி யிட்டுஞ்
சுழல வினைகள் கழல்க ளணிந்தும்
நலம்படக் காலிற் சிலம்புக ளியைத்தும்
இங்ஙனம் விளங்கினை யாவொடு மன்றே
பூமக ளுறையு மாவையம் பதியிற்
றகுமுறை விரத நகுலநன் முனிக்குக்
கருதிய வரநீ யருளினை யெனவுங்
குதிரை முகத்தி னரசிளங் குமரி
மாற்றரு நோய்குறை பாற்றினை யெனவுங்
கன்ன பரம்பரைக் கதைகளு முளவே
மாவையில் வந்துன் மலரடி போற்றி
வேண்டுந வேண்டியாங் கெய்தினர் பலர்தாம்
ஆண்டாண் டுறைதலு மறிவா மன்றே
நின்றன தத்தன் குன்ற வில்லி
தன்செய லாயத் தகுமினி யையா
மந்திர மலையை மத்தெனக் கொண்டே
பாற்கடல் கடைநாள் எழுந்திடு நஞ்சை
உண்டுயிர் யாவையுங் காத்தன னென்றுந்
தக்கன் முனிவாற் றனித்துயர் கொண்ட
சோமனைச் சடையிற் சூடின னென்றும்
அஞ்சுற யாரும் வந்ததொர் நதியைத்
தரித்ததன் வலிமை கெடுத்தன னென்றும்
வந்திதன் பிட்டைக் கந்தையி லேற்றே
உண்டனன் மண்ணைச் சுமந்தா னென்றும்
வானவ ருய்யத் தானவர் புரங்கள்
சிரித்துப் பொடியா யெரித்தன னென்றும்
யோகமும் விழைந்த போகமுந் தழைக்க
யோகியும் போகியு மானா னென்றும்
வாசவன் சேய்செய் மாசறு தவத்தாற்
பாசு பதந்தரப் பரிந்தன னென்றுந்
தந்தைதா ளறுத்த மைந்தனுக் கன்று
முந்துறு முயர்நிலை தந்தா னென்றும்
நாலுறழ் நாலாண் டுடைமறை யோற்காக்
காலனைக் காலா லுதைத்தன னென்றுங்
குருவடி வாகித் திருவுப தேசம்



வாத வூரனுக் கோதின னென்றும்
ஞான சம்பந்தற் கான வெண்முத்துச்
சிவிகை யாதி யுதவின னென்றும்
வாகீச னுக்குப் போகாத குன்மங்
கொடுத்துச் சிவனெறிப் படுத்தின னென்றும்
சுந்தரன் பொருட்டுத் தூதுநள் ளிரவிற்
சென்றே பரவைக் குரைத்தன னென்றும்
இவைபோ லின்னு நவைதீ ராடல்
நனந்தலை யுலகத் தனந்தபல் கோடி
ஆங்காங் கருளின் விளைத்தன னென்றும்
அலகிலா நூல்கண் மலைவிலா தியம்புஞ்
சாம்பவி நின்றாய் தனிச்செய னோக்கிற்
தக்க னுஞற்று தனித்தவக் கிரங்கி
மகளெனச் சின்னாள் வைகின ளவளே
வரைகளுக் கரையன் புரிதவப் பயனாய்
உலகினி னிலவு மலைமக ளவளே
நந்நான் கிரட்டி நல்லறம் பலவும்
ஒப்பறச் செய்திடு முத்தமி யவளே
எவ்வகை யருளு மெளிதினி லினிதாய்
அழகொடும் பிறப்ப தவள்வயி னன்றே
வினைக ளகற்றும் விநாயக னாகிநி
னண்ணன் பெருமையை யெண்ணுவ மிப்பால்
நம்பிக் கருங்கலை ஞான மளித்துப்
புரந்தரற் காகப் பொன்னியைப் பாய்ச்சிக்
கலங்கஞர் விளைத்த கயமுகற் றடீஇக்
குறுமுனி தனக்குப் பெறுவர மருளி
இராவணன் றனக்குப் பராவரு ளுதவி
அவ்வையை வெள்ளி யகன்கிரி மிசையே
முன்னர்ப் புகுதர முறைமையிற் கூட்டி
இவ்வா றளவில் கைமா றற்ற
றிருநலன் கொழிக்குங் கருணையங் கடலென்
றறைந்த தறிந்தவா றறைந்து மன்றே
ஆதலி னின்னை யன்பிற் கைதொழூஉப்
பரவிப் பதம்பணிந் துற்றனென் பரம
அருட்குண னுன்ற னியற்குண னன்றித்
தந்தைக் குளகுண மைந்தற் கும்மே

அனையர்க் குளகுணந் தனயற் கும்மே
அண்ணற் குளகுணந் தம்பிக் கும்மே
ஆயினுந் தோன்றா லளியனே னீண்டு
வலையினிற் பட்ட வுயிரினைப் போலும்
புலியெதிர்ப் பட்ட பசுவினைப் போலும்
அராமுற் பட்ட வெலியினைப் போலும்
கருடனைக் கண்ட வரவினைப் போலும்
அரியினைக் கண்ட கரியினைப் போலும்
தனித்துயர்க் கடலி னனிவீழ்ந் துழலத்
தெரிந்துங் கடாக்ஷஞ் செய்யாத தென்கொல்
மைந்தர்செய் குற்றந் தந்தையர் பொறுத்தல்
முறைமையென் றறிஞ ரறைகுவ ரதனால்
சிறியேன் செய்த சிறுபிழை யெல்லாம்
பொறுத்து நன்னிலை நிறுத்துக வையா
அத்தனொ டம்மை யருட்குரு தெய்வம்
முத்தியென் றெல்லா முழுப்பொரு ணீயே
நினையலாற் றெய்வம் நினைக்கவு மறியேன்
பினையொரு தெய்வம் பேசுதற் கியையேன்
தொழுதகு தெய்வ நீயெனத் துணிந்தேன்
எவ்வகைத் துயரு மின்னே தபுக்குதி
வேதமு மறியாச் சோதிவா னவனே
நாதமுங் கடந்த போதவான் கடலே
சின்மயா னந்த நின்மல முதலே
ஆதியு மந்தமு மிலாப்பழம் பொருளே
எங்கு நிறைந்து தங்கிய வியாபி
சச்சிதா னந்த சகளநிஷ் களனே
அருளுக வருளுக வரமெலா மருளுக
அருளுக பதத்துணை யருளுக வருளே.

## வெண்பா

நகுல முனிவரற்கு நல்லரு டேக்குந்
தகுகருணை வாரிதிதா னென்னை—வெகுதுயரி
னின்று மெடுத்தே நிலையருளு மென்றங்குச்
சென்று துதித்தேன் றிறன்.



முல்லைக் கிணைநகையாண் முன்னே பரிமுகத்து
வல்லிக் கருள்பொழியும் வான்மேகம்—செல்லற்கண்
யானுழலக் கண்ணோக்க மெட்டுணையும் வையாதோ
தானெனமுற் புக்கேன் றனி.

## கலித்துறை

அஞ்சங் கலந்த மலர்வாவி தோன்று மறுமுகவா
வஞ்சங் கலந்த கலிநீடி நின்று வருத்தியெனை
நெஞ்சங் கலந்த பிணிதந்து வாட்டு நிலைகுலைத்து
தஞ்சங் கலந்த வழியொன்று காட்டு தயைபுரிந்தே.

மாவைக் கந்தர் அகவல் முற்றிற்று.

உ

## அலோர்ஸ்டார் அருள்மிகு தண்டபாணி

# இருபா இருபது அந்தாதி

## ரெ. இராமசாமி

### காப்பு

திருமேவும் சீரால் திகழும் அலோர்ஸ்டார்
அருள்மேவு தண்டபாணி அண்ணல் - இருபா
இருபது பாடிட ஏரம்பன் ஏந்தல்
உறுதுணை செய்குவான் ஓர்ந்து.

### தண்டாயுதவேள்

பச்சைக் கழனிகள் பரந்தெங்கும்
பைம்பொன் சாலிகள் நிறைந்தெங்கும்
மெச்சும் நொய்வ மரமெங்கும்
மேன்மை மிக்க அலோர்ஸ்டாரில்
விச்சை நிறைந்தோர் புகழ்ந்தேத்தும்
வியனார் கோயில் கொண்டுள்ளான்
இச்சை நிறைவுற் அருள்கூரும்
ஈசன் தண்டா யுதவேளே!

### நகரத்தார் பொற்கோயில்

வேள்வணிகர் என்ன விளங்கும் நகரத்தார்
நீள்அறங்கள் ஆற்றும் நெறிமுறையால் - வேள்இறையே
கட்டினார் பொற்கோயில் காலமெலாம் நீயிருந்து
கொட்டுக நின்னருளைக் கூர்ந்து. 2



### செவ்வேள் சிறப்புகள்

கூர்வேற் படையைக் கொண்டவனாம்
கொடியாய்ச் சேவலைக் கண்டவனாம்
தார்தனைக் கடம்பாய்த் த்ரித்தவனாம்
தழைமலர் வெட்சி மாலையினான்
ஏர்மிகு மயிலில் ஏறுவனாம்
இபமா டுகளில் ஊருவனாம்
சீர்தனை ஊன்றிய சேயோனாம்
செவ்வேள் குமரனின் சிறப்புகளே! 3

### பிறப்பறுக்கும் சுப்பிரமணியன்

சிறப்புறு மிக்கொளி சேர்ந்துநல் லின்பம்
உறப்பெற்ற தாலே ஒளிரும் - பிறப்பறுக்கும்
சுப்பிரமண் யாகந்தா சூர்ப்பகையே நின்னருளைத்
தப்பாமல் தந்திடுவாய் தான். 4

### கடார வடிவேலன்

தான்முதிர் அணுகா இளையோனாய்த்
தழைக்கும் அழகின் முளையோனாய்
கான்மலை ஆடும் களையோனாய்
கருதும் சிந்தை கவர்வோனாய்
மான்மகள் தன்னை மணந்தோனாய்
மன்னும் காந்தி மலிந்தோனாய்
வான்திரு வடிவம் வாய்ந்தோனாய்
வயங்கும் கடார வடிவேலே! 5

### கோலம் காட்டும் கந்தன்

வடிவேலைத் தாங்கி மயிலேறிக் கொண்டு
கொடியோடு வந்தருளுங் கோலம் - அடியேற்குக்
காட்டும்நாள் எந்நாளோ? கந்தனே! அந்நாளை
வேட்டுவேன் என்றும் வியந்து. 6

### அறுமுகன் தோற்றம்

வியன்மிகு ஒளிப்பொறி சிவநுதலில்
விளைந்தே ஆறாய் வந்ததனைப்

பயன்தர ஏற்று வாயுதேவன்
பக்கத் துணையாய் அக்னியுடன்
கயமெனும் சரவணந் தனிலிட்டான்
கடிதறு குழவிகள் ஆயினவாம்
நயந்தவை பார்வதி அணைத்ததனால்
நகையறு முகவன் தோன்றினனே! 7

### கார்த்திகேயன்

தோன்றிய சேய்களாறைத் துய்யறுமீன் மாதறுவர்
ஆன்றமுலைப் பாலூட்டி அன்புடனே - ஈன்றவர்போல்
பேணி வளர்த்தார்கள் பேர்பெற்ற கார்த்திகேயன்
ஆணிப்பொற் பாதம் அடை. 8

### ஆறுமுக விளக்கம்

அடைக்கலம் அளிக்கும் அறுமுகத்தில்
அணிமயில் ஆடிடும் ஒருமுகமாம்
சடையனுக் கோதிய தொருமுகமாம்
தன்னடி யார்க்கருள் ஒருமுகமாம்
படைவேல் வாங்கிய தொருமுகமாம்
பகைவனை வதைக்கும் ஒருமுகமாம்
மடமகள் மணக்கும் ஒருமுகமாம்
மால்மரு கோனின் திருமுகமே! 9

### கவலை நீக்கும் கதிர்வேலன்

திருஞான சக்தியே சீர்வடிவம் கொண்டு
பெருஞானம் தந்தருளும் பெம்மான் - அருளாம்
கதிர்வீசும் வேலால் கவலைகளை நீக்கும்
கதிர்வேலன் ஆனான் கனிந்து. 10

### ஞானபண்டிதன்

கனிந்த அடியார் கரவில்லாக்
கருத்து மலர்மிசை ஏகிடுவான்
இனிக்கும் ஞானக் களஞ்சியமாய்
எல்லா உயிர்க்கும் இலங்கிடுவான்



**தனித்த** உயிர்க்கும் ஆற்றல்களைத்
**தந்தே** அறிவொளி பரப்பிடுவான்
**சனிப்புப்** பிணியைப் போக்கிடுவான்
**சாமி** ஞான பண்டிதனே! 11

### சேனாபதி

**பண்டொ**ருகால் அண்டரைப் பாடுசெய்த சூரனைத்
**தண்டிக்கப்** போர்க்கோலம் தாங்கிய - தண்டுடையான்
**பூதசே** னாபதியாய்ப் போந்தான் பெருமைகளை
**ஓத இயன்**றிடுமோ ஓர்ந்து. 12

### பிரமனைச் சிறையிலிட்ட பெம்மான்

**ஓர்ந்து** முருகனை வணங்காமல்
**ஒது**ங்கிச் சென்ற நான்முகனின்
**கூர்ந்த** செருக்கைக் குலைத்திடவே
**கூறுக** பிரணவப் பொருளென்றான்
**சீர்ந்தி மிக்க** பொருளுரைக்கத்
**தெரி**யாப் பிரமனைச் சிறையினிலே
**சேர்த்த** பெம்மான் சீர்சிறப்பைச்
**செப்பும்** திறமை எனக்குளதோ? 13

### ஏந்தல் திருமுருகன்

**எனக்குற்ற** துன்பத்தை என்றுநீ நீக்கி
**மனக்குறை**யை மாற்றியருள் வாயோ - உனக்குயான்
**ஏதுபிழை** செய்தாலும் ஏந்தல் திருமுருகா
**வாதின்றிக்** காத்தருள வா 14

### ஆனனம ஆறு கொண்டவன்

**வானவர்** தம்மை வதைத்ததனால்
**வல்லமை** வாய்ந்த சூரனுடன்
**கானகக் கட**வுள் காங்கேயன்
**கடும்**போர் புரிந்து சங்கரித்தான்
**ஊனமார்** அசுரனை ஒழித்ததுபோல்
**இசை**யாப் பண்புகள் நாமொழித்தே

ஆனனம் ஆறு கொண்டவனை
அனுதினம் அகமுறப் போற்றுவமே! 15

## வேள் குகன்

போற்றும் அடியார்தம் பூவாம் மனக்குகையில்
வீற்றிருந்து காப்பதனால் வேள்குகனாம் - ஏற்றமிகு
பெம்மான் திருமுருகா! பேறுகளைத் தந்தருளிச்
செம்மையுற வாழ்விக்கச் செய். 16

## தமிழ்த் தெய்வம் முருகன்

செந்தமிழ் தன்னைச் சங்கத்தில்
சீர்பெற ஆய்ந்த தமிழ்த்தெய்வம்
அந்தமில் முருகன் அகத்தியர்க்கே
அருந்தமிழ் உரைத்த ஆசிரியன்
கந்தனின் புராணம் கச்சியப்பர்
கலிவெண் பாவைக் குருபரனார்
சந்தத் திருப்புகழ் அருணகிரி
சாற்றிட அருளிய தமிழ்முருகே! 17

## சுவாமிநாதன்

அறுமுக!நின் ஓங்கார ஆய்வறிய ஈசன்
உறுபொருளைச் சொல்லென் றுரைக்க - அருட்சிவனுக்
கப்பொருளை ஓதியே ஆனசாமி நாதனே!
எப்போதும் காக்க இனிது. 18

## அருள்மிகு தண்டாயுதபாணி

இனிய இயற்கை எழில்குலுங்கி
இலங்கும் அலோர்ஸ்டார் நகர்தன்னில்
வணிகர் நாட்டுக் கோட்டையென
வழங்கும் நகரத் தாரமைத்த
அணிசேர் கோயில் அமர்ந்துள்ள
அருள்மிகு தண்டா யுதபாணி
பணிவாய் வணங்கும் அடியாரைப்
பரிவுடன் காப்பான் பாடுவமே! 19



## பற்றுவோம் சேயைப் பணிந்து

பாடிய பாமாலை பைந்தமிழ்ப் பாவகிக்கு
நாடி அணிவிப்போம் நாமெல்லாம் - கோடிநலம்
பெற்றுப் பலகாலம் பீடுறவே வாழ்ந்திலங்கப்
பற்றிடுவோம் சேய்தாள் பணிந்து. 20

## வாழ்த்து

மண்வளம் பொழியும் அலோர்ஸ்டாரில்
மகிபன் தண்டா யுதன்என்னும்
அண்ணலெம் முருகன் அருள்வாழ்க!
அவன்தன் அடியார் நிதம்வாழ்க!
எண்ணிலா இறைபணி செய்தவராம்
ஏற்றம் மிகுந்த தனவணிகர்
நண்ணிய மலேசிய நாடிதனில்
நாளும் வாழ்க வாழியவே!

**அலோர்ஸ்டார் அருள்மிகு தண்டபாணி**
**இருபா இருபது அந்தாதி முற்றிற்று**

உ

# இணுவை யந்தாதி

## இ. திருநாவுக்கரசு

### காப்பு

திருவளர் செல்வம் திகழ்வள நல்லிணுவைப் பதியில்
மருவிய வேலர்க் கிணுவையந் தாதி மகிழ்ந்தருள
ஒருமருப் பீர்செவி முக்கண்ணால் வாயைங் கரக்கடவுள்
இருபதம் காப்பென் றிருகரங் கூப்பி இறைஞ்சுவனே.

### நூல்

திருத்தங் கிணுவை திகழ்நொச்சி யம்பதி சேர்முருகன்
கருத்தங்கு போதென் கருத்தில் இனித்திடும் கந்தனையென்
வருத்தும் பிறவிப் பெரும்பிணிக் காய மருந்தெனக்கொண்
டருத்தியிற் றாளிணை கண்டேன் அவையெற் கருந்துணையே. 1

துணைநன் மலர்ப்பதம் சூடுவென் நாளும் துணைபுரிந்து
இணையில் மனிதப் பிறவியெடுத்த இணையிலின்பம்
அணையும் சிவநெறி பாலித் திடும்அருள் நல்லிணுவை
அணைமின் அறுமுகன் அம்பொற் பதங்கள் அநுதினமே. 2

அநுதினம் நாண்மலர் அங்கைகொண் டேத்தும் அடியவர்க்கே
அநுசிதம் நீக்கி அளவில்திருவும் அருள்நிதியும்
தநுகரணம் புவனம் பெரும்போகம் தழைக்குமின்பம்
அநவரதம்அருள் வான்நல் லிணுவை அறுமுகனே. 3



அறுமுகன் செந்தி யனைய திருவளர் நல்லிணுவை
நறுமலர்ச் சோலை நகுநொச்சி யம்பதி நண்ணியன்பர்
மறுவறும் உள்ள மலர்மணிப் பீடம் மகிழ்ந்துறைவான்
பெறுவது வேண்டிற் பெருஞ்சாத் தொடன்பர்
பெயர்மின்களே. 4

அன்பா லடிபணி வார்க்கின்ப வாழ்வு அருளுஞ்சுற்றம்
இன்பான செல்வ இருநிதிப் பேறருள் இன்பம்நல்கும்
நன்பான லன்ற னளிவிழி வள்ளிநற் றெய்வமகள்
தன்பால் மருவ இணுவை நகருறை சண்முகனே. 5

சண்முக நாதன் சரவணப் பூந்தடஞ் சார்ந்துவளர்ந்(து)
எண்முக மாறுயர் கார்த்திகைப் பெண்கள் உவந்தெடுத்து
உண்முக மாகநற் பாலமு தூட்ட உவந்தருந்தி
நண்ணி நயந்துறை வான்வந்திப் பார்க்கின்பம் நல்கிடவே. 6

வந்திக்கும் அன்பர் மருளொழித் தின்பம் மலர்கவென்று
புந்திக் கிலேசமும் முந்தை வினைமுழு தும்மழித்து
சிந்தைக் கினிய செவிக்கினியதாஞ் சொல்லும் வாய்க்கினிய
கந்தன் இணுவை நயந்தனன் கல்யாண வேலவனே. 7

வேலவன் கோல மயில்விளை யாடுங் குகன்அடியார்க்(கு)
ஏல உயிர்க்குயி ராயுள் புகுந்தளித் தோங்குமின்பம்
சால அருள்பவன் சங்கரன் அம்பிகை தந்தசுதன்
சீல இணுவை முருகன் திருவடி சேர்மின்களே. 8

மின்னிகர் நுண்ணிடை வேல்விழி வள்ளி விரும்பும்குகன்
தன்னிக ரில்தகர் ஊர்ந்தவு ணர்குலம் சாய்த்துவைவேல்
கொன்னிலைச் சூர்முதல் வேரறத் தொட்ட குமரன்நெடும்
பொன்னிலை மாட மலியிணு வைப்பதிப் புங்கவனே. 9

புங்கவன் பொன்னடி போற்றமெய்ஞ் ஞானநற் போதமருள்
சங்கரன் சண்முகன் சங்கரி அம்பிகை சேய்குடிலை
ஐங்கரன் தம்பி அணிவள்ளி தெய்வத யானைமகிழ்
மங்கல நல்லிணு வைக்குகன் வாழ்வருள் மாணிக்கமே. 10

மாணிக்கக் கூத்தன் மகிழ்சிவ காமி மணாளனுயர்
ஆணிப்பொன் னம்பலத் தாடி யழகியார் மாமதுரை
மாணி யிருவர் வணங்கக் கால்மாறி மருவும்நடன்
வேணிப்பி ரான்மகன் வேள்இணு வைப்பதி மேவினனே. 11

மேவார் புரங்கள் அழித்தன் றருளினோான் விண்ணவர்க்குச்
சாவா மருந்தருள் சங்கரன் நெற்றி தனிலுதித்து
மூவா முகுந்தன் விரிஞ்சற் கருளவெஞ் சூர்தடிந்தான்
பூவார் பொழிலிணு வைப்பதி மேவிய புண்ணியனே. 12

புண்ணியம் முன்பல கோடிசெய் தேன்முப் புரங்கள்அட
மண்ணியற் றேர்வரு வான்திரி சூலிநன் மைந்தன்புனப்
பண்ணியல் வள்ளி பதம்பணி வேலன் பழமறையோர்
நண்ணிய நல்லிணு வைக்கந்தன் நற்பதம் நாடுமினே 13

நாடரி தாகுமுன் நல்லடித் தாமரை நாண்மலர்தூய்ப்
பாடவல் லார்க்கரு ளும்பத பங்கயம் பைஞ்செழுந்தேன்
ஏடலர் நீப மலர்த்தொடை யான்நொச்சி யம்பதிவாழ்
ஆடக நன்மணி மந்திரம் மேவும் அறுமுகனே. 14

அறுமுகன் சங்கத் தலைம கனாய்த்தமி ழாய்ந்துணர
உறுபுல வோர்க்கரு ளீந்தவன் நல்லி ணுவைமுருகன்
மறுவுறு வள்ளிதெய் வானை மருவ மகிழ்சிறந்து
நறுமலர் நாட்பதந் தந்தெமை வாழ்விக்கும் நாயகனே. 15

நாயகன் நாரணன் நான்முகன் நாடரும் நன்மருகன்
வேயன தோள்வள்ளி தெய்வத மாது மணாளன்சிவ
மாய பரஞ்சுட ரான குமாரன் அறிவறிந்த
தூயவர் வாழிணு வைப்பதி மேய சுடர்க்கொழுந்தே. 16

சுடர்நெடு வேலன் சுரர்குல காவலன் தோகைமஞ்ஞை
படர்கும ரேசன் பழநிசெந் தூர்பரங் குன்றம்வைகும்
இடர்கடிந் தின்றமிழ் பாட இனிதுகந் தின்பருளும்
கடமலி யைங்கரன் வாழிணு வைப்பதிக் காவலனே. 17



காவலன் கோல மயிலழ கன்கடம் பன்குகன்கோ
தேவ குலாதிபன் குஞ்சரி வள்ளி மணாளான்உயர்
மூவரு மாகிய மூல முதற்பொருள் முற்றுணர்ந்த
பாவலர் வாழிணு வைப்பதி வேலோன் பரஞ்சுடரே. 18

சுடர்வடி வேலோன் துடியிடை வள்ளி துணைவன்தெய்வ
மடமகள் குஞ்சரி மங்கை மணாளன் மலைமகள்சேய்
படவர வேரிடைக் கார்த்திகை மங்கையர் பாலயின்றோன்
தடமதில் சூழிணு வைப்பதி வாழ்சிவ சண்முகனே. 19

சண்முகன் பன்னிரு கையினன் அன்பர்க் கருள்கருணைக்
கண்ணினன் கார்மயில் வாகனன் கற்பகம் காமவல்லி
பெண்ணமிர் தாகிய வள்ளிதெய் வானை மருவுதமிழ்ப்
பண்ணியற் பாவலர் சேரிணு வைவாழ் பரஞ்சுடரே. 20

பரஞ்சுடர் நெற்றியங் கண்ணிடைத் தோன்றிப் பவனன்அங்கி
வரந்தரு கங்கை சுமந்துய்ப்ப வான்சி மயவிமயச்
சரந்திகழ் தெய்வச் சரவணப் பூந்தடஞ் சார்ந்தசெவ்வேள்
வரந்தர நல்லிணு வைப்பதி வாழும் அறுமுகனே. 21

அறுமுகன் அம்பிகை தன்சுதன் ஆரல் அரியகற்பின்
மறுவறு கார்த்திகை மங்கையர் பாலமிர் துண்டகந்தன்
இறுதிசெய் சூர்ப்பகை மாற்றி இமையவர்க் கின்பருளி
உறுதவர் வாழிணு வைப்பதி மேவி உறைந்தனனே. 22

உறைந்தென துள்ளத் துயிர்க்குயி ராயுணர் வுள்ளுணர்வாய்
நிறைந்தின்ப வெள்ளம் நிறைய வருள்கந்தன் நீலமஞ்ஞை
உறைந்தன்ப ருள்ள முவப்ப இணுவை உகந்துறைவான்
அறைந்து மறைநற் சிவாகமம் போற்றும் அருந்துணையே. 23

துணையும் துயர்துடைக் கும்வடி வேல்கொள்
தொழுந்தெய்வமும்
கணையொன் றியவிழிக் கன்னி யுமையருள் கண்மணியும்
பணையொன் றியதனக் குஞ்சரி வள்ளி மருவுமின்பத்
தணையும் இணுவையிற் கல்யாண வேலர் அருட்குருவே. 24

குருபரன் மால்மரு கன்கய மாமுக னைக்கடிந்த
ஒருமருப் பானை முகற்கிளை யோன்உம்பர் நாடழித்த
வெருவரு சூர்தடிந் திந்திரற் கன்றவ் வுலகளித்த
திருமுரு கன்இணு வைப்பதி சேர்சிவ சண்முகனே. 25

முகமல ராறும்முந் நான்குயர் தோளும்நன் முண்டகத்தின்
அகவிதழ் நேரு மருவிழி பன்னிரண் டுங்கனகம்
தகதக வென்றொளி பாலிக்கு மாறு தனிமுடியும்
புகலிணு வைக்கந்த வேள்பத மும்என்றன் புந்தியவே. 26

புந்திக் கிலேசமும் மாயப் பிறவியும் போக்கவுன்றன்
சிந்தைக் கினிய திருவடி தந்தின்பச் சீர்தருவாய்
அந்திப் பிறையணிந் தம்பலத் தாடி அருட்குமரா
செந்திற் பதிநிகர் சீரிணு வைச்சிவ சண்முகனே. 27

சண்முகங் கொண்ட தனிவடி வேல சரவணத்துக்
கண்ணுதல் நெற்றிக் கனலிடைப் பூத்தவென் கண்மணியே
பண்முதல் நான்மறை யுண்மகிழ்ந் தோதப் பவந்துடைப்பாய்
பண்ணவர் போற்றிணு வைப்பதி வேல்கொண்ட பாலகனே. 28

பால குமரன் பகீரதி தாங்கும்பச் சைக்குழந்தை
வால கிராதன் மகள்வள்ளி காந்தன் வலம்புரிசூழ்
கோல வெழிற்செந்தி வந்தெமை வாழ்விக்க கோலமிகு
நீல மயின்மிசை வந்திணு வைப்பதி நிற்பவனே. 29

நிற்கு மெனவெண்ணி நில்லாத வற்றை நினைவிற்கொண்டு
அற்ப அறிவால் அருட்பதங் கள்மறந் தேன்அறுகால்
நிற்கும்பொன் னாண்மலர் சேரும் பழமுதிர் சோலை நின்று
பொற்பதி நல்லிணு வைக்கோயில் கொண்டருள் பூரணனே. 30

பூரண சந்திரன் போன்முக மாறுடைப் புங்கவன்றாள்
ஆரண வேதவன் டோலிட்டும் காணற் கரியனவாம்
காரண னாய்ப்பரி பூரண னாய்அயில் கையிற்கொண்டு
தோரண வாயி லிணுவைப் பதிமேய செங்குன்றனே. 31



குன்றொடு தாரகச் சூர்முதல் சாடிச் சுரர்பதங்கள்
அன்றம ரர்க்கருள் செய்த அறுகரு வேலுமுண்டாம்
மன்றமர் தாதை மகிழப் பிரணவ மாண்பொருளை
அன்றுப தேசித் திணுவை நகர்கொண்ட அற்புதற்கே. 32

கொண்டல் தவழ்சிம யக்கந்த வெற்பினிற் கோவில்கொண்டு
தெண்டிரை சூழ்செந்தில் மேவி மகேந்திரஞ் சென்றவுணர்
பண்டுரை வீர மகேந்திரம் அட்ட பரம்பொருளே
எண்டிசை போற்றிணு வைப்பதி மேய 'எழிற்கந்தனே. 33

கந்தன் கடம்பன்நற் காங்கேயன் கார்த்திகை மங்கையர்கள்
வந்தமிழ் தூட்ட வளர்கார்த்தி கேயன் மயிலழகன்
சுந்தரத் தேவநற் குஞ்சரி காந்தன் சுடர்வடிவேல்
மைந்தன் இணுவை வளநகர் சேர்சூர் பயங்கரனே. 34

சூர்இசை மாழத் தொடுவடி வேலன் துணைமலர்த்தாள்
சீர்தரும் செல்வம் தரும்இன்ப வாழ்வு சிறக்கநல்கும்
ஏர்தரும் செந்திநின் றெண்டிசை போற்ற இணுவைநகர்
சேர்சிவ சண்முகன் பன்னிரு தோள்கொண்ட சேவகனே. 35

சேவகன் செந்தில் திருப்பரங் குன்றம்நற் சோலைமலை
மேவு பழநி திருவாவி னன்குடி ஏரகஞ்சேர்
பாவகன் அங்கி பகீரதி தாங்கிய பாலகுகன்
நாவலர் வாழ்இணு வைப்பதி மேவிய நாயகனே. 36

நாயக மான மலர யனைச்சிறை செய்துலக
நாயக னாக உலகளித் தோன்நவை தீர்த்தெமையாள்
நாயகன் வேல்கொண்டு வெஞ்சூர் தடிந்த வளரிணுவை
நாயகன் மாயன் மருகன் சிவைமகிழ் நற்சுதனே. 37

மகிழ்கொன்றை பாதிரி மல்லிகை முல்லை மகிழ்துளவு
முகிழ்சண் பகம்கடம் பார்நொச்சி வில்வம் முகிழ்மலர்கள்
நெகிழ்மந்த காச மருமலர்ச் சோலை நிலவிணுவை
மகிழ்கந்த வேள்பதஞ் சூட வொழியும் மறுபிறப்பே. 38

பிறந்து மொழிபயின் றுன்திருப் பாதம் பிணித்தஅன்பின்
சிறந்த திருப்பணி செய்து வணங்கிடச் சிந்தைகொண்டேன்
மறந்தும் மறுபிற வித்தளை பூணா வகையருள்வாய்
சிறந்து விளங்கிணு வைப்பதி மேய சிவகுருவே. 39

குருபர னேவடி வேல்கரங் கொண்ட சிவக்கொழுந்தே
இருவர்நன் மாதர் இருபுடை மேவ எழுந்தருளும்
திருமுரு காசெந்தில் வந்தெமை யாளிணு வைக்குமரா
கருவிடை மீண்டும் புகுதா வகைவந்து காத்தருளே. 40

அருக்க னொளிகண் ணொளிக்கலந் தாங்குன் அருட்கருணைத்
திருக்கடைக் கண்ணல்கு தேன்நல்கு வாய்செந்தி யம்பதியும்
திருத்தகு மாளிகை சூழிணு வைநொச்சி யம்பதியும்
திருக்கொழி யச்சிந்தை யுங்குடி கொள்சிவ சண்முகனே. 41

சண்முக லிங்கம் சரவணம் மேவும் சகளலிங்கம்
எண்முக மாம்பத மெண்பத்தொன் றுக்கொண் டிழிபிறவி
மண்ணுறக் கொண்டஎன் காயக் கிலேசமும் மாற்றியுன்றாள்
நண்ணுதற் கென்னை நயந்தருள் நல்லிணு வைக்கந்தனே. 42

கந்தனைக் கார்மயில் வாகன னைக்கடம் பாடவித்தேன்
உந்து மருமலர் மாலை தவழுத்த ரீயபுயத்(து)
எந்தை யறுபடை வீடுடை யான்எழிற் செந்திவளர்
மைந்தனை நல்லிணு வைப்பதி வாழ்வை வழுத்துநெஞ்சே. 43

நெஞ்சம் புகுந்த குகன்நெடு மான்மக ளைப்புணர்ந்த
கஞ்ச மலர்ப்பத்க் கண்ணுதல் மைந்தனைக் கற்பகநா
டுஞ்ச வுடம்பிடி தாங்கி யுயர்செந்தி யுற்றுகந்த
மஞ்சனை நல்லிணு வைப்பதி கண்டு வழுத்துமினே. 44

வழுத்துமின் நுங்கள் வருபிற விக்கு மருந்ததுவே
மழுத்தரித் தம்பலத் தாடி நுதலிடை வந்தருளி
முழுத்தழ லாகிச் சரவணம் புக்க குகனைமுன்னி
அழுத்தும் வினைகெடுப் பீர்இணு வைக்குகற் கன்புசெய்தே. 45



அன்புசெய் துன்னடித் தாமரை போற்றும் அருணகிரி
தென்பொதி கைக்குறு மாமுனி தெய்வப்பொய் யாமொழிநல்
தென்றமிழ்ச் சங்கத் தலைவன்நக் கீரன் கவிக்குகந்தோன்
என்றனிப் புன்கவி ஏற்குங்கொல் நல்லிணு வைக்கந்தனே. 46

குகனே குமரா குழகா குறிஞ்சிக் கிழவசிவன்
மகனே மலைமகள் மைந்தா கடம்பா மயிலழகா
மகநா டுடைய மகவான் பதமருள் மால்மருகா
சுகமே தருவாய் இணுவை வளர்சிவ சண்முகனே. 47

சிவஞான சற்குரு கிண்கிணி தண்டை கிளர்மலர்த்தாள்
தவஞான பூபதி சங்கரி அம்பிகை தன்சுதனே
பவமாய வல்வினை பாறவை வேல்கொள் பரம்பொருளே
தவமாக வந்திணு வைப்பதி மேவும் சரவணனே. 48

மேவிநன் மெய்யடி யார்போல் நடித்து வினைநலியும்
பாவியென் நெஞ்சிற் பரிபவம் தீரும் பரிசருள்வாய்
தூவியந் தோகை மிசைவரு தெய்வத் துணைமலர்த்தாள்
ஆவியுள் நிற்பநல் லானந்த வூற்றம் அருள்பரனே. 49

பரனே சிமய இமயப் பராபரை பாலகனே
அரனே அறுமுக னேயல ரம்புயத் தோன்தெருள
உரனே தரும்சிறை செய்தருள் நல்கிப்பின் உய்யத்தந்த
வரனே இணுவை மருவுதெய் வானை மணவாளனே. 50

மணவாளக் கோலத்து வந்துவள் ளிக்கன்று மால்செய்துபின்
கணநாத ரான கணபதி தன்றுணை கொண்டணைந்தோய்
பணமா சுணப்பள்ளிப் பார்மகள் கேள்வன்நன் மால்மருகா
தணியாத பேரன்பு தந்தெனை யாள்இணு வைக்கந்தனே. 51

கந்தனை வாசக் கடம்பனைக் கார்மயில் வாகனனைச்
சிந்தனை செய்யச் சிவபதம் சித்திக்கும் தீமைதரும்
பந்தனை பாறும் பராபரை பாலற் பராவிநிதம்
வந்தனை செய்வீர் வளரிணு வைப்பதி வம்மின்களே. 52

வம்பணி பூண்முலை வள்ளி தெய்வானை மகிழ்நகரிக்
கொம்பணி பூண்முலைக் கார்த்திகைப் பெண்கள் குலவுமன்பால்
நம்பணி யீதெனப் பாலூட்ட வுண்டு நனிவளர்த்த
வெம்பணி பூணிறை தன்சுத நல்லிணு வைக்குகனே. 53

குகனே குறமகள் கொண்க கொடிய குலவவுணன்
சகமே லழியவை வேல்தொட்டுத் தேவர்க் கருள்துணைவா
அகமே மணிபொன் னருஞ்செல்வம் தேடி அவலமுறா(து)
இகமே பரசுகம் நல்காய் இணுவைவை வேற்கரனே. 54

வேலுண் டெமது வினைதீர்க்க மேலைப் பிறப்பறுக்க
ஆலும் பிணிமுக வூர்தியுண் டன்பர் அகங்குளிர்ப்ப
நூலும் கடம்பும் புரள்பன் னிருதோட் குமரனிரு
காலுண் டிணுவையிற் கந்தவே ளுண்டு கருணையுண்டே. 55

கருணைத் திருவுரு வாய்வந்து தோன்றிக் கருதுசிவ
அருணைத் திருப்பதி யாண்டிணு வைப்பதி வாழ்முருகா
சரணம் பணிந்துய்யச் சாரும்பல் கோடி அடியருய்ய
அருணன் ஒளிசேர் அருட்பதந் தந்தெமை ஆண்டருளே. 56

ஆண்டுபல் கோடி யருச்சித் தடிமுடி தேடியன்று
காண்டலி லாதார் கவலுறும் மாலயன் கற்பவெல்லை
மாண்டு மடிவார் அவர்பதம் வேண்டேன் மதுதுளிக்கும்
ஈண்டு புகழிணு வைக்கந்த வேள்தாள் எமக்கினிதே. 57

இனிது கனிகன்னல் கற்கண் டதனில் இனிதமிர்தம்
இனிது மலர்த்தே னதனி னினிதுபஞ் சாமிருதம்
இனிது மலரணை இன்மனை மக்கள் இனிதரசு
இனிதி னினிதிணு வைக்கந்த னின்னருள் தேனமிர்தே. 58

தேன்துளிக் கும்மலர்க் கற்பகச் சோலைகொள் செல்வமலி
வான்பனிப் பெய்த வளரெரி யூட்டி வயங்குசெல்வம்
தான்பெற வன்றம ரர்ச்சிறை செய்த தனிநெடுஞ்சூர்
ஊன்கெட வேல்தொட் டிணுவை மகிழ்ந்திங் குறைந்தனனே. 59



மகிழ்நகை வள்ளிதெய் வானை மருவ மயிலின்மிசை
முகிழ்நகை நன்மதி நேர்முக மாறும்முந் நான்குகையும்
அகிலமெல் லாம்பர வும்கிண் கிணிதண்டை யார்பதமும்
முகில்தவழ் சோலை யிணுவை பணிபவர் முன்னிற்குமே. 60

முன்செய் தவப்பய னாற்றன் னிருபத முண்டகங்கள்
இன்பம் பெறப்பணிந் தேத்தச் சிரந்தந் திணையடிகள்
அன்புற் றிடமனந் தந்து பரவக் கரங்கள்தந்து
என்சற் குருகுகன் இன்புற் றிணுவை இருந்தனனே. 61

இருந்துய ரங்கெடுத் தென்றும் அமரர் இனிதுறையப்
பெருந்திரு வும்தரு வும்பத மும்கொடுத் தென்றும்வையம்
விருந்தும் விழவும் பொலிய அறுபடை வீடுகொண்ட
குருந்தை இணுவைக் குமரனை வந்திக்கக் கூடுமின்பே. 62

கூடுமின் மெய்யடி யார்பதம் வந்திக்கக் கூடுமின்பம்
பாடுமின் பண்டை வினைகெடப் பந்தனை வீடுபெறத்
தேடுமின் செஞ்சுடர் வேலனைச் செல்வ மலியிணுவை
நாடுமின் நாடநல் லானந்த வாழ்வென்றும் நல்குவனே. 63

நல்குர வென்னும் நவையிடைப் பட்டு நலிவுபெறார்
மல்குறு செல்வம் வளர்மக்கள் நன்மனை வாழ்வுறுவார்
செல்வமெல் லாம்மலி நல்லிணு வைக்கந்தன் நாண்மலர்த்தாள்
அல்குறு பேரருட் செல்வம் பெறவந் தடைமின்களே. 64

பெறலரும் கண்டா மணியொலி யோடியல் பேர்முழவம்
உறவுகொள் நல்லடி யார்பண் ணொலியொடு கீதவொலி
அறமலி பூசை மலியொலி அர்ச்சகர் கீதவொலி
பெறலரும் சீரிணு வைப்பதி தன்னொலிக் கும்பெரிதே. 65

ஒலிதெங்கு வாழை உயர்கமு காசினி ஓங்குபலா
மலிதுங்க வான்பயிர் சேர்தெய்வ வாழ்பதி வான்கங்கைபோல்
கலியுறு கூவல்நன் னீர்மலி நல்லிணு வைதொழவே
நலிதரு நோயில்லை நல்குர வில்லை நவையில்லையே. 66

நவையில் நவமணி நக்கொளி காலும் நளிமுடியும்
சிவையின் னொளிர்வெற்றி வேலும் ஒளிசேர் தினகரரின்
குவையன்ன மாமுக மாறுமீ ராறு புயமுந்தண்டை
கவைகொள் சிலம்படி யுந்தந் தருள்இணு வைக்கந்தனே. 67

கந்தன் கடம்பன் களிமயில் வாகனன் கானவள்ளி
கொந்துண் குழற்றெய்வ யானை மணாளன் கொலையவுணர்
நந்தும் படிவடி வேல்தொட்டுத் தேவர்க்கு வாழ்வளித்த
மைந்தன் இணுவை வளர்நொச்சி யம்பதி வாழ்குகனே. 68

குகனே அடியர் குறைதவிர்த் தாட்கொள் குருபரனே
அகனே குழையுநல் லம்பிகை பாகன் அளித்தசிவ
மகனே சரவணப் பூந்தடம் மேவி அருளும்அறு
முகனே வடிவேற் கரனேமெய்ஞ் ஞான முழுமுதலே. 69

முழுமுத லேமுத்தி சித்தி தரும்ஞான சக்திவைவேல்
அழுதடி சேரும்மெய் யன்பர்உள் ளத்துறை அற்புதனே
இழுதென உள்ளம் உருகிநின் னாமம் உவந்துரைப்போர்
பழுதறுத் தாண்டடித் தாமரை தந்தருள் பண்ணவனே. 70

பண்ணும் தவத்தடி யார்தம தேழ்பிற விக்கும்அருள்
நண்ணும் படியருள் மெய்ஞ்ஞான பண்டித நாயடியேன்
கண்ணும்அக் கண்ணி லுறைமணி யும்மணி யின்ஒளியும்
விண்ணும் புவியும் விரிசுடர் யாவும்நீ மேலவனே. 71

மேலவ னேவெள்ளை வாரணம் போன்ற அருள்சுரந்த
வேலவ னேதெய்வ யானை குறமகள் மேவவருள்
நூலவ னேநுவ லுந்தொறும் பேரின்பம் ஞானசுகம்
பாலக னேஅருள் சண்முக நாத பரம்பொருளே. 72

பரம்பொரு ளேபங் கயற்சிறை செய்துபல் லண்டசரா
சரங்களைப் பண்டுள வாறு படைத்தருள் பாலகனே
உரந்துணி யாய்விழ ஒள்வடி வேல்துரந் தும்பருய்ய
வரம்பெறு சூர பயங்கரம் மாற்றிய மாணிக்கமே. 73



மாணிக்க மேனி வயங்குயர் சேவற் கொடியுடையாய்
ஆணிப்பொன் அம்பலத் தாடி யருளும் அறுமுகனே
பேணிப் பணியு மடியர் தமதிடர் சொல்லிநைந்தால்
பாணித் திடாதருள் பாலிக்க வேண்டும் பரைசுதனே. 74

பரைசுத னேபர மானந்த மெய்ஞ்ஞான பாஸ்கரனே
உரைஉணர் வாதி ஒழிந்த நெறியருள் உத்தமனே
கரையிறந் தோடு கடலிற் பரந்த கடுவினையாம்
வரைபக வைவேல் விடுத்தெமை யாள்மயில் வாகனனே. 75

மயிலியல் வள்ளி மணாள மரகத மாமலைமேல்
அயிலோடு தோன்றி அடியார்க் கருளும் அறுமுகனே
பயில்தொறும் நூல்நயம போலினி தாமருள் பாலித்திட
வெயிலெறிக் கும்வடி வேல்முரு காவரு வாய்விரைந்தே. 76

விரைவொடு வந்து மிகுசுகந் தந்தெமை யாண்டருள்வாய்
வரைமகள் தந்த வரைபக வேலெறி வள்ளிமகிழ்
விரைபொலி யுங்கடம் பார்தடந் தோள்முரு காஅடியர்
புரைதவிர்த் தாண்டருள் நல்லிணு வைப்பதிப் புண்ணியனே. 77

புண்ணிய மொன்றுசெய் தேன்என தேழேழ் பிறவியிலும்
கண்ணிய துன்புகழ் கற்றன கேட்டன காதல்செய்து
நண்ணிய துன்திருத் தாமரைத் தாளிணை நல்லவர்வாழ்
பண்ணயந் தேர்புல வோர்வதி நல்லிணு வைக்குகனே. 78

குகனே சரவணப் பூந்தொட்டில் மேவிக் குதலைமொழி
தகவே பயின்றுமை மென்முலைப் பாலமிர் துண்டுகளி
மிகவே யுயர்தவத் தோருறை நல்லிணு வையுகந்த
மகனே யறுமுக னேயகத் தேயுறை மாமணியே. 79

மணிவண்ண மேனிநன் மாயன் மருகா மகிழ்வுடம்பி
னணிவண்ணப் பன்னிரு தோளழ காமலை யாள்சுதனே
மணிவண்ண நல்லடி யாருறை நல்லிணு வைக்குகனே
பிணிநண்ணி மூப்படை யாமுன் பருள்கநின் பேரருளே. 80

பேரா தரத்தொடு பெம்மான்தன் பொன்னடி பேணுபவர்க்
காராத செல்வம் அருளும் அறுமுக அன்பருள்ளம்
ஊராகக் கொண்டுறு சித்தியும் முத்தியும் சேர்க்கும்நின்னை
நேராகும் தெய்வமு முண்டுகொல் ஞான நிருமலனே. 81

மலபந்த மாசறுத் தாண்டுநின் மாண்பத மேதுதிக்க
உலகம் உனதருள் நோக்கிநின் றேயுரு கும்ஒருசூர்
அலமந்து சேவல் மயிலாய்ப் பணிசெய்ய ஆண்டுகொண்டு
நலமுந்து நல்லிணு வையெம் பதிவளர் நாயகனே. 82

நாயக மான மரைமலர் நாட்டத்தன் வேதனும்பர்
நாயக னான மகபதி யாகிய நல்லிமையோர்
தாயக மாக அறிஞர் வதிநல் லிணுவைவந்து
நாயக னேநினை நாடினர்க் கின்பம் நயந்தருளே. 83

அருள்தவ மும்கடைக் கட்சிவ காமி யருள்குகனே
இருள்தவழ் நீலகண் டத்திறை நெற்றியில் வந்துலகின்
மருள்கெட ஞானச் சிவசக்தி வேல்கொண்ட நாயகனே
பொருளறம் இன்பம் புகல்வீடு தந்தருள் பூரணனே. 84

பூரணப் பொற்குடம் நேரும் கனதனப் பூவையர்கள்
நாரணன் தந்த அமிர்தவல் லியருள் சுந்தரிதன்
காரண மாக உதித்தான் திருமுக மாறுகொண்டு
ஏரண வும்இணு வைக்கிறை கல்யாண வேலவனே. 85

வேலுண்டு பச்சை மயிலுண்டு குக்குட வெல்கொடியுண்
டாலும் அபய வரதமுண் டன்றயன் சென்னிமொத்தக்
கோலும் அழகிய பன்னிரு கையுண்டு மெய்யுமுண்டு
மாலும் துயரும் வரலுமுண் டோவென்றி வானவனே. 86

வானவன் காண்குற மாமகள் மேல்மயல் நோய்கதுவக்
கானவ னாகித் தினைப்புனம் மேவிய கற்பகங்காண்
தானவர் வேரொடு சாடத் தனிநெடுஞ் சூர்முடங்க
மானவை வேல்தொட்டு மங்கைதெய் வானைக்கு
வாய்த்தவனே. 87



வாயாரப் பேசுவ துன்திரு நாமங்கள் மன்னுநெஞ்சில்
தாயாக நின்று தலையளித் தாட்கொண்ட சண்முகனே
காயா புரிநெடுங் கோட்டை தகருமுன் காத்தருளே
காயா மலர்நிகர் கண்ணன் மருகாகந் தாகுகனே. 88

கந்தனைக் கார்மயில் வாகன னைக்கடம் பார்தடந்தோள்
மைந்தனை வேதன் சிரமிசை தாள்வைத்த வானவனை
வந்தனை செய்து வழிபட நில்லா வருவினைகள்
சிந்தனை செய்துய்ந் திடுமின் பரகதி சித்திக்குமே. 89

சித்திக்கும் முத்தி திருவள ரும்செல்வம் நின்றிலங்கும்
சித்திக்கும் புத்தியும் தெய்வநல் வாழ்வு சிறந்தொளிரும்
பத்திக்கும் ஞான பராபரன் மேவிய நல்லிணுவை
முத்திக்கு வித்தாந் தலம்நொச்சி யம்பதி முந்துமினே. 90

முந்தும் பிறவிகள் எத்தனை யத்தனை மூண்டெழுந்து
பந்தித்து நின்ற பழவினை அத்தனை பாறவருள்
வந்திப்ப வர்க்கருள் வான்வடி வேல்கொண்டு மாதவத்தோர்
சிந்திக்கும் யோகு பயிலிணு வைப்பதி சேர்ந்துய்ம்மினே. 91

உய்திகண் டாய்நெஞ்ச மேயுனை நானிரந் தேன்பிறவி
எய்திட வேண்டா இனிதின் னடியிணைக் கீழிருந்து
மெய்திகழ் ஞான சிவானந்தத் தேன்மிக மாந்தியன்பின்
உய்தி பெறவருள் வான்இணு வைப்பதி உத்தமனே. 92

உத்தமன் தாள்பணிந் தேனுயர் கந்தபு ராணம்சொன்ன
மெய்தவ மான விரதம் புரிந்தேன் மிகுகருணை
அத்த னருள்சேர் அறுமுகன் மெல்லடித் தாமரையென்
சித்த மிசைநிறை வாய்நின்ற ஆனந்தத் தேன்சொரிந்தே. 93

தேனைப் பழித்த மொழிவள்ளி காந்தன் சிறந்தவைவேற்
கோனை கொடுவினை தீரவந் தித்தேன் குளிர்ந்துசெந்தேன்
ஊனை உயிரை உணர்வையென் உள்ளத்தி லின்பருளும்
கோனை அவனென்று கண்டேன் எனக்கோர்
குறையுமுண்டே: 94

குறைமதி செஞ்சடை மேல்வைத்த தெய்வ குமரகுரு
மறைபயில் வேதியன் வந்தனை செய்ய வரமருளும்
நிறைமலி செல்வ வளநகர் நல்லிணு வைக்குகற்கே
பொறைமலி சிந்தையி னார்க்கரு ளும்பரி பூரணமே. 95

பரிவொடு நாரதன் பண்ணிய யாகத்திற் பாய்ந்தெழுந்து
விரிதிரை ஞாலமோர் மூன்றும் படர்தகர் ஏறிவந்து
அரிமுகன் தாரகன் சூர்பட வேல்கொண்ட ஆறுமுகன்
பரிவுசெய் தாண்டிணு வைப்பதி வாழும் பரம்பொருளே.96

பரம்பொரு ளேபண்டு நால்வர்க் கறம்சொல் பரமன்தந்த
பெரும்பொரு ளாய பிரணவ மெய்ப்பொருள் பேசியசீர்
வரம்பல வெய்த மகிழ்ந்தருள் பாலிக்கும் மால்மருகன்
கரம்படு வேல்துணை யுண்டென் எழுமையும் காப்புறவே.97

காத்தும் படைத்தும் கரந்தும் திருவிளை யாடல்புரி
தீர்த்தன் சரவணப் பூந்தடத் தேவந்த சேந்தன்மகிழ்
பூத்த கடம்பணி தோளழ கன்திருச் செந்திநின்று
நீத்தெமை யாண்டருள் வான்இணு வைப்பதி நின்றனனே.98

நின்றும் இருந்துங் கிடந்தும் நினைநெஞ்ச மேகொடிய
கன்று சினமிகு காரவு ணப்படை கட்டழித்து
வென்றி யமரர்க் கருளிய வேற்படை மேலவனை
ஒன்றி யிருந்து நினைபவர்க் கில்லை உறுதுயரே. 99

உறுபுனற் கங்கை சுமந்தகாங் கேயன் உயர்கயிலை
குறுநடை கொண்டறு மங்கையர் பால்சுரந் தூட்டமகிழ்
அறுமுகன் அம்பிகை ஆர அணைக்க அருளுகந்தன்
நறுமலர்ச் சோலை செறிஇணு வைப்பதி நண்ணினனே.100

நண்ணிப் பணிமின் நலிந்திடும் தீவினை ஞானசெபம்
பண்ணிப் பணிபவர் உள்ளக் கமலத் துறைந்தருளும்
பெண்ணிற் பெருமை படைத்த குறமகள் பேதைமகிழ்
ஒண்ணித் திலநகைத் தெய்வத யானைசேர் உத்தமற்கே.101



உத்தம ஞானியர் புத்தியில் மேவுறும் ஞானசக்தி
சித்த மலம்அறச் செங்கதிர் வேல்விடு தெய்வபதி
பத்தர்கள் முத்தர்கள் சித்தர்கள் மேலவர் சேர்ந்தபதி
பத்திமை சேர்இணு வைப்பதி சார்மின் பயனுறவே. 102

பயனுறு வாழ்க்கையிற் பண்புற வாழ்ந்துபின் பக்குவத்தால்
நயனுறு தெய்வச் சிவகதி சேர நயந்திடுவீர்
கயமுகத் தாரக னைக்கடுஞ் சூரைக் கடந்ததெய்வ
வயமுறு வேற்படை வானவன் றாள்கள் மருவுமினே.103

மருவு மறுகரு வேல்கொண்டு வந்தனை செய்பவர்தம்
இருவினை வேரறுத் தாண்டருள் பாலிக்கும் எங்கள்தெய்வம்
மருவளர் சோலை வளமலி நல்லிணு வைப்பதிவாழ்
குருபரன் சண்முக நாதன் பதந்தொழக் கூற்றஞ்சுமே.104

அஞ்சுகம் வாய்திறந் தன்ன மொழிபயில் வள்ளியெனும்
கிஞ்சுக வாய்மங்கை தன்சர ணம்நறுங் கேழ்கிளரும்
பஞ்சினும் மெல்லடிப் பாவைதெய் வானை பதம்பணியும்
செஞ்சுடர் வேலவன் செஞ்சர ணங்கள்என் சிந்தையவே.105

`ந்தைக் கினியன வந்திப் பவர்க்குத் திருவுமின்பும்
முந்தித் தருவன முத்தி தருவன மூண்டவினைப்
பந்தம் அறுப்பன பால முருகன் பதமலர்கள்
புந்திக் கினிய பரமசு கானந்தம் பூப்பனவே. 106

பூவிற் பொலிதரு பொற்புறு தாண்மலர்ப் போதுமன்பர்
நாவிற் பொலிதரும் நல்லுப தேசமாம் ஆறெழுத்தும்
தேவிற் பொலிதரும் செஞ்சுடர் வேலோன் திருக்கண்களும்
பாவிற் பொலிதர நின்றருள் வாய்கங்கை பாலகனே.107

பாலக னேபர மானந்த நற்சுகம் பாலித்திடும்
நூலவ னேயறு மாமுகம் கொண்ட நிருமலனே
மாலவ னேமுத லோர்வினை தீர்த்தெமை யாண்டருளும்
மேலவ னேஇணு வைப்பதிக் கல்யாண வேலவனே. 108

வேல்கொண்ட கையும் விளங்குநுண் ணூல்பொலி மார்பழகும்
பால்வெள்ளை நீறுறு பன்னிரு தோளும்முந் நான்குகண்ணும்
மால்கொண்ட வள்ளிதெய் வானை மகிழ்வும் வரமருளும்
கால்தந் தருளும் கருணையும் அன்பர்க் கருந்திருவே. 109

இணுவை யந்தாதி முற்றிற்று



உ

# திரு ஏரகத்து இறைவன் பல்வண்ணத் தந்தாதி

## பாவலர் பேகன்

### நேரிசை வெண்பா

சீர்மிகும் ஏரகத் தெய்வத் திருவடிவேல்
பார்புகழப் பல்வண்ணத் தந்தாதித்-தார்புனைய
அப்பன் கணேசன் அரியகழல் போற்றிசெய்வாம்
செப்புபுகழ் சேரும் திகழ்ந்து!

### நூல்

ஓமென உருவம் உடைய அண்டங்கள்
நாமம் பெறுமந் நனிமுன் நாளில்
சொல்லாய் இருந்து துளிர்த்த பொருளை
வல்லதை உள்ளதை நல்லதை, உணர்ந்தோர்
செப்புவர் முருகனெனத் தேர்ந்து
அப்பொருள் எனக்கே அரிய துணையே 1

துணையா எனையே தொடரும் மயிலே
புணையா வருமே புகழ்குக் குடமே
அயில்வேல் வருமே அடியேன் துணையா
பயில்செந் தமிழாய்ப் பலுகி வருமே
சொலும்ஓம் மெனுமச் சுடரும் எழுத்தே
ஒலியா உதித்திவ் வுலகம் அனைத்தும்
படைத்துப் புரந்து துடைக்கும் பொருளா
உடைய ததையே உணர்ந்தோர் விழைந்தே
முருகா முதல்வா முழுமைப்
பொருளே குருவே எனவுணர் வாரே! 2

ஏர கத்தின் ஈசா!என்னைச்
சீராய்க் காக்கும் செல்வா! நின்றன்
தண்டைக் காலைப் பற்றிச் சார்ந்தேன்
அண்டம் யாவும் ஆளும் வேந்தே
என்றன் புன்பா ஏற்கும் நண்பா!
உன்றன் அன்பை என்றும் மறவேன்
பாலா சீலா கோலா வேலா
நூலா காண்போர் நுட்பம் ஆனோய்
பாடல் செய்தேன் பாண்டி
ஊடா மல்நீ ஓடி வாராய்: 3

*(தானா தனத்தன தானா தனத்தனா)*

வாராய் எனதரும் வாகாம் தலைவனே
சீராய்ப் புரந்திடச் சேயாய் வருகவே:
மாறாய் உரைந்திடும் மாற்றைத் தகர்க்கவே
கூராம் உனதரும் வேலைக் கொணர்கவே
பாரோர் வணங்கிடச் சீருறச் சமைத்தனை
ஏர்ஆம் அகத்தினை ஏந்தால் வனைந்தனை
கூறாய்க் குடிலத்தைக் கோவே குருபரா
தேர்ஆம் வழிதனை சேவற் கொடியோய்: 4

*(தனனா தனத்தன தனனா தனத்தன)*

கொடியோர் கொடுத்திடும் கொடுமை ஒழிந்திட
அடியார் அனைவரை அணைத்தே புரந்திட
வடிவே லெடுத்துமுன் வருவாய் சிவகுக
பொடியே பகைப்புலம் புகழே உனக்கென்றும்
உலகோர் தலையினில் உவந்தே அணிகுவர்
குலதே உனதரும் கழலே: ஒருமுறை
எனதாம் சிரசினில் இனிதணிந் தனன்உன்
கனகாம் மணித்தண்டைக் கழலே சிவகுக!
உனையே உருகி உணர்ந்தேன்
எனைநீ புரந்தருள் இனிதுசெய் குவையே! 5



*(தனதன தான தனதன தான)*

அருள்மிகு பால அடியனைக் காக்க
விரைவினில் வாஎன் வினையினைத் தீர்உன்
கழலினைப் பாடிக் கவிதைகள் கூறி
மெழுகென வாகி உருகினன் ஐய:
உனதரும் ஓவிய வுருவை மாட்டி
எனதிலில் போற்ற இயைந்தனன் வேட்கை
அருள்வதுன் பாரம், அடியனும் வீரம்
செறிநல யாக்கை அடைந்திட வாழ்த்து!
முனிவரும் தேவர் முழுவதும்
கனிவுடன் போற்றும் கருணையம் வேலா! 6

*(தான தன்னன தன்னா தந்தானா)*

ஆவி நன்குடி ஐயா வந்தருள்!
கூவிச் சொல்லினன் கோலா வந்தருள்!
ஏர கத்துறை ஏந்தால் என்முனம்
சீரு டன்வர தேவே அன்புசெய்!
யாரும் என்றனுக் கிங்கிலை என்பதால்
மாறா மல்எனை மன்னவ காத்தருள்!
பாடல் செய்ததைப் பார்த்தே
ஈடில் நற்பரி சீந்தருள் வேலவா! 7

*(தானன தந்தன தானன தன்னனா)*

ஆவது நன்மைகள் ஆகஎ மக்கிவண்
நோவது இல்லையே நோற்பது கந்தனின்
தீதறு புண்ணிய தெய்வநா மங்களே!
போதவிழ் இன்னிதழ் கொண்டுபு னைந்தநல்
மாலைகள் எம்மிறை அம்கழல் சூட்டுவேன்
காலையும் பின்வரும் நண்பகல் மாலையும்
ஆறுநற் காலமும் வேறுபல் இல்லமும்
ஆறுமு கன்நலம் அன்புடன் காத்திடல்
தேறுக நீமனம் சிந்தித்து
மாறுப டும்பகை மண்ணிலே புக்குமே! 8

*(தானா ஈனதன தந்தன தானா)*

ஏனோ இனுமெனைக் காத்திட வில்லை
வானோர் வணங்கிடும் வள்ளல் வேலா!
கூவும் குயிலுடன் கோலம் காட்டும்
வாவி நிறைந்திடும் ஏரக ஈச
நாளும் உனதடி நத்திடும் யானும்
ஊனப் படுவது உன்தனக் காமோ
சூழும் இருளெனச் சுற்றிடும் மாற்றை
வீழும் படிஅடி: வெம்பகை வீழ,
ஞான ஒளிதிகழ் நான்மறை போற்றும்
மோனத் தவமிகு வேல்கொடு வாஅவ்
வீனப் பகையினை இற்றிடு
கானக் குறத்தியின் கள்வஎன் வேலனே! 9

*(தான தந்த தான தந்தா)*

ஏர கத்தின் ஈசன் தன்னின்
சீர்மி குந்த பாதம் சென்னி
காதல் கொண்டு சூடிக் கொண்டேன்
ஏது மில்லை தீது மிங்கே!
வாழி என்று வேலன் கஞ்சம்
தாழ்ந்து சொன்னார் வீழ்ந்த தில்லை
ஞான அப்ப: நான்ம றைக்குள்
காணும் மார்க்கம் வேணு மென்றேன்
வாக்கு நன்றென் றாக
நீக்கென் அச்சம் ஆக்கம் தந்தாய்! 10

**கட்டளைக் கலித்துறை**

தந்தாய் எனஉனைச் சண்முக வேலவ சார்ந்ததனால்
எந்தையும் தாயும் இனிமையும் நட்பாய் இருப்பவனே
கந்தா கடம்பா கருணா நிதியே கவிஞனெனை
முந்தி முனம்வந்து காக்கும் குருவே முழுமுதலே! 11



முதலே நடுவே முடிவே அறிவின் முழுப்பிழம்பே
முதலும் நடுவும் முடிவும் இலாத முழுப்பொருளே!
நிதமும் கவிமலர் நின்கழல் சூடும் நிறைந்தசெல்வம்
இதமாய் எனக்கருள் ஏரக இன்மலர் ஏற்றருளே: 12

அருளே பழுத்த அரிய கனிவே அடியனுடைப்
பொருளின் பொருளே பொலிவின் பொலிவே
புகழ்புரிந்த
திருவின் திருவே செழுமைசெய் வாழ்வே
தினமுமெனைச்
சுருதி சொலச்சொலும் சுப்ர மணிஎன்
துணைநலமே: 13

துணைநல மேஎன் துணிவே துணிவின் துலங்குதிரு
கணையே எனதுபா விற்கு! பகையைக் கலங்கிடச்செய்
தணலே: எனையாள் தயவே தருமம் தனைநிறுவும்
புணையே குருவே புகழ்ஏ ரகத்துப் புகழ்துரையே! 14

துரையே முருகா துயர்தனை நீக்கத் துணிந்ததிரு
மருந்தே மணியே மரகத மேஎன் மனநிறைவே!
குறையிரந் தோரின் கொடியதுன் பங்கள்
விலக்கிடுவோய்
மறையின் கருவே மயில்மீ திவரும்ஓர் மன்னவனே! 15

ஏனென நாதி யிலாதவ ருக்கும் இரங்கிடவே
தானென வந்தப யந்தரும் சண்முக! சங்கரனார்
கோனென மெச்சு குருபர என்றன் குலவிளக்கே!
மானெனும் வள்ளியை ஏற்றருள் ஏரக மங்களனே! 16

மங்கள னேமால் மருகனே மானவள் வள்ளியம்மை
கொங்கைக் களபக் குணமிகு சாந்தில் குளிப்பவனே!
தங்க மயில்மீ திவர்ந்துவந் தென்நோய் தவிர்ப்பவனே!
சிங்கார வேலவ சிக்கல் அரசுன் திருவருளே! 17

ஏரக ஈசன் இணைமலர் போற்றி எழுத்தசைசீர்
சீருற வைத்துத் தினம்தினம் பாக்கள் செயுந்தவமே
பேறெனப் பெற்றேன்! பிறிதினி நோயும் பெரும்பகையும்
வேரற வீழும் விரைவுகொள் வெற்றியை வேல்பெறுமே! 18

விரைவுகொள் வெற்றியை வேல்பெறு மேஇன்று மேதினியில்
புரைகொளும் அஞ்ஞானப் புண்கொள் அசுரன் புகுந்துடலம்
திரைநிறை செந்திற் பதியில் அசுரர் திணறிடுவர்
மறையவர் வாழ்த்திட மங்கையர் பாடிட வாகையதே: 19

தேறுக என்றன் சிறுமனம்! தெய்வத் திருமறைகள்
ஆறினில் காவிரி யாகியே நாளெலாம் அஞ்சலிசெய்
ஆறு முகன்நற் றுணையுண் டதனால் அலமறற்க
கூறும் திருஏ ரகஇறை வன்கழற்(கு) அஞ்சலியே! 20

**வண்ணம்**

***(தான தானன தானானா)***

ஏலோ லம்மறை இன்மொழிவாய்
சீல நங்கையர் சிந்திடவே
மாலே பற்றிட மாந்தினையோ
வேலா என்தமிழ் வேட்டனையே! 21



ஏற்றாய் என்றனின் இன்பாவே
மாற்றாய் வந்திடும் மாப்பகைக்கே
கூற்றாய் வந்திட மாட்டாயோ
நோற்றோர் நோவதும் உண்டுகொலோ! 22

ஓகோ என்றமு துன்முன்னம்
பாகு தண்டமிழ்ப் பாட்டிசைத்தேன்
நோக நீஎனை விடுவாயோ
போகம் தந்தருள் புண்ணியனே! 23

ஏற்றம் மிக்குடை இல்லத்தை
மாற்றில் லாமலே வழங்கிடுக
தோற்ப துன்றனின் தொல்புகழை
மாற்றும் வேலவ மறந்திடற்க! 24

கற்றுப் பாடமே காவென்று
பற்று வைத்தியான் படித்தபினே
நற்ற வத்துனை நான்நினைந்து
வெற்றி பெற்றனன் வேல்வாழ்க: 25

வாழ்க வேலவன் வண்கழல்கள்
வீழ்க நெஞ்சக வெற்றுப்பேய்
சூழ்க வாகையே சுப்ரமணி
தாழ்க சென்னிவேல் தண்டையின்மேல் 26

மேலாம் வீடருள் வேலன்தான்
தோலா நல்லிசை சூட்டுங்காண்
ஏலா நெஞ்சமே ஏற்றாய்காண்
பாலா வாஎனப் பண்பாடி! 27

பாடி வந்தனன் பாராயோ
மோடி வள்ளியி டஞ்செய்யும்
ஈடில் வேலுடை ஈசாகேள்
நாடி னேனுனை நான்வீடேன்! 28

நான்வீ டேனுனை நால்வேதம்
தான்தே டுந்திரு சற்குருவே
வான்வேண் டேனுன் வாடாத்தாள்
தான்வேண் டுந்திரு சண்முகனே! 29

ஏர கத்துறை ஈசன்தான்
சீரா ரண்டங்கள் செய்தான்காண்
தேர்ந்தோர் வேலவன் சேவடியைப்
பாரில் வாழலாம் பாங்கோடு. 30

### இன்னிசை வெண்பா

பாங்கோடு வாழ அருள்புரிவாய் பண்டிதனே
மாங்கனி யாலுன் மகிமையெலாம் இவ்வையம்
பாங்கா அறியவைத்தாய்! பக்தர்களைக் காத்தருளும்
ஓங்காரன் உன்துணை உண்டு! 31

உண்டொரு தெய்வம் எனஉணர்த்தி அத்தெய்வம்
தண்டா யுதனெனச் சாற்றியே சார்ந்திருக்கும்
அண்டமெலாம் ஆளும் அரசனாம் ஏரகனே
கண்டிருப்பன் கந்தனையான் ஏற்று 32



ஏற்றனனால் என்னெஞ்சில் ஏரகத்தின் ஈசன்றாள்
மாற்றில்லா மாமணியே என்றுணர்ந்து நாற்றிசையும்
போற்றுமால் என்றன் புதுக்கவிதை மாமுருகன்
வீற்றிருப்பான் என்நெஞ்ச வீடு! 33

என்னெஞ்ச வீடே இளங்குமரன் இன்மகிழ்வாம்
கன்னல் கவிமலரும் கற்பகத் தோட்டமாம்
முன்னம்செய் நற்றவத்தால் மூத்தோர்செய்
வேள்வியினால்
என்னகம ஏற்றான் இனிது! 34

இனிதின் இனிதேகாண் ஏரகன் பொற்றாள்
கனிவேட்கும் வேலன் கமல நனியருட்டேன்
நானுண்டேன் உண்டேன் நவிலஒரு அச்சமில்லை
கோனென வாழ்வாம் கொழித்து! 35

கொழித்திடு நெல்வயல்சூழ் கோலமிகு நாட்டீர்
செழித்திடநீர் சேவிப்பீர் செந்திலையன் பொற்றாள்
ஒழித்திடுவீர் உம்பகையை உண்மையிது சொன்னேன்
விழித்திடுவீர் வீடுபெற வே! 36

வேலன் விழுமம் துடைப்பவன் ஏரகச்
சீலன் திருச்சீ ரலைவாய் அசுரனுக்குக்
காலன்! எனஅறி நெஞ்சே கலங்கல்வள்ளி
லோலன் உனதுநண் பன். 37

நண்பன்என் நாயகன் நான்பாடும் முத்தமிழ்ப்பா
உண்பன் உவந்துநிதம் ஓம்என்ற தத்துவத்தின்
பண்பன்இப் பாண்டியன் காவலன் வள்ளியவள்
கொண்கனையே எஞ்ஞான்றும் கூறு. 38

கூறுவது வேலன் குளிர்அமுதப் பொற்கழலே
மாறுபடு வேறுபகை வந்திடுமோ மாநிலத்தில்?
ஏறுநிகர் எந்தை இளைய குமரனெனைச்
சீராக வைப்பான் தினம்! 39

தினம்தினம் யான்புனையும் செந்தமிழ் மாலை
மனமுவந் தேற்றருள்வான் மாமுருகன்! வள்ளி
தினைப்புனத்தள் தன்னைத் திருடும் குறவன்
புனல்மலிஏ ரூரன் புகலு! 40

உலகெலாம் வாழ்த்த உயிரெலாம் உய்ய
உதித்திடும் ஆதவன் கோடி
கலைஎலாம் வீசிக் கருணையம் வாரிதி
காட்டியா னந்தவெள் ளத்தில்
பலஊழி காலமிப் பாண்டியன் இன்புறப்
பண்ணிய விண்ணவர் கோனை
மலிபுனல் ஏரக மன்னனை வேலனை
வாழ்த்துவ தென்பணி யாமே: 41

ஆமேடம் நல்லெருது மீன்நண்டு கன்னி
ஐந்திடத்தே யான்பெறவே ஆறுமுகக்
கோமான் எனக்கருள் தந்தான் குவலயத்தில்
கூறிடவோர் கூற்றொன்றும் இல்லை காண்பாய்
ஏமனமே ஏமனையும் நீவெல்லும் ஆற்றலுளாய்!
ஈசனாம் ஆறுமுகன் ஆணை கண்டாய்
நாமநிகர் ஏரக மாமுருகன்மேல்நவின்று
நாளும் நன்கு வளர்க நனி! 42

நனிநடம் செய்வாய் நலம்பல செய்ய
நவஅவ யங்காண் மனமே!



இனிபயம் ஏனோ இறைவன் வந்தானே
எழில்மிகு பாடலாய் என்முன்!
முனிபுங்கர் சென்னி முடிந்திடும் மௌலி
முருகனின் பொற்றாள் அறிவாய்!
புனல்மலி ஏரூர் புகழ்புரி வேலன்
புனைகழல் காப்பது தானே! 43

தானே வளர்ந்த தனிப்பெருஞ் சோதியைத்
தண்ணார் தமிழ்மேல் அடங்காத
தானே தணியாத வேட்கை கொள்வானை
தடங்கண் குறத்திதிரு வள்ளியம்மை
மானே விரும்பி கிழவுருக் கொண்டஎன்
மன்னனை எந்தையை என்மனத்தில்
யானே இறுத்தினன் இன்பண் சுரந்திடும்
ஏரகன் பொற்றாள் என்துணையே! 44

ஏரகத்து ஈசா இளமயில் ஏறும்
இறைவா எனது குறைதனைக்கேள்
பாரில் சிறந்திடும் ஊர்தியை ஈகவே
பாண்டி யனுக்குநீ பக்குவமாய்
மாரியின் செல்வ: மணிநீ!என் தந்தைஉன்
மார்பில் புரண்டு விளையாடும்
சீராடும் இச்சிறு சேயின் பிழைபொறு
செந்திற் சுதிபதி தேவே! 45

தேவே இனும்நீ சிறுவிளை யாடல்
சிறியே னுடனே செயுமாறென்!
பாவே புனைந்துன் பரிமளச் சீரடி
பாண்டியன் சென்னியில் வைத்தனன்!
கோவே: மறைந்து விளையா டுவதேன்
குமரா விளையா டலுக்கும்என்
கோநீ ஒளிந்திட ஒப்பேன் குணாநிதி
கும்பிட்டேன் முன்வா குதித்து! 46

குதித்துக் குதித்துத் ததித்தோம் ததித்தோம்
ததிங்கிணத் தோமென இன்பச்
சுதியுட னேமயில் ஆடும்! துதிசெய்து
சுந்தர உன்திரு மேனி
பதித்த வைரம்போல் பச்சைமேல் மின்னும்
பரவச வெள்ளத்தில் பாண்டி
விதிபிற ழாப்பாப் புனைந்து வணங்குவன்
வேலா யுதநனி மகிழ்ந்தே! 47

மகிழ்ந்தேன் மனையாள் உடனிருக்க எற்கே
மனமுவந் துன்னருள் தாராய்!
முகில்கிழித் தோங்கும் முழுமதி அன்ன
முகமும்நற் கூந்தலும் பெற்றாள்!
அகில உலகில் அவளினும் நல்லாள்
அறிந்திலன் உன்னருள் என்னே!
தகவுடன் எங்களைக் காத்தருள் சண்முக
சாற்றினன் நின்மலர்ப் பாதம்! 48

நின்மலர்ப் பாதாரம் நிறைந்தசெல்வம் என்றனுக்கு
நிடுழி வாழ்க அடியார்கள்!
என்மலம் எல்லாம் எரித்து சிவயோக
ஈடில் நெறியில் எனைநிறுத்தி
சென்மம் கடைத்தேறச் செய்யும் திருமுருக
செந்தி அரசேநீ வாழ்கவே!
பொன்மலர்ச் சோலைப் பொழில்சூழ் ஏரகப்
பூமாநின் பொன்னடி போற்றியே! 49

போற்றியே செய்தேன் புகழ்புரி ஏரகப்
புண்ணிய நின்மலர்ப் பாதமே
மாற்றலர் அஞ்சிடும் வண்ணம் எனக்குநல்
வாழ்வது தந்தருள் செய்குவாய்!



ஏற்றமே என்றும்எஞ் ஞான்றும் இனிஅச்சம்
எள்ளளவும் இல்லை! உன்னரசை
மாற்றிடச் சூழ்ச்சி வகுப்பவர் தோற்றிட
வந்தருள் தந்துதமிழ் காப்பதே! 50

### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

தேனினைச் சொல்லில் வைத்துத்
தினைப்புனம் காத்த செல்வி!
வானினை வளைத்த நெற்றி!
மயிலினை ஒத்த சாயல்
கானிடை அணங்காம் வள்ளி
கருத்தினுட் புகுந்த எந்தாய்!
கோனென வாழ எற்குக்
கொடுத்தருள் நினது சக்தி! 51

சக்திவேல் கழல்கள் தம்மை
தம்சிரம் வைத்த சான்றோர்
பக்தியால் பெறுவர் பாக்கியம்!
பலன்திகழ் உடல்நற் பாங்கும்!
யுக்தியால் உள்ளத் திண்மை
உரைநலம் மெறுவீர்!எற்கு
முக்தியை முதல்வா தாராய்!
முழுமுதற் கடவுள் போற்றி! 52

கனவினில் வந்தான் கந்தன்!
கண்களும் நிறைந்த நீரால்
எனதரும் குருவின் ஏற்ற
எழில்மிகும் உருவில் வந்தான்!
நனவினில் என்னை நாடும்
நாளதை நவில்க எற்கு!
புனல்மலி ஏர கத்தாய்
புகழ்புரி முருக வேளே! 53

ஏரகத் துறையும் ஈசன்
இணையடி சென்னி வைத்தோம்
பாரினில் எம்மைக் காக்கும்
பாரமும் அவனுக் காமே!
ஊரெலாம் எதிர்த்திட் டாலும்
ஒன்றுக்கும் அஞ்ச மாட்டோம்!
தேருக எனது நெஞ்சே
செயமுண்டு முருக னுண்டால்! 54

ஆலிலை மேல்ப டுத்த
அரியவன் மருக! பட்டு
நூலிழை போலி ளைத்த
நுசுப்புடை வள்ளி கள்வ!
பாலிடை நெய்போ லென்றன்
பாவிடை உறையும் செல்வ!
வேலியாய் எம்மைக் காப்பாய்
வேலவ ஏரு ரானே! 55

ஏரகத் திருந்தே இந்த
எழிலுல கெல்லாம் ஆளும்
சீர்மிகு தலைவா! நின்றன்
திருவடி கோடி போற்றி!
பேறெனக் கருள்க நன்கு!
பிறர்மெச்ச வாழச் செய்வாய்!
தாரணி மார்பா! நின்றாள்
தழுவினேன் கடைக்கண் பாராய்: 56

ஆய்வது செய்யின் பார்மேல்
ஆருளார் தெய்வம் உன்போல்!
மாய்வது செய்யார் மாந்தர்
மனத்தகத் துன்னை வைத்தால்!



காய்வது செய்யும் மாற்றார்
கருத்தினைத் தேய்க்கும் கந்தா!
பாய்வது கவிதை வெள்ளம்
பருகிட ஓடி வாவா! 57

வானவர் துயரம் தீர்த்த
வள்ளலே என்றன் நெஞ்சில்
மோனமாய்க் குடியி ருக்கும்
முதல்வனே! என்றன் பாடல்
கானத்தில் (இ)லயித்து நிற்கும்
கருணையங் கடலே! என்றன்
ஈனமாம் பிறவி போக்க
எனக்கருள் முருகன் வாழ்க: 58

கருத்தினில் கந்தா நின்றன்
கழலலால் வேறே காணாப்
பொருத்தமாம் பொருளைத் தாராய்!
புகழெலாம் உனக்கே: யாரும்
வருத்திடா வாழ்வு வேண்டும்
வகைவகைச் செல்வம் வேண்டும்!
திருத்தணி வள்ளால்! எற்குச்
சிறந்தநற் பரிசில் ஈவாய்! 59

பரிசில்கள் ஈவாய் பாண்டிப்
பரமனே பரவெ ளிக்கண்
துரிசினைக் கடந்த சோதி!
துரியத்தை வென்ற பாட்டு!
கருதிநான் ஒன்று கேட்டால்
கருணைசெய் பரிதி கோடி
சொரிதரும் வெள்ளச் சோதி!
துதித்தனன் நின்க ழல்கள்! 60

நின்கழல் என்சென்னி சூடினேன் மகுடமென
நீடூழி வாழ்க நின்றாள்
என்குரு வாகிஎனை இரவுபகல் காத்தருள்
எனதுகுல தெய்வம் போற்றி
பொன்பொருட் காகயான் புரிகுவன்
தொல்லோசொல்
புகழல்ல காரி யங்கள்?
என்குறை நீக்கியருள் இல்லாமை ஓட்டியருள்
ஏரகத்து வள்ளல் வேலா! 61

வேலவ விண்ணோர்கள் போற்றியே விழுங்கிமகிழ்
விழுப்பொருளே! ஞானத் தேனே!
கோலா கலப்பிரியா குறத்திபின் சென்றவா!
கூற்றையும் எதிர்க்கும் ஆற்றல்
சீலமுடன் ஞாலமதில் மேலதென என்றனுக்குச்
சேர்த்தவா! ஏர கத்தின்
பாலக! பரமனுக் கருள்புரிந்த பண்டித!
பாண்டியன்நோய் தீர்ப்பாய் ஐயா! 62

ஐயாற் றரசர் அரவணைக்கும் ஆறுமுக!
அடியேன்நற் குருவாய் வந்து!
மெய்யாய் விளங்கும் விழுப்பொருளே! வேதாந்தப்
பெருவெளியே! வெளியின் உள்ளே
ஐயமற ஓங்கார மாகியே உலகமெல்லாம்
பாலிக்கும் அருள்வி லாச!
உய்யும் வழிஎனக் குரைத்தருள் உன்கழல்
ஒருநாளும் மறவேன் அப்பா! 63

அப்பாஎன் றுனையழைத்தேன் ஆறுமுகா ஓர்கண்ணால்
அடியேனைக் கடைக்கண் பாராய்!
தப்பாதுன் தீங்கழலே சரணமெனக் கொண்டதலால்
சண்முகனே அறியேன் வேறே!



முப்பாலை வடித்தெடுத்து முருகஉன் சன்னிதியில்
முன்வைத்தேன் மனமு வந்தே!
இப்பால்இப்பா வேற்றே எனதாவல் தீர்த்துவைப்பாய்
ஏரகத்தென் குருவே வேலா! 64

ஆவியிலே நிறைந்துள்ள ஐயனே! அடியேனை
ஆட்கொண்ட ஞான குருவே
பாவியேன் படுதுயரம் பார்க்கிலையோ நிதம்நிதம்
பாவியற்றிப் பகரு கின்றேன்!
தூவியே மலர்கொண்டு தொழுதஎன் ஆசையொடு
தும்பிக்கை தழுவும் இளவால்!
தேவிபரா சக்திஎன் கனவிலே வந்தென்பால்
தேவைநல் லமுதம் என்றாள்! 65

நல்லமுதம் தேவையென நவின்றதிரு நாயகி
நயந்துமகிழ் முருக வேளே!
சொல்லமுதம் தினமும்உன் திருமுன்னே படைக்கின்ற
சொல்லுநன் முறையிற் றானோ
வெல்லற் கரியவள் சொல்லினள் சொன்னதில்
விளக்கத்தை அருள்க வேலா!
வல்லமை பெற்றியான் வாழ்வாங்கு வாழ்ந்திட
வழிசொல்லும் ஏரு ரானே! 66

வழிசொல்லும் ஏரூராய் வண்டமிழ்க் கருள்புரியும்
வள்ளாலுன் திருவைக் கண்டேன்
விழிசொல்லும் ஆனந்தப் பெருக்கினை மிக்கொளியால்
மேன்மையுறத் தடையாய் நின்ற
பழிசொல்லும் வழியெல்லாம் தடுத்தென்னை
ஆட்கொண்டு
பாராட்டும் தாயின் மேலோய்!
பொழிசொல்லும் கருணையாய்! புண்ணியா நின்னடி
பொழுதெல்லாம் சென்னி வைத்தேன்! 67

சென்னியில் உன்கழல் சேர்த்தலும் என்னுள்ளம்
செம்மாந்து நிற்கு தையா!
பன்னியதைப் பாரோர்கள் புரிகின்ற வழியினிலே
பகன்றிட ஒட்டா தையா!
புண்ணியம் அடியேன் பலகோடி யுகமாகப்
புரிந்திட்ட பாக்கி யத்தால்
பன்னிருகை என்னப்பன் பாலிக்கும் பாங்கிதுவோ!
பதவிஇது பெரிதே யம்மா! 68

அம்மா எனக்கு நீ! அப்பா எனக்குநீ!
அழகிய மனைவி நீயே!
இம்மா உலகில் எனக்குற்ற செல்வம்நீ!
என்குழந்தைச் செல்வம் நீயே!
வெம்மாயை வெல்லும் திறம்நல்கும் வேல்நீ!
வேதமும் நாதாந் தம்நீ!
பெம்மான்நீ! பேரின்பம் நல்கின்ற அமுதுநீ!
பிஞ்ஞகன் பெற்ற வேளே! 69

பிஞ்ஞகன் பெற்ற பெருவாழ்வே! சீரடியேன்
பிறவிப் பிணிம ருந்தே!
மெஞ்ஞானச் சூரியனே! மேன்மைக் கிலக்கணமே!
மேதினியில் தீயோ ருக்கும்
அஞ்சாமல் வாழயாம் திண்மை அருள்குருவே
ஆபத்துக் குதவும் நண்பா!
மஞ்சுலா ஏரகத்து மாமணியே! வள்ளிஎன்ற
மரகதம் பொதித்த பொன்னே! 70

பொன்னும்நீ மணியும்நீ பொருளும் நீயே!
பூமிதனில் எனக்குற்ற போகம் நீயே!
கண்ணும்நீ ஒளியும்நீ காட்சி யும்நீ!
கைகள்நீ கால்கள்நீ கரணம் நீயே!



எண்ணும்நீ எழுத்தும்நீ! என்றன் நெஞ்சில்
எழுகின்ற இன்றமிழின் வேட்கை நீயே!
மண்ணும்நீ வானும்நீ! வாழ்வாங் கிங்கே
வாழஎன வைக்கின்ற வள்ளல் நீயே! 71

நீயே எனக்குவழி காட்டிஅருள் செய்வாய்
நித்தநித்தம் என்சித்தம் தடுமா றுங்கால்
சேயென்றன் கண்திறந்து சிறந்த பாதை
தெளிவிக்கும் திறம்மிகுந்த தந்தை யொப்பாய்
பேயான என்னாசைப் பித்து நெஞ்சுள்
பிரபுநீ ஒளிமயமாய் இருப்ப தாலே
நாயேனும் உய்ந்திடுவேன்! சாக மாட்டேன்
நான்மறையின் உட்பொருளே கந்த வேளே! 72

கந்தவேள் கருணைவேள் காம வேளைக்
கண்டித்த முக்கண்ணர் கண்ட நல்வேள்!
சொந்தவேள் என்றனுக்குத் துணையாம் நல்வேள்
தூயதண் டமிழுக்கு மனமி ரங்கி
சிந்தைமிக மகிழும்வேள் செகத்தில் என்னைத்
தேடியே ஆட்கொண்ட சிறந்த ஓர்வேள்!
மந்தமா ருதம்வீசும் ஏர கத்தில்
மணிமுடிவைத் துலகாளும் முருக வேளே! 73

முருகவேள் எனவென்றன் மனமு வந்து
மொழிந்திடவே மோனநிலை கூடு தையா!
திருவெல்லாம் கிடைத்தியான் செகத்தின் மீதில்
செயக்கொடி நாட்டிடுவேன்! செந்த மிழ்க்குப்
பருவரல் வாராமல் பாது காப்பேன்!
பாண்டியன்யான் பலகாவி யங்கள் சொல்வேன்!
பெருகுபுனல் ஏரகத்தின் ஈசன் தந்த
பேரானந் தக்கடலில் குளிக்க லானேன்! 74

கடல்தனில் குளிப்பதில் காயந் தன்னைக்
கௌவிய நோயனைத்தும் நீங்கும்! ஞானக்
கடல்தனில் மூழ்கிடக் கந்தா நின்றன்
கருணையாம் பேரமுதம் கிட்டும்! விண்ணார்
தடமதில்சூழ் திருஏர கத்து றையே
தந்தைக்குக் குருவான சக்தி பாலா!
கடையேனுக் கும்வாழ்வு தந்த வள்ளால்
கமலமலர் நின்பாதம் மறப்பேன் சொல்லோ? 75

மறப்பதிலேன் மணிவண்ணன் மருகா நின்றன்
மாறாத பேரருளை! அவச ரத்தில்
சிறுதவறு செய்தியான் பணியாற் றுங்கால்
செய்தபிழை தனைஅரணாய் மாற்றிக் காட்டி
புறமிருந்தும் உள்ளிருந்தும் காக்கின் றாயால்!
புண்ணியனே என்னகைம் மாறு செய்கேன்!
இறப்பறியேன் இரப்பறியேன் எந்தாய் நின்றாள்
துறப்பறியேன் ஏரகத்துத் துரையே வாழ்க! 76

துரைவாழ்க ஏரகத்தி லிருந்தே இந்தச்
சுழ்புவனம் அத்துணையும் ஆளும் சீமான்!
நரைதிரைமூப் பில்லாமல் நான்வா ழற்கு
நல்லவழி சொல்லுகுரு நாதன் வாழ்க!
பிறைமுடியில் கொண்டவன் பெற்ற பிள்ளை!
பிரமனுக்கு மந்திரத்தைச் சொன்ன தாத்தா
குறைவறும்என் நெஞ்சகத்துக் கோயில் கொண்ட
குகன்எளிமை வியப்பினிலும் வியப்பே யம்மா!77

அம்மம்மா ஆறுமுகக் கடவுள் என்னை
ஆட்கொண்ட பேரருளை என்ன வென்பேன்
சும்மாயான் திரிந்துமிகச் சுழன்று வாழ்ந்தேன்
சுப்பிரம ணியன்என்னை அழைத்தே மேலாய்



இம்மாநி லம்வியக்க எழுதச் சொன்னான்
எழுதியதும் மந்திரமென் றறிந்தேன் இல்லை
பெம்மானின் பெருமைஎல்லாம் சொற்க டங்கா
பிழைபுரிந்த சேய்காக்கும் தாயின் மேலான்78

தாயினும் மேலானான்! தந்தை மிக்கான்!
தண்ணளியில் தனக்குவமை இல்லா வேந்தன்!
சேயனையேன் செய்பிழைகள் பொறுத்துக் கொள்ளும்
திருமலியும் பூமியினும் பொறுமை மிக்கான்
தூயதிரு வழிஎன்முன் தோன்றச் செய்து
துணையாகக் கைகொடுத்து நடத்திச் செல்வான்!
ஆயகலை அனைத்தையும்யான் அறியச் செய்யும்
ஆசிரியர் ஏரகத்தான் அறிந்தேன் மாதோ! 79

அறிந்திடயான் வைத்தனனால் அறிப வெல்லாம்
அறிவுடனே தெளிவினையும் அமைதி தந்து
செறிந்தநல் ஞானமும் அருளும் சீலம்
சேர்ந்ததிரு குருவனையான் செந்தூ ரானே!
பொறிகரணம் பழிபாவம் போந்தி டாமல்
போதாந்தம் அருள்கின்ற நாதன்! மேலாம்
மறைதெரிந்தோர் மனக்கோயில் எழுந்து நிற்கும்
மாமுருகன் ஏரகத்தான் மலர்த்தாள் வாழ்க! 80

### நேரிசை வெண்பா

ஏரகத்தாய் நின்றன் மலரடி என்றுணையே
பாரில் பருவரல் வாராதே — தேர்மயில்மேல்
ஏறிஎன் முன்னே இனிதே வருகுவையால்
மாறிலா வள்ளிகண வா! 81

வாசிமயில் மீதேறி என்பால் வருகுவையால்
மாசில் மணியே! வளவயல்சூழ் — தேசமாம்
ஏரகத் தாளும் இணையற்ற வேந்தேஎன்
சீரருமை வெண்பா தெளிந்து! 82

தெளிந்த மதியருளும் செந்தி லரசே
குளிர்ந்த பொழில்சூழ் குகனே! — ஒளிந்த
பகைகண்டு வாகைகொண்ட பாண்டியன் வேந்தே
தகவுடனே வாழஅருள் தா! 83

அருள்தா அடியேற் ககில உலகின்
பொருள்தா தவம்யான் புரிய — மருள்தான்
எமையணு காத எழில்உயர் வைத்தா
உமைமக னேநீ உவந்து! 84

உலகெலாம் வாழ உதிக்கின்ற சோதி
பலகுலாம் இன்பப் பரிதி — கலைஎலாம்
சேர எழுந்த திருச்சோதி என்னையன்
ஏரகத்தன் தாளின் இயல்பு! 85

இயல்பார் களிமயில் என்கண்ணின் முன்னே
மயக்கமறத் தோன்றிமகிழ் விக்கும் — செயமே
முருக னடியார்க்கு மூன்றுலகும் நாளும்
குருதொழுவார்க் கேதே குறை! 86

குறைவற்ற செல்வம் குகனே! தெளிந்தேன்
நிறைவுற்ற என்றன்நல் நெஞ்சம் — மறைகற்ற
மூதறி வாளர்சொல் மூத்த முழுப்பொருளே
தீதறு செந்தில் திரு! 87



திருவுடையார் பெற்ற திருச்செல்வர்! ஞானக்
கருவுடையார் போற்றுங் கவிஞன்! — பருவரல்
வாராமல் வாழ வரமருள் சண்முகன்
ஏரகனுக் கேதே இணை? 88

இணையில் மரகதம்மேல் மாணிக்கம் என்றன்
புணையாகத் தோன்றும் புதுமைக் — கிணையாக
ஒன்றில்லை! ஈசன் உயர்ந்தகழல் வாழ்கவே
நன்றுபுரி வேலனருள் நாடு! 89

நாடென் மனமேஓர் நான்மறையும் நாளிரவாத்
தேடித் திரியும் சிவகுமரன் — வாடா
மலர்த்தாளை! வாழ்வு வளமாகும் உன்னை
உலகம் புகழும் உயர்ந்து! 90

**வெண்செந்துறை**

உலகெலாம் தந்திரு உச்சிமேற் கொள்பொருள்!
கலையெலாம் போற்றிடும் கந்தனை! தந்தையை!
பலகா வியங்கள் பயனுடன் பாடியே
குலவிடு வேன்யான் கொழிதமி ழாலே! 91

கொழிதமி ழாலெனைப் பாமழை கொட்டிடச்
செழுங்கரு ணைத்திரு செந்திலோன் செப்பினன்!
விழுமம் துடைக்கும் வினையிதைச் செய்தனன்
தொழுமவர் நோய்தீர் துணைவ னவனே! 92

துணைவன் முருகன் தொடர்ந்தெனைக் காப்பவன்!
இணைஇல் மயில்மீ திவரும் பெருமகன்!
கணைகொள் திருமால் மருகன் கவிஞனென்
புணையெனப் போந்தவன் பொற்கழல்
போற்றுவாம்! 93

போற்றுவாம் தண்டை புனைகழல் வேலனை!
மாற்றில் மணியை மரகத மாமயில்மேல்
வீற்றிருக்கும் என்பெரும் வெற்றித் திருவினை!
கூற்றை உதைக்கும் குகன்பொற் கழலே! 94

குகன்பொற் கழலினைப் போற்றுவாம் காதலால்!
இகபர மீதில் இதுசுகம் என்பதால்
பகலவன் கோடி பரிணமிக் கும்ஒளித்
தகவுடை வேலன் தண்ணளி நீழலே! 95

ஏனோ முருகா இனுஞ்சோ தனைதான்
யானோ மனவலி வற்றவன்! என்னிடம்
தானோ வலிவுகொள் சோதனை! வள்ளியான்
மானோ எனக்கொடு வாராய் மகிழ்ந்தோ! 96

மகிழ்ந்தென் கவியமு துண்டருள் மன்னா!
உகிர்காற் கொடியோய்! உலகம் புரப்போய்!
தகவுடைத் தென்றேஎன் சாற்றுப்பா தோளில்
மிகமகிழ்ந் தேற்குநின் மேன்மை வியந்தேனே! 97



தேனே! தெவிட்டா அமுதே! திடமுடைஎன்
ஊனே! உயிரே! உயிரின் ஒளியே!ஓர்
வானே! சுடரே! சுடரின் இயக்கமே!
யானே எனதென் பொருளே இறைவனே! 98

ஏரகன் எந்தை எனைநா டிடும்பகை
பாரகம் புக்கிடப் பண்ணும் துணையவன்
தேரகம் எற்கவன்! சீரார் கழற்றுணை
தாரக சூரனும் தாங்கிடு வானோ? 99

வானோர் துயர்தீர்த் தருள்செயும் வள்ளல்தான்
தானே விரும்பி எனைத்தடுத் தாண்டனன்!
யானோ தவஞ்சிறி தேனும் அறிகிலேன்!
கோனே எனையாட் குகவே லவனும். 100

பரமன் குருவாம் முருகன் வருவான்
உருகி மனமே உரைக்க இதையே!
பெருகிடும் சித்தி சுருங்கிடும் துன்பம்
குருதுணை யுண்டால் குறைவே இலையே! 101

**திரு ஏரகத்து இறைவன் பல்வண்ணத்தந்தாதி முற்றிற்று**

உ

# மயிலணி அந்தாதி

## கு. முத்துக்குமாரசுவாமிப்பிள்ளை

### காப்பு

குயிலினங் கூவுதண் சோலைகள் மல்கிக் குதூகலங்கொள்
மயிலினம் மன்னிய மாண்பதி வாழ்ந்து வரமளிக்கும்
அயிலினர்க் கோர்தமிழ் அந்தாதி பாடுதற் கார்கயிலை
எயிலினன் ஈன்றருள் ஏரம்பன் இன்கழல் ஏத்துவமே.

### நூல்

வாவியுங் காவியும் மாண்புசெய் சுன்னை மயிலணிவாழ்
தேவியுங் காமுறு தேசிக னாய்வரு சீர்க்குமர!
ஆவியுங் காயமும் ஆக்கமும் ஈந்துநல் ஆர்வமொடு
மேவியுன் காலிணை வேண்டுவன் நாளும் மிகப்பணிந்தே. 1

பண்டே அறந்தனை நால்வருக் கோதிய பாண்டரங்கன்
தொண்டே அளித்துநற் சுன்னையிற் றோன்றிடுந் தோமறுதீங்
கண்டே அனையநங் காங்கேயன் தூய கழல்சிரமேற்
கொண்டே அவன்சொலக் கேட்டனன் கோதில்
குடிலையையே. 2

குடிலை ૮ பாக் குரவன் தலைமிசை குட்டினை,தொல்
படியவ லந்தரு பள்ளையைப் பற்றினை, பாரதனில்
கொடியவ னாஞ்சிங்கன் கொன்னுயிர்மாயக் குமைத்தனைமெய்
அடியவர் உன்புகழ் ஆய்ந்திடு வாரோ அருநிலத்தே. 3



அரும்பு மலர்பறித் தர்ச்சனை ஆர்வமொ டாற்றகிலா
இரும்பு மனத்தினன் எவ்வா றிறையருள் எய்திடுவேன்
சுரும்பு மருவிடுஞ் சோலைகள் சூழ்தருஞ் சுன்னைதனில்
விரும்பு மறியிவர் வேலா விரைந்தருள் வீட்டினையே. 4

வீட்டை அகன்றுயர் விண்ணினை மேவிடும் வேட்கையொடு
காட்டை அடைந்து கடிமனம் ஆளுங் கடுந்தவத்தீர்
ஆட்டை அருவா கனமாக் கிடுஞ்சுன்னை ஆறுமுகன்
பாட்டை அசைத்துநற் பத்திகை கூடுவீர் பாரினிலே. 5

பாரினை யேமிகப் பாழ்த்திடும் பண்யிலப் பாதகனாம்
சூரினை யேவென்று சொர்க்கத்தைப் போற்றிடத் தோல்வியறு
போரினை யேபுரி வேலவன் பொற்றலம் பூதலத்தில்
பேரினை,யேநனி பெற்றிடுஞ் சுன்னைப் பெருந்தலமே. 6

பெருகி அணிபெறுஞ் சுன்னை மயிலணிப் பேர்த்தலத்தின்
அருகில் அமருமெய் அன்பர்கள் அண்டிநல் ஆர்வமுடன்
உருகி அடல்மிகும் ஊழ்வினை ஓவி உயரமிர்தம்
பருகி அமர பதந்தனைப் பற்றுவர் பண்புடனே. 7

பல்லுங் கழன்றுகட் பார்வையும் அற்றுப் பலங்குறைந்து
பொல்லுங் கரமுறப் போக்கியம் போகப் பொலிவிழந்து
சொல்லுங் கரந்திடச் சோபையும் மங்கச் சுடுநிலந்தான்
செல்லுங் கதியிலி சித்தியைச் சேர்ந்திடச் செய்குவையே. 8

செப்போதும் பூட்கை புரத்திடுஞ் சீதரன் தென்மருகற்(கு)
அப்போதும் பூணுநல் ஆரமும் பூண்டுநல் அன்புடனே
முப்போதும் பூசை முறைதவ றாதுசெய் மூதறிஞர்
இப்போதும் பூஞ்சுன்னை ஈண்டுவர் இன்புற எங்கணுமே. 9

எழில்பல பாவிடுஞ் சுன்னையில் வாழ்வுசெய் எங்குகனை
மொழிபல பாடிக்கும் முத்தமிழ் மூழ்கிய மூதறிஞர்
பொழிபல பாடலைப் போற்றிப் புகன்று புரையுளவாம்
பழிபல பாற்றிப் பரன்தாள் பரவுவர் பாங்குடனே. 10

பாவார மாகிய பைந்தமிழ் மாமறைப் பாணிமிகு
தேவார மாதிய தோத்திரப் பாக்களைத் தேற்றமுற
நாவார மாலற ஓதிடும் ஞானிகள் நானிலத்தில்
தேவார மாற்றவொண் சேவடி சேருவர் சீலமொடே. 11

சீல மிகுதொண்டர் சீருடன் சுன்னைத் திருத்தலத்தில்
நீல மிகுத்தொளிர் மஞ்ஞை இவர்ந்திடும் நிர்மலர்க்குக்
கோல மிகுநல் விழவினை யேசெய்து கோமளஞ்சேர்
ஞால மிகுபுகழ் நாட்டித் துதிப்பர் நலம்பெறவே. 12

நலமுறை வந்தனை நாடிப் புரிந்துயர் நானிலத்திற்
குலமுறை வண்ணிக்குங் கோதையர் நித்தமுங் கூடிமகிழ்
தலமுறை வன்பொழில் தாவளஞ் சார்ந்திடுஞ் சண்முகனை
வலமுறை வந்து வரம்பல வேண்டுவர் மண்ணகத்தே. 13

மண்ணும் பரவும் மயிலணி வாழரன் மாமகற்குப்
பண்ணும் பயனும் பழுத்த புராணத்தைப் பாவலர்கள்
எண்ணும் பரிசுடன் ஏமமொ டோதி எழில்பொலிய
நண்ணும் பரமத்தை நாட்டுவ ரேயிந்த நானிலத்தே. 14

நிறையருள் வேட்கை நிலவுநல் நெஞ்சுடன் நித்தியமும்
பிறையருள் வேணியன் பெற்றருள் பாலகன் பீடுறுமெய்
இறையருள் வேலவன் இன்கழல் எய்திட ஏத்திடுவோர்
பொறையருள் வேடம் பொலிந்து பொருந்துவர்
பொற்றலத்தே. 15

தேறாத வல்லரக் கன்தனைத் தேற்றிய சேயினையே
பாறாத வல்லிசை பண்ணொடு பாடிப் பணிந்திடுவோர்
மீறாத வல்வினை வேதனை வீட்டியம் மேலுலகில்
மாறாத வல்லபத் தோடின்பம் எய்துவர் மன்தலத்தே. 16

மன்னா மகிதல வாழ்வினி லேயுயர் யாண்பிழந்த
என்னா மயம்மிகு யாக்கையை எற்றிவிட் டேகுதற்கு
முன்னா மலத்தெழு மும்மல மாசதன் மொய்ம்பகற்றி
பொன்னா மலகம் நிகர்த்திடச் செய்சுன்னைப் புண்ணியனே! 17



புண்ணிய மேமிகு பூம்பதி புக்குப் பொலிந்துநிதம்
எண்ணிய மேடம் இவர்ந்திடுஞ் சேயை இராப்பகலாய்த்
திண்ணிய மேலவர் தேற்றும் மயிலணிச் சீர்த்தலத்தில்
நண்ணிய மேதையர் நல்லருள் நாடுவர் ஞாலத்திலே. 18

ஞாலம் நவிலுமெய் அன்புடைக் கண்ணப்ப நல்லடியார்
போலம் பலவனைப் போற்றா எமைத்தான் புகல்மறலி
காலம் கடுகக் கயிறெறிந் தாவி கவருமுனம்
வேலம் பிகைசேய் வினைதவிர்த் தோம்ப விரைகுவனே. 19

விருந்து விரைந்து மிகுத்திடும் சுன்னை விசாகனையே
திருந்து முறையில் தியான சமாதியிற் சீருடனே
இருந்துன் திருவடி என்னகத் தேவைத் திரும்பிறவிப்
பெருந்துன் பிணைநனி போக்கிடும் பண்பினைப்
பெற்றிலனே. 20

பெற்றேன் அளவில் பிறவிகள் பெற்றுப் பெருந்துயரை
உற்றேன், அவனியில் ஒன்றா தொழுக உபாயநனி
கற்றேன், அடியிணை அன்றி எதையுங் கனவிலும்நான்
பற்றேன், அடைவதற் கொன்றிலை வேல! இப் பாரிடத்தே. 21

தேய்மை அகற்றிடுந் தேசார் மயிலணித் தென்பதிசார்
பாய்மை அடக்கிய பைந்தமிழ் வேலவன் பாதமலர்
வாய்மை அகத்தொடு வாழ்த்தி வணங்கி வழுவிலவாந்
தூய்மை அதிமிளிர் தொண்டர்கள் என்றிடத் தோன்றுமினே. 22

தோரண மும்மலர்த் தொங்கலுந் தோமறத் தொங்கவிட்டு
ஆரண முஞ்சொலும் பூரண கும்பம் அமைத்தொளிரும்
வாரண முஞ்செறி மாதவன் மாண்புசெய் வான்குகன்றன்
பூரண மும்பொலி பூங்கழல் போற்றுவிர் பொற்புறவே. 23

பொன்னிடம் பெண்ணிடம் மண்ணிடம் பூண்டிடும்
பொற்பிலிச்சை
உன்னிடம் பெட்டுநர் உள்ளன்பிற் கூறினை உய்க்குமென்றே
என்னிடம் பெய்திடும் ஐயமென் நெஞ்சினை ஈர்க்கின்றதால்
மன்னிடம் பெற்றிடும் வான்சுன்னை வாழரன் மாமகனே! 24

மகமா தனைப்பெறும் வச்சிர பாணி வணங்குசுன்னை
முகமா றுடைய முருகக் கடவுளை முன்னிநிதஞ்
சுகமா யுறழ்வில சுவர்க்கத்தை யேபெறச் சூக்குமமாஞ்
சகமா யையறச் சமாதிகை கூடுவர் சற்சனரே. 25

சற்றும் பலனின்றித் தாரணி தன்னிற்பல் சாத்திரங்கள்
கற்றும் பழிசேர் கடையேன் கதிதனைக் காண்தலந்தான்
மற்றும் பதிகளுள் மாண்புகள் வாய்ந்து மகிதலத்தில்
முற்றும் பழமர மோங்குதண் சுன்னை முதுதலமே. 26

முதுமறை வாழ்த்தும் முதல்வனும் முன்னாள் முறைதவறிப்
பொதுமறை வாகப் புலவனைப் போற்றாது போகவவன்
புதுமறை வாசம் புகுத்தி நலியப் புடைத்துதைக்க
மதுமறை வாக மடுத்திடும் மாப்போல் மயங்கினனே. 27

மனமுறு வாதனை மாற்றிடும் மாண்புறு மாதலமாம்
புனமுறு வான்சுன்னை பொற்புற வாழ்வுசெய் புங்கவன்றன்
வனமுறு வார்கழல் வாழ்த்தி ஒருவுவன் மாசுதருந்
தினமுறு வாழ்க்கையில் தீவினை தேக்குஞ் சினத்தினையே. 28

சினக்கே டுறுமடி யார்மனத் தேறிதஞ் சேர்ந்திடுவெவ்
வனக்கே டுறுக்கும் வயமா வளர்சிவை மைந்தவினி
உனக்கே டுடைமலர் மாலையை நித்தம் உவந்தளிக்க
எனக்கே டுறுமந் திரம்நனி ஈக இறையவனே! 29

இறையவர் மாசில் குடிலையை வேண்டிட ஈந்தருளும்
பொறையவர் மாலினைப் போக்கிடுஞ் சுன்னையிற் புங்கவனாம்
நறையலர் மாலையை நான்றிடச் சாத்தி நலம்பெறவே
மறையவர் மாண்புசெய் மால்மரு கோனடி வந்திப்பனே. 30

வருமா முகில்தவழ் வான்தோய் மலையம் வதிந்துறையும்
ஒருமா முனிவனுக் கொண்தமிழ் ஓதிய ஒப்புயர்வில்
திருமா முருகனைச் சுன்னைத் திருத்தலத் தேயடைந்து
கருமா முறைகெடக் காதலித் தேத்து கதிபெறவே. 31



கதியினை யேதரும் நல்லை மயிலணிக் காப்பொலிசந்
நிதியினை யேசார் நிமல முருகனை நேர்ந்துபல
நிதியினை யேபெற்று நீள்புகழ் ஈட்டி நிலவுதற்கு
மதியினை யேநனி வாய்த்தில னேயிந்த மானிலத்தே. 32

மாலும் வரனும் வணங்குதண் சுன்னையில் மால்மருகன்
வேலும் வழங்கிவெவ் வெற்பினைத் தூள்செய்து விண்ணவரை
ஆலும் வரமயில் ஏறி அளித்தனன் அன்னவர்க்குப்
பாலும் வடிமது வுந்தினை மாவும் படைக்குவனே. 33

பண்ணீர் வயங்குநற் பாக்களைப் பாங்குறப் பாடிடுவோர்
உண்ணீர் வளமுள கூபங்க ளோங்குமிவ் வொண்தலத்தில்
மண்ணீர் வளிவெளி வன்னியென் றேநின்று மாண்புசெய்யும்
புண்ணீர் வடிவேற் புலவனைப் போற்றுவர் பூதலத்தே. 34

பூதலம் நீடிய பூஞ்சுன்னை மேவிய பொற்புளவாந்
தாதலர் நீபநற் றாரினைத் தாங்கிடுந் தண்கடல்சூழ்
மாதலம் நீல மணியணி மார்பன்றன் மாண்புநிறை
காதலம் நீவிக் கழலிணை ஏத்து கருமனமே! 35

கரும்பு மலிவுறுங் காப்பொலி சுன்னைக் கவின்தலத்தில்
இரும்பு மனமுடைச் சூரனை ஈறுசெய் எம்மிறைவன்
அரும்பு மலர்கொண் டருச்சிக்கும் ஆர்வம் அகத்துடையீர்
விரும்பு மருவரம் வேலோ னிடம்நனி வேண்டுமினே. 36

மின்போ லிடைவள்ளி தெய்வானை விள்ளும் விசாகனையே
பொன்போ லிலங்கும் உனதருள் பெற்றுப் புவியினிலே
என்போ லியரும் எழில்வாழ் வடைந்திட இவ்வுலகில்
உன்போ லிணையறு தெய்வமும் உண்டுகொல்? ஓதுதற்கே. 37

ஓடுந் திருவை உலப்புடைத் தாமென ஓர்ந்துநிதந்
தேடுந் திருத்தான் சிவனார் அருளிய சிற்பரனாய்
ஆடுந் திருவுடைத் தோகையின் மீதமர்ந் தன்பருளங்
கூடுந் திருமைக் குகனவன் என்றுகை கூப்புதுமே. 38

புதுமைக் குடிநிறை பொற்பார் மயிலணிப் பூம்பதிசார்
பொதுமை குலவிடும் போந்தார் தலத்தினிற் புண்ணியஞ்சேர்
பதுமை குறவள்ளி தெய்வானை பண்புசெய் பண்ணவனை
மதுமை குறைத்திட மாண்பொடு நித்தமும் வாழ்த்துவமே. 39

வாடி அலைந்துன் வடிவுடை மேனியென் வன்மனத்தே
தேடி அறிந்திலன், தேயங்கள் யாங்கணும் தேம்பலுடன்
ஓடி அலுத்ததும் ஓர்ந்திலை; சண்முக! உன்கழலைக்
கூடி அணைகுவ தென்றுகொ லோவென்று கூறுதியே. 40

கூறு முகமா றுடையதன் சுன்னைக் குமரனையே
பேறு முடைய பெருஞ்செல்வ மென்றுநற் பீடுடனே
தேறு முகம்பெறு வாய்சுரர் தந்துயர் தீர்த்தளித்த
ஆறு முகனல தில்லையென் றென்றே அறைகுமினே. 41

அல்லும் பகலும் அறுமுக வேலவன் அட்சரத்தை
வெல்லும் பரிசில் முறைபட வேயதை வேட்கையொடு
சொல்லும் பணியினில் துன்னுவர் வானுயர் தூம்பனசெந்
நெல்லும் பலித்திடுஞ் சுன்னைக் குகனடி நேசமொடே. 42

நேச மனமொடு நித்தமுஞ் சுன்னை நிலவுமுரு
கேசற்குச் செய்யுநற் பூசனை சேர்ந்திடுங் கீர்த்திசெறி
கோச மதிற்றிகழ் தீவளி அப்புக் குவலயமா
காச மெனவொளிர் கங்கைமைந் தன்கவின் காலிணையே. 43

காலன் றருக்கிக் கயிறெறிந் தாவி கவருமுனம்
நீலன் றருகுற வள்ளிதெய் வானையை நீவிவரும்
ஆலன் றருந்தி அமரரைக் காத்திடும் ஐம்முகன்றன்
பாலன் றகவொடு பாலித் தருளுவன் பண்புடனே. 44

பண்டு மறிதரு பண்புடை வள்ளியைப் பாங்குடனே
கண்டு மயங்கிக் கடுவிழை வுற்ற கவின்முருகன்
மிண்டு மசுரரை வீட்டியங் கேகய மீதமர்ந்தென்
மண்டு மலத்தெழு வாதனை நீக்குவன் மண்ணினிலே. 45



மந்தாரை மல்லிகை செந்தா மரையிரு வாட்சிநிறை
நந்தா நலமிகு சுன்னையை நாடிடும் நன்முருகா!
எந்தாயும் எந்தையு மாயெமக் கின்னருள் ஈந்திடுபொற்
சிந்தா மணிக்கொரந் தாதியைச் செப்புவன் தென்மிகவே. 46

தென்பால் அமர்திருக் கேதீச் சரன்பெறு சேயினையே
அன்பால் அடியிணை ஆர்வமொ டர்ச்சித் தவர்தமக்கு
இன்பால் அமுதம் இனிதளித் திம்மையில் எக்கணமும்
என்பால் அரும்பும் மலத்தினை நீப்பன் எழுமையுமே. 47

எல்லார் வளமுற ஏந்தி இரங்கிடும் எம்மிறையின்
நல்லார் வனச மலரடி நாடிடும் நல்லடியார்
சொல்லார் வமுடன் துதிக்கவி சோர்வறச் சொல்வதன்றிக்
கல்லார் வடுவுடைக் காவியம் ஒன்றையுங் காதலொடே. 48

க்காமரம் விம்முறப் பாடும் பிரமரங் காமுறுநன்
மாமரம் விஞ்சுதண் சோலை வளஞ்சால் மயிலணியில்
தோமரம் வில்வாள் அரவிந்தம் ஆதிய தோன்றிடவே
பூமரம் விள்ளிடப் பொற்புற வாழ்வுசெய் புண்ணியனே! 49

புள்ளும் வருடையும் மேவு மயிலணிப் பொற்றலம்வாழ்
கள்ளும் வழியுங் கடம்பணி வேலவன் காத்தெமையாட்
கொள்ளும் வரையவன் கோலக் குரைகழல் கொண்டுநிதம்
உள்ளும் வகைபெற ஓவா தவன்புகழ் ஓதுதுமே. 50

ஓதும் இறைவன் ஒளிநெறி யேநின் றொழுகுமன்பர்
சூதும் இடர்தரு வாதுந் துடைத்துத் துகளிலவாம்
போதும் இலையும் புனலுமிட் டேநிதம் பூசைசெய்வோர்
ஏதும் இடும்பையும் எய்தலுண் டோ?எம் இறையவனே! 51

இறையவன் பாணியை யாங்கணும் ஓங்க எடுத்துரைக்கும்
மறையவன் பாடுற வான்சிறை வைத்திடும் மாமுருகன்
நிறையவன் பாலின் நிமல னெனவைகி நித்தியமும்
உறையவன் பாடி எனமிளிர் தண்சுன்னை ஒப்பிலதே. 52

ஒப்புயர் வில்பல உத்தமர் வாழ்ந்துநல் ஊக்கமொடு
தப்புக ளில்லாத் தகைபெறு நூல்களைத் தந்ததனாற்
செப்பும் புலவர் திகழ்பதி என்றித் திருநகரை
இப்புவிச் சான்றோர் இசைபட என்றும் இயம்புவரே. 53

இயம்பல வேங்கும் விழவினைச் செய்யுநர் இன்புறவே
நயம்பல வேதரும் நல்வரங் கள்தனை நன்களித்துச்
சயம்பல வேபெறு சூரரைச் சாய்த்திடுஞ் சண்முகன்தாள்
கயம்பல வேயொளிர் காப்பொலி சுன்னையின் காவலனே. 54

காவலர் சேவைசெய் காப்புடைச் சுன்னைக் கவின்தலத்திற்
பாவலர் சேறுகொள் கந்த புராண படனமதில்
நாவலர் சேடுறக் கூறுரை கேட்டு நயப்புடனே
சேவலர்ச் சேயடி செவ்விதிற் கண்டு தெளிகுவரே. 55

தெண்ணீர்ச் செறுவளச் சுன்னை மயிலணிச் சீர்த்தலத்திற்
பண்ணீர் செறிபதிப் பாடலைப் பண்ணொடு பாடிமகிழ்
கண்ணீர்ச் செயிரியர் காதலித் தேத்திடுங் கண்ணியரே!
நண்ணீர் செயிருடை மார்க்கங்கள் ஒன்றையும் நன்னிலத்தே. 56

நன்றே ஒளிவளர் சுன்னையில் மேவிடும் நற்றளிவாழ்
குன்றே ஒளித்திடுஞ் சூரனைக் கொன்ற குமரனுக்கு
ஒன்றே ஒருமொழி ஊழ்வினை ஓட்ட உளமதனில்
நின்றே ஒருவா தருள்தனை நீட்டுவை நீணிலத்தே. 57

நீடு மயிலணி நீப நிழலினில் நித்தியமும்
ஆடு மயிலினில் ஆர்வமொ டேறி அழகுறவே
பீடு மணியும் பெறுவே லவன்புகழ் பேசிடுவோர்
வீடு மடைய விரைவினில் ஏகுவர் விண்ணுலகே. 58

விண்ணவர் எய்திடும் வெந்துயர் நீங்க விரைவினிலே
பண்ணவ னென்னுநற் பாண்டரங் கன்தரு பாலனையே
மண்ணவர் என்றென்றும் மாண்பொடு சுன்னை மயிலணியிற்
புண்ணியம் எண்ணிப் புரிகுவர் பொற்புறு பூசனையே. 59



பூசனை யேபுரி பொல்லா வரம்பெறு புன்மைமிகு
நீசனை யேமுன் நிலைகுலைத் தாண்டருள் நின்மலனாம்
தேசனை யேதினஞ் சேவைசெய் திவ்விய சேத்திரந்தான்
வாசனை யேமிகு சுன்னை மயிலணி வண்தலமே. 60

வஞ்சம் புரிந்திடும் மானிடர் வாழ்ந்திந்த மானிலத்தில்
நஞ்சம் புதைந்த நலமறு சொற்களை நாணமின்றி
நெஞ்சம் புரைபடக் கூறுவர் சுன்னை நிமலனது
கஞ்சம் புரையடி காதலொ டெண்ணார் கனவிலுமே. 61

கரணம் நனிசுத்தி எய்திக் கருது கதிபெறவே
அரணம் நசித்த அரன்மக னைச்சுன்னை ஆலயத்திற்
சரணம் நயந்து சகமாயை நீத்துச் சகத்தினிலே
மரணம் நணுகுமுன் மாணடி சேர்குவர் மண்ணினிலே. 62

மண்ணிய பாவ மனைத்துங் குவிந்த மனத்தகத்தே
நண்ணிய பாவகம் யாவையும் நீக்கி நலந்தருவாய்
தண்ணியற் பாணி தயங்கு மயிலணி சார்தலத்திற்
புண்ணியம் பாரிக்கும் பூசுரர் போற்றிடும் புண்ணியனே. 63

புரந்தான் எரித்த புராந்தகன் பொன்னடி போற்றிலனாய்ப்
பரந்தான் எனமுனர்ப் பன்னிச் செருக்கு பகவனது
சிரந்தான் எறிந்த சிவனார் அருளுஞ் சிலம்பனையே
கரந்தான் எடுத்துக் குவித்து வணங்கிடக் கற்பியுமே. 64

கற்பக லாதநற் கன்னியர் சூழுங் கவின்தலமாம்
பொற்பக லாததண் சுன்னையில் வாழ்ந்துயர் பூதலத்தில்
வெற்பக லாதவெஞ் சூரனை வீட்டிய வேலனுக்கே
அற்பக லாதநல் அர்ச்சனை ஆற்றுவர் ஆவலொடே. 65

ஆளுந் திறனில் அவுணனை வீட்டி அமரர்தமை
வாழும் படியருள் மாலோன் மருகனை மாண்புடனே
பாழும் மனனே! பணிகிலை மேற்கதி பற்றுதற்குத்
தாழும் சிரத்துட னேதுதி சுன்னைத் தலத்தினிலே. 66

தக்கவன் பாலின் கடவுள ராகுந் தகுகுகன்வாழ்
பக்கவன் பாலினில் ஓங்கு மயிலணிப் பைந்தலத்தில்
மிக்கவன் பாலினர் மாலையை ஏந்திநல் வேட்கையொடு
புக்கவன் பாதத்தைப் போற்றிவெம் மாயையைப்
போக்குமினே. 67

போக்கும் வரவும் புகாத அறுமுகப் புங்கவனைத்
தேக்கும் வளஞ்செறி சீர்சால் மயிலணித் தென்தலத்தில்
தாக்கும் வலியுடைத் தாபத்தைப் போக்கித் தகைமைபெறக்
காக்கும் வரையவன் காலிணை ஏத்து கவியுடனே. 68

கவிநனி உட்கொளுங் கற்றவர் போற்றுங் கவினுறுநல்
திவிநனி உட்குந் திருவார் மயிலணித் தீந்தலத்திற்
சவிநனி உற்றிடுஞ் சண்முகன் சாற்றினிற் சார்ந்துநிதம்
அவிநனி உண்டுநல் ஆக்கத்தை அண்முவர் ஆசையொடே. 69

ஆயாமற் போகம் அனைத்தையும் அன்புடை அண்டர்தமக்(கு)
ஈயாமற் போக்கிடும் ஏழைமை யேமிகும் ஈனரையே
ஓயாமற் போற்றிடும் ஒல்லாமை ஓவியிவ் வொண்புவியில்
வீயாமற் போதம் விளைக்குதி சுன்னையில் வேலவனே! 70

வேலா! சரணம்! விசாகா! சரணம்; விமலனருள்
பாலா! சரணம்! பரனே! சரணம்; பவனிவரு
சீலா! சரணம்! சிலம்பா! சரணம்; சிகண்டியுயர்
காலா! சரணம்! கடம்பா! சரணம்; கவின்தலத்தே. 71

தேம்பா மலர்த்தொடை சேடுறக் கட்டுந் திவிமகளைக்
கூம்பா மலைப்பரங் குன்றினில் வேட்ட குமரனுக்குத்
தீம்பா மலிந்திடுஞ் செந்தமிழ் நூல்களைச் செய்துநிதம்
ஓம்பா மனிதரை எவ்வா றுரைப்பன் உலகினிலே. 72

உலவாத பேரின்பம் ஒன்றிட வேண்டிடில் ஊழ்வினைதான்
கலவாத பேரருள் கைவரப் பெற்றுக் கரும்புலன்கள்
நிலவாத பேற்றினைப் பெற்றுயர் சண்முகன் நீள்கழலைப்
பலவாத பேதத்தைப் பண்ணா தடைகுவிர் பாரினிலே. 73



பாரினி லேகொடும் பாவ மலத்தினைப் பாற்றிலனாய்த்
தூரினி லேவிழுந் தோன்தனைப் போலுந் துணையிலிக்கு
நேரினி லேயுன்தன் நீள்கழல் காட்டி நிறையருள்செய்
ஏரினி லேமிகு சுன்னையில் வாழ்வுசெய் எம்வரனே! 74

வடமொழி யான்றவர் தென்மொழி நாவலர் வாழ்ந்துநிதம்
இடமொழி யாததண் சுன்னையில் ஈண்டிய எம்புலவன்
மடமொழி யாவல் லசுரனை மாய்த்து மகிதலத்தில்
அடமொழி யாவண் டரைநனி காத்தனன் அன்புடனே. 75

புறந்தனை யேமொழி புன்மையைப் போக்கியிப் பூதலத்தில்
அறந்தனை யேவிளை ஆறக் கரத்தை அகத்திருத்தி
மறந்தனை யேதவிர் மாசறு மானந்த வாழ்வுதருந்
திறந்தனை யேநிதம் சேர்த்திடு வாய்சுன்னைத் தெய்வதமே! 76

மேன்மை மிகுசைவ மெய்நெறி யேநிதம் மேம்படச்செய்
பான்மை மிகுபண் ணவர்தமைக் காத்துப் பகர்சுவர்க்கக்
கோன்மை மிகுத்திடக் கோபதிக் கீந்த குமரனையே
யான்மை மிகவிட ஏத்த இசைகுவன் இம்மையிலே. 77

இம்மை இருவினைப் போகம் புசித்தே இளைத்துநிற்கும்
எம்மை இரும்பிற விக்கடல் நீந்த இசைந்திரங்கி
அம்மை இருளகல் ஆனந்த வாழ்வினை அண்மிமலச்
சும்மை இரும்பொறை நீக்கிடு வாய்சுன்னைத் தூமணியே! 78

தூய மறைதனைச் சொற்றிடுந் தோமறு தொண்டரினங்
காய மனமொழி ஆதிய வற்றினைக் காணிக்கையாய்
நேய மரபுடன் அர்ப்பணித் தேயவன் நீள்கழலை
மாய மலமறுத் தேயுளத் தேத்துவர் மாண்புடனே. 79

மாண்ட மயிலணி மாதலத் தேவலம் வந்துவரம்
வேண்ட மயல்தொலை வேலவன் மென்பதம் வேட்கையொடு
பூண்ட மனிதர் புகல்சென்ம சாகரம் பூரணமாய்த்
தாண்ட மதிவலி தந்திடு வாயித் தலத்தினிலே. 80

தற்பதி யாகிய சுன்னை மயிலணி சார்தலமாம்
புற்பதி ஓங்கிடும் பூம்பொழில் சூழ்ந்து பொலிந்தொளிரும்
பொற்பதி வாழ்ந்திடும் பூர்விக வேலனைப் பூசைசெயும்
அற்பதி றந்திகழ் எம்மையும் ஆளுவன் அன்புடனே. 81

அன்பே உருவுகொள் ஆன்றவர் வாழ்ந்துநல் ஆர்வமுடன்
இன்பே உதவும் உடல்பொருள் ஆவியை ஈந்துபெருந்
துன்பே உறைந்திடுந் துட்டப் புலன்களின் துப்பறுத்து
முன்பே உளவினை முற்றையும் நீக்க முயலுவனே. 82

முயலகன் என்றிடும் பூதனை முன்னர் முதுகொடித்து
மயலகன் றென்றும் வணங்கிடச் செய்யு மரன்மகனாம்
அயிலகல் எற்கண் குறவள்ளி காந்தன் அடிமருவ
வயலகல் எட்டி வழிபடு மின்கள் வரமுறவே. 83

முத்தித் திறம்பெற முட்டில்லை நெஞ்சே! முருகனுக்குப்
பத்தித் திரமுடன் பால்பழம் வெற்றிலை பாக்குடனே
தித்தித் திடுஞ்செந் தினையிடி தேனொடு தேக்கியருள்
சித்தித் திடும்வரை சேவடி யைத்தினம் சிந்தியுமே. 84

சிந்தனை அற்றிரு திட்டியும் அற்றுச் செவிடுபடும்
மந்தனை அண்டி மரணம் வருந்தறு வாயினிலே
வந்தனை அன்பொடு மாலற வாற்றி மலத்திலெழு
பந்தனை அற்றிடப் பண்ணுக சுன்னைப் பரதெய்வமே! 85

தென்னை மரமுயர் தீம்பொழில் தேங்கிடுஞ் சீர்த்தலம்வாழ்
சுன்னை மயிலணிச் சுப்பிர மண்ய சுவாமியையே
முன்னை மலவினை முற்றும் மொசித்துயர் முத்திபெற
என்னை மயலற நோக்கியென் நெஞ்சில் இருத்துவனே. 86

இருவினைப் புண்ணிய பாவத்துக் கூடாய் இனிப்பிறவிக்
கருவினைப் புக்கவக் காயம் எடாது கவினுறுநல்
திருவினைப் புல்லுந் திருவடி யைத்தினஞ் சேர்ந்திருந்தால்
வருவினைப் புன்கண் வருத்திடு மோசுன்னை வாழ்குகனே! 87



குகனே! சரணம்! குமரா! சரணம்;வெங் கூற்றுதைத்தோன்
மகனே! சரணம்; உமைசேய்! சரணம்; வலவன்மரு
மகனே! சரணம்; வனவள்ளி தெய்வானை மால்கொளாறு
முகனே! சரணம்; சரணந்தண் சுன்னை முருகையனே! 88

முருகா! வடமலை மாமகள் மைந்தா! முராரியினன்
மருகா! வடிமலர் வான்சுன்னை மன்னிய மாமணியைப்
பெருகா வலொடு பிறவிப் பிணக்கதன் பீழைதுடைத்(து)
அருகா வனந்த சுகத்தினை அண்முவர் அன்பர்களே. 89

அஞ்சம் புகுந்திடும் அன்பர்கள் சூழ்தரும் ஆலயத்தில்
நஞ்சம் புசித்து ஞயம்படத் தேவரை நன்களித்து
பஞ்சம் புரந்திடுஞ் சுன்னைப் பதிசூர்ப் பகைவனையே
தஞ்சம் புகுந்தனன் தாள்பெற வேயித் தரணியிலே. 90

தரமோங்கு மாடங்கள் சார்ந்திடுஞ் சுன்னைத் தளியினிலே
மரமோங்கு மாதலம் வாழ்ந்திடும் நஞ்சுடை மாசுணத்தின்
குரலோங்கு மாவொலி கேட்டுக் கதறும் குருகினங்கள்
சிரமோங்கு மாறுநின் றேங்கிப் பயந்து திகைத்தனவே. 91

வேண்டும் வரங்களை மெத்த வழங்கிடும் வேலனையே
மீண்டும் வழிபட்டு வெம்பவங் கூர்பிற விக்கடலைத்
தாண்டும் வகையினைத் தானறிந் தன்னவன் தாளிணையைப்
பூண்டும் வணங்குமின் புண்ணியம் பூரித்துப் பொங்கிடவே. 92

வேதங் களைத்தான் விளங்குதல் வேண்டி விரைவினொடு
பாதங் களைத்துதி பாண்டரங் கன்தரு பாலகன்தான்
பூதங் களைக்கொடு சூரனைப் போக்கிப் புலவர்தமக்(கு)
ஏதங் களைக்களைந் தேந்திப் புரந்தனன் ஏமுறவே. 93

வேதிய ராய்ந்திடும் வேதங்கள் நான்கும் விரைந்தளித்த
ஆதிய ராயொளிர் ஆயிரநாமன் அருள்குகனைப்
பூதிய ராய்நிதம் பூசித்துப் போற்றிடும் பூரியரும்
ஓதிய ராகி ஒளிருவ ராமென ஓருமினே. 94

ஒரூரும் ஓர்குல முந்தா னிலான்தரும் ஒண்புதல்வன்
தேரூரும் ஓவியச் சீரினைக் காண்குபு செல்லுமுயர்
பாரூரும் ஓதியர் பாங்குடன் சேர்தலம் பாரினிலே
காரூரும் ஓடைகள் காமுற ஓங்குங் கவின்தலமே. 95

மேகத்தை யேநிகர் மென்குழ லேயுடை மெல்லியலார்
போகத்தை யேநிதம் போற்றி அலைந்திடும் புல்லியர்கள்
சோகத்தை யேநனி துன்னுவர் அம்மைச் சுகந்தருநல்
ஏகத்தை யேயினி தெய்தில ரேயிறை எண்ணுதற்கே. 96

எல்லா மனிதரும் என்றுங் குமரனை ஏத்திநனி
சொல்லா மறைநெறி சோர்வறத் துன்னித் துகளுளவாம்
பொல்லா மறவினை போக்கித் திவிதலம் போவதற்கு
வல்லார் மதித்திடும் வான்பதி தான்சுன்னை வண்பதியே. 97

பத்தித் திறஞ்சேர் பழமுனிக் கேமுனர்ப் பைந்தமிழைத்
தித்தித் திடச்சொலுஞ் செவ்வயிற் சேந்தனைச் சேமமுறு
முத்தித் திரத்தை முடிக்குமும் மாசினை முன்பகற்றிச்
சித்தித் திடும்வரை சேத்திரத் தேசென்று சேவியுமே. 98

சேவற் பெருங்கொடி யுஞ்சிகி ஊர்தியுஞ் செவ்வயிலுந்
தேவப் பெதும்பையுஞ் சேல்விழி வள்ளியுஞ் சேர்ந்துனக்கு
ஏவல் பெரிதயர் ஏரினைக் காணுற எந்தனுக்கு
ஆவல் பெரிதுண்டு சுன்னையில் வாழும் அறுமுகனே! 99

கரங்கள் எடுத்துக் குவித்து வணங்கிக் கணப்பொழுதிற்
புரங்கள் எரித்த புராந்தகன் பெற்ற புலவனையே
மரங்கள் எழில்செய் மயிலணிப் பேருடை மாதலத்தில்
வரங்கள் எமையடை யும்வகை வேண்டுவன்
வாழ்க்கையிலே. 100

மயிலணி அந்தாதி முற்றிற்று



உ

# மாவை யமக அந்தாதி

## பூ. பொன்னம்பலப்பிள்ளை

### காப்பு

#### கலித்துறை

உலகு பரவு புகழிலங் காபுரத் துச்சியதாய்
இலகுபொன் மாவைக் குகன்மே லந்தாதி யிசைக்கமதி
நிலவிய வேணிய ருண்மத யானையை நெஞ்சில்வைத்து
மலர்விருப் பாற்புனைந் தென்னாவி லென்றும் வழுத்துவனே. 1

### நூல்

திருமா திருமா லருடொழின் ஞானந் திகழுருவத்
திருமா திருமா சுதரே கலைகுரு சேதனக்க
திருமா திருமா ணடியே யடைந்த சிறியனுளந்
திருமா திருமாவை யந்தாதி முற்றச் சிகாவளரே. 2

காவணங் காவணங் கார்கொடி மேழியர் கற்பகப்பூங்
காவணங் காவணங் காற்றன் மறையே கமலைநெருக்
காவணங் காவணங் காட்டிய மாவைக் கவிகுறையா
காவணங் காவணங் காந்த மறைத்துங்க தாரகமே. 3

தாரகந் தாரகந் தோய்நீரிற் றானவர்ச் சாய்த்திடுவி
தாரகந் தாரகந் தப்பொழின் மாவைத் தலையவனே
தாரகந் தாரகந் தைக்கடந் தீச்சினஞ் சாய்த்துனடைந்
தாரகந் தாரகந் தாழ்குக தாகழுற் றாமரையே. 4

தாமரை தாமரை சந்தனச் சாரற் சயிலகற்பத்
தாமரை தாமரை சாளச்செய் மாவைய சக்கிரியத்
தாமரை தாமரை சானாய மால்விடைச் சந்த்ரமுடித்
தாமரை தாமரை நாண்மலர் காட்டுஞ் சரண்முடியே. 5

சரணஞ் சரணஞ் சரவினின் றான்மயி றாங்கிடவஞ்
சரணஞ் சரணஞ் சரந்தொடுத் தாரருள் சத்தியிற்குஞ்
சரணஞ் சரணஞ் சரசூர னைத்தடிந் தாய்நினருட்
சரணஞ் சரணஞ் சரசெழு மாவைய தந்தருளே. 6

தந்திர தந்திர டானவர் நேருஞ் சமரில்விண்ணோர்
தந்திர தந்திர நாயக மாகித் தருவருக்குத்
தந்திர தந்திர யாம்பக சாமி தருகுமர
தந்திர தந்திர வாமாவை யீரென்றன் பானனுகே. 7

பானலம் பானலம் பட்டிட னீக்கிப் படுத்ததுகோ
பானலம் பானலம் பாதிய வாட்டிப் பணிதனைநம்
பானலம் பானலம் போருகர் கீற்றுக்கப் பாலுமளிப்
பானலம் பானலம் பாழிகொண் மாவைப் பரைமஞ்சனே. 8

மஞ்சரி மஞ்சரி மால்வரை மங்கை மணாளர்முக
மஞ்சரி மஞ்சரி தோலணி யாளர்க்கு மாமுடித்தா
மஞ்சரி மஞ்சரி மாநே ரதிர்வரை மாவையர்ந
மஞ்சரி மஞ்சரி நீபத்தர் தாண்முடி மாவணியே. 9

மாவரை மாவரை மாய்த்தெழு நீத்த மடித்தசய
மாவரை மாவரை மாணுண வாகு மலைகொடெய்வ
மாவரை மாவரை மாகணத் தார்சுதர் மாவையர்க்கே
மாவரை மாவரை மாண்கவி போற்றி வணங்குவனே. 10

வணங்கு வணங்கு வளையார் வளையினர் மார்பினர்பூ
வணங்கு வணங்கு திரையார் மருகரெம் மாலசல
வணங்கு வணங்கு திகழ்வா றெனுமுரை மாற்றல்செய்தி
வணங்கு வணங்கு பரிவா னுளரென மாவைசென்றே. 11

மாவைய மாவைய முப்புரஞ் செற்றவர் மைந்ததரு
மாவைய மாவைய தாக்கிற் கடிகை வரைநிலைக்கு
மாவைய மாவைய மன்கொள வூண்ஞும லிந்நரிக்கா
மாவைய மாவைய வீதோநா னென்று வருந்தினனே. 12



வருந்த வருந்த வனஞ்சாய் நிழற்பொழின் மாவையிற்றே
வருந்த வருந்த வறார்பணி செய்தி திமைந்தர்கங்க
வருந்த வருந்த யிலம்பர் கழன்மலர் வண்டின்நற
வருந்த வருந்தக வுற்றகண் ணேகண்ணிவ் வானிலத்தே. 13

வானில வானில வும்பொழின் மாவையின் மாணருள்செய்
வானில வானில யம்புகுந் தேத்தல்செய் வாய்மலர்க்கோ
வானில வானில மால்குளிர் நீரெரி வன்னிசல
வானில வானில யப்பொரு ளாமவன் மன்னடியே. 14

மன்றன மன்றன தாழிநும் மேற்ற வருவனசை
மன்றன மன்றன மேமனங் கொண்ட மதியிலிர்கா
மன்றன மன்றன லாக்கினர் சேய்சுர மாமயில்பொன்
மன்றன மன்றன மாவையிற் போற்றுதிர் மந்திரமே. 15

மந்தர மந்தர வோடிசைந் தானெரி வாய்க்கவுச்ச
மந்தர மந்தர ளப்பந் திசையார் மகிழ்ந்தெறிசு
மந்தர மந்தர மாவை விழவு வணங்கினர்சா
மந்தர மந்தர கம்புகு தார்கடென் மாதிரமே. 16

மாதிர மாதிர டானவர் தேரணி வந்தெதிர்சூர்
மாதிர மாதிர மாய்த்தவன் றீர்த்திகை வாரிவல
மாதிர மாதிர வாடுறு மாவையெம் மான்முனவிம்
மாதிர மாதிர யார்த்தமும் வீடுமுன் வந்திடுமே. 17

வந்தனை வந்தனை யானன னீந்த மகாரதநி
வந்தனை வந்தனை யர்க்கக வெம்பசி மாற்றவுள்ளு
வந்தனை வந்தனை யான்மாவை வாழும் வரதனுரு
வந்தனை வந்தனை செய்முடி யும்பவ வல்லியதே. 18

வல்லியம் வல்லியம் பாற்றுரத் துங்குற மாதிதழ்செவ்
வல்லியம் வல்லியம் போர்முலை வள்ளி மணாளகுறை
வல்லியம் வல்லியம் பாட்டெழில் காட்டிய மாவையகை
வல்லியம் வல்லியம் பெற்றிடச் செய்வேன் மலர்க்கையனே. 19

கரத்தங் கரத்தங் கிளர்கணை யோர்மங்கை காதலர்சூ
கரத்தங் கரத்தங் கதமுடை யார்தந்த கந்தரஞ்சா
கரத்தங் கரத்தங் கெழுமாவை யீசர் கதிர்மணிச்சே
கரத்தங் கரத்தங் கொடுத்தா ரிலநர கங்கணமே. 20

கங்கண கங்கண வென்றிரை மாவைக் கடல்குடைந்தா
கங்கண கங்கண மாமுடிப் பூணரைக் கச்சுப்பன்ன
கங்கண கங்கண காலாரி சேய்கழல் காணுமுங்கட்
கங்கண கங்கண நீத்தெய்து மேலுல கத்தின்பமே. 21

கத்தின கத்தின வாயுழ னீக்கிக் கழற்கொகன
கத்தின கத்தின நில்லா தருடி கறையுணவா
கத்தின கத்தின லீவிலங் காரங் கணிசுனைநா
கத்தின கத்தின மாமாவை யாசுரர் காவலனே. 22

காவிலங் காவிலங் கான்மர மார்வரை காவலவே
காவிலங் காவிலங் கற்சிர நீரிற் கடலின்முழங்
காவிலங் காவிலங் கோதோட்டு மாவைய காலன்முன்னே
காவிலங் காவிலங் கிட்டா தொழிகழற் கஞ்சத்தினே. 23

கஞ்சனங் கஞ்சனங் கட்குளுற் றட்டவன் காதன்மரு
கஞ்சனங் கஞ்சனங் கொண்டோன் றிருவடி காணமயக்
கஞ்சனங் கஞ்சனங் கொள்ளா தொழித்தவன் காதலன்காற்
கஞ்சனங் கஞ்சனங் கொண்மாட மாவைநங் காமரனே. 24

காமரங் காமரங் கூரயிற் கண்ணார் கனியெழில்வாய்க்
காமரங் காமரங் கந்திகழ் மாவைய கார்வடவா
காமரங் காமரங் கேசர் மருகநின் கான்மலரே
காமரங் காமரங் கந்தகித் தார்சுத காமகிழ்ந்தே. 25

காமலை காமலை யந்திகழ் மாவைய கன்னலொடே
காமலை காமலை யன்புர சூதனன் கண்ணுதல்பா
காமலை காமலை வந்தோய்நின் றாள்வணங் காவுடல்புக்
காமலை காமலை யாதிய துன்பங் கரக்கவந்தே. 26

கவந்தங் கவந்தங் கொடுத்தான் மருக கடைப்பொழுதே
கவந்தங் கவந்தங் கடிநடஞ் சோரி கறங்கிசையா
கவந்தங் கவந்தங் களுன்முடிச் சூர்ச்செற்ற கையெஃகிலங்
கவந்தங் கவந்தங் கிடர்தீர நன்கு கணித்தருளே. 27

தருக்கந் தருக்கந் தகாரத்தி னாற்றினஞ் சாய்மடவா
தருக்கந் தருக்கந் தரித்தார் சடிலந் தனில்வளரிந்
தருக்கந் தருக்கந் தநன்மல ரார்சுதர் சாருருச்சித்
தருக்கந் தருக்கந் தலமெழின் மாவையந் தானமதே. 28



தானசந் தானசந் தெய்துந் தருமணி தாமரைநந்
தானசந் தானசந் தாமுள வாயினுந் தாபதரேத்
தானசந் தானசந் தப்பரி யாக்கொண்ட சத்திகரத்
தானசந் தானசந் தில்லாருக் கட்ட தரித்திரமே. 29

திரவத் திரவத் தபூணூ ணிலைபூச் செயுள்விரைசந்
திரவத் திரவத் தயலாஞ் சுகப்பெயர் செப்பிடுமு
திரவத் திரவத் திவாவறி யாத குருட்டையுருத்
திரவத் திரவத் திசங்கம மாவைய தீரத்தனே. 30

தீரத்தந் தீரத்தந் தாவள மாமுகன் சிந்திடச்செய்
தீரத்தந் தீரத்தந் துன்போத்து வானவர் சிந்தைவிபத்
தீரத்தந் தீரத்தந் தேமாவை யீரெனச் சிந்தையுறுத்
தீரத்தந் தீரத்தந் தத்துற்று நீப்பன்றென் றிக்கினலே. 31

திக்கையத் திக்கையத் தார்மாவை யாதிப சேரிருட்டந்
திக்கையத் திக்கையத் தங்கொண்ட வற்கொல்லி சேயவது
திக்கையத் திக்கையத் தாதீர வந்தரு தீப்பவக்கொ
திக்கையத் திக்கையத் தாதி நரக திமவட்டமே. 32

வட்டக வட்டக மார்மா வையவருள் வாரிசெல்கு
வட்டக வட்டக மாவோச்சு வள்ளிம ணாளவுரு
வட்டக வட்டக சச்சூர வாரிதி மாவினைய
வட்டக வட்டக நீக்கிக்கொண் மாமயில் வாகனனே. 33

கனகங் கனகங்கை மேல்வரை காவலன் கைத்தெனமிக்
கனகங் கனகங்கை கொண்டவர் கூறக் கடவுளர்பு
கனகங் கனகங் கணக்கைச்செண் டிற்செற்ற சேய்கழற்கோ
கனகங் கனகங்கு லென்மாவைத் தாழ்திய கந்தருக்கே. 34

கந்தவ கந்தவ நீள்பொழில் மாவைக் கடலினன்றி
கந்தவ கந்தவ றாகவுற் றாடிக் கடிமணமு
கந்தவ கந்தவ மேமற வாதுறை கன்னியருக்
கந்தவ கந்தவ னாயுறல் பார்த்தணி கைதலைக்கே. 35

தலைவி தலைவி சனத்திறந் தோர்பினுஞ் சார்ந்தனர்ம
தலைவி தலைவி கசிதா னனமகிழ் தந்துபிணி
தலைவி தலைவி பவமின நேசச் சழக்கிலுறத்
தலைவி தலைவி தனமினு மாவை தொழாதவர்க்கே. 36

தவங்க தவங்க மரனடி காட்டுஞ் சலதியிலா
தவங்க தவங்க ளிறல்பார்க்கு மாவையன் சால்குடமா
தவங்க தவங்க னயன்மா லிடையிருள் சார்தினமெய்
தவங்க தவங்க ளடநோக் கிவாங்கறஞ் சக்கரமே. 37

சக்கரஞ் சக்கரஞ் செய்படை சூன்றணிந் தார்க்கருள்விஞ்
சக்கரஞ் சக்கரஞ் சொல்வார் தமன்பர் தனையவெம்ம
சக்கரஞ் சக்கரஞ் சால்கூற் றுறுமுனர்த் தாவருட்டஞ்
சக்கரஞ் சக்கரஞ் சாரா திருவினை சார்பவத்தே. 38

பவநம் பவநம் பகன்றா ரவளர்ப் பரனருள்வி
பவநம் பவநம் பனம்பிகை சேயருள் பண்பதுசோ
பவநம் பவநம் பரற்காருஞ் செய்தலெப் பாலினுநீ
பவநம் பவநம் வநந்நமம் மாவையிற் பஞ்சகமே. 39

பஞ்சர பஞ்சர ணென்றுழைப் பார்யம பாசர்கைவெம்
பஞ்சர பஞ்சர ணேலரி யாம்பகல் பற்றென்மது
பஞ்சர பஞ்சர மார்பொழின் மாவைப் பதியகடப்
பஞ்சர பஞ்சர சாசைநீக் கென்று பணிந்திலரே. 40

திலகந் திலகந் தவர்தொழு மாவையன் சீரலைச்செந்
திலகந் திலகந் தருநுதன் மாமுகற் செற்றெனுளத்
திலகந் திலகந் தொலைப்பா னமர்ந்தவன் சீரடிதாழ்ந்
திலகந் திலகந் துகிறொலைப் பேயல தென்செயுமே. 41

தென்றலை தென்றலை யார்மா வையிலெற் றெறுதல்புரிந்
தென்றலை தென்றலை விட்டா ரருள்வர்முன் சேர்வர் கருத்
தென்றலை தென்றலை யன்னதுன் பாறல் சிகிமிசையிந்
தென்றலை தென்றலை நோக்கின்றிப் போயநஞ் சிந்தையரே. 42

சிந்துர சிந்துர நேர்பல கூறுவர் தீநெறிந
சிந்துர சிந்துர வாரனை மாவை யனையிமங்க
சிந்துர சிந்துர னாற்பொழி வெற்பனைச் செஞ்சடைநோய்
சிந்துர சிந்துர கத்தார் சுதற்பணி சேதனத்தே. 43

சேதகஞ் சேதகஞ் சந்திகழ் மாவைய தீயவுணஞ்
சேதகஞ் சேதகஞ் செய்வேல ராவணற் செற்றதுரி
சேதகஞ் சேதகஞ் சாய்த்தோன் மருகதித் தித்திடுநஞ்
சேதகஞ் சேதகஞ் சாரா தருணன்றிற் செல்லுகைக்கே. 44



கைக்கிளை கைக்கிளை யாழ்நீக்கிக் கஞ்சக் கழலுறுத
கைக்கிளை கைக்கிளை யார்சாரன் மாவைக் கடவுளுண்ண
கைக்கிளை கைக்கிளை யோன்பொருள் பேசிக் கனையிருளுற்
கைக்கிளை கைக்கிளை முத்தொளிர் காலையிற் காத்தனனே. 45

கார்த்திகை கார்த்திகை யார்குமி டோன்றி கவினநிலக்
கார்த்திகை கார்த்திகை நீர்விழ வோங்கும் கடல்குடைந்துங்
கார்த்திகை கார்த்திகை மீனல வன்சுடர்க் காடுதிருக்
கார்த்திகை கார்த்திகை மாவையற் காண்முத்தி கண்டனையே. 46

கண்டன கண்டன மார்கடன் மாவையைக் காவிசையங்
கண்டன கண்டன மென்மொழி மாப்புனங் காவல்வள்ளி
கண்டன கண்டன கந்தொலைத் தானைக் கடப்பமலர்க்
கண்டன கண்டன மையனைக் காண்டிமோக் கந்தருமே. 47

கந்தரங் கந்தரங் கந்தரங் கந்தரங் காயொலிநே
கந்தரங் கந்தரங் கந்தரங் கந்தரங் காட்டுமாவைக்
கந்தரங் கந்தரங் கந்தரங் கந்தரங் காண்கிலக்கீ
கந்தரங் கந்தரங் கந்தரங் கந்தரங் காட்டுவரே. 48

காடியங் காடியங் கஞ்சூடி. மைந்தனி காயமிலங்
காடியங் காடியங் காட்டிய மாவைக் கடலின்முழுக்
காடியங் காடியங் கைதொழு தேத்திக் கழிக்குதிர்சாக்
காடியங் காடியங் கச்செலுங் கூற்றுவன் கம்பலையே. 49

கம்பல கம்பல னார்மாவை வாசர் கருத்தினுருக்
கம்பல கம்பல னாதி தரவுண்டு காவல்செயிக்
கம்பல கம்பல மாடிதன் மைந்தரிற் காமமயக்
கம்பல கம்பல னாக்குந் திறங்கண்டுங் கைக்கலையே. 50

கைக்கவி கைக்கவி பார்தாங்கு பாண்டிக் கரையொடிலங்
கைக்கவி கைக்கவி தாசரிற் செல்லக் கடனெடுத்தோ
கைக்கவி கைக்கவி னாரணை செய்தவன் காதன்மரு
கைக்கவி கைக்கவி யாற்புகழ் மாவையன் கைச்சத்தியே. 51

சத்தியஞ் சத்தியஞ் ஞானத்தி னால்விர சாசைசுகஞ்
சத்தியஞ் சத்தியஞ் சாற்றெழின் மாவையைச் சார்ந்திடுமா
சத்தியஞ் சத்தியஞ் சாத்தினர் சேய்மலர்த் தாள்பணியாய்
சத்தியஞ் சத்தியஞ் ஞான்றிடு ஞானந் தயங்குருவே. 52

குருத்தங் குருத்தங் கழல்புனைந் தார்சொற் குரவர்நல்வெங்
குருத்தங் குருத்தங் குணவமிர் தம்மை கொடுத்தமறைக்
குருத்தங் குருத்தங் குருமணத் தார்சொற்ற கோமகன்சிக்
குருத்தங் குருத்தங் கிமண்செய் செயுமாவைக் கோகத்தனே. 53

கோகன கோகன கர்க்கன லாற்புரங் கொன்றபெம்மான்
கோகன கோகன கச்சடை யான்றன் குமரனுலாக்
கோகன கோகன கந்தொலைத் தான்மாவைக் கோட்டமருங்
கோகன கோகன கப்பூவும் பொன்னிற் கொளுஞ்சந்தமே. 54

சந்திர சந்திர ளன்னாதி மாமலர் தாம்புலங்க
சந்திர சந்திர ணஞ்செய் மதனம்பிற் சார்ந்துளத்தச்
சந்திர சந்திர மார்மாவை யாதிப தண்மைகுன்றாச்
சந்திர சந்திர வுற்றார் தவிர்த்தித மப்பவமே. 55

தமரத் தமரத் தமரத் தமரத் தகுவனடத்
தமரத் தமரத் தமரத் தமரத் தயலர்பிர
தமரத் தமரத் தமரத் தமரத் தலைவரெற்குத்
தமரத் தமரத் தமரத் தமரத்த மாவையரே. 56

வையக வையக சேந்திரன் பாவை மணாளவுக
வையக வையக லாபிகள் பூவைகள் வன்னிகள்கு
வையக வையக மால்குளிர் காரணி வான்பொழின்மா
வையக வையக நின்கட் பிணித்தி மலங்கெடவே. 57

மலங்க மலங்க நிறைகடல் பார்த்தி மனமயலா
மலங்க மலங்க லிழிசுனை காணிவ் வனநின்றுவிம்
மலங்க மலங்க லணிந்தார் வரைதெரி மாவையிற்பொம்
மலங்க மலங்க ளலர்கய நோக்குதி மாதரசே. 58

மாதங்க மாதங்க வையத்தர் சூரை வணிகனொளிர்
மாதங்க மாதங்க ரத்தயி லாற்செற்று வானவர்விம்
மாதங்க மாதங்க மாற்றிய சேயெல்லி வையத்துற
மாதங்க மாதங்க ணொன்றுதன் மாவையின் மாடறியே. 59

மாடக மாடக வார்மொழிப் பன்மலர் மாலைதொழு
மாடக மாடக வீமாவை நாதர் வரையரற்கா
மாடக மாடக மாவேங்கை பொன்சொரி வார்சுனைத்தா
மாடக மாடக லாவோரை மேவு மகத்துறையே. 60



மகத்து மகத்து மிகுதன்ம மீது மனங்கொழுமே
மகத்து மகத்துய ருஞ்சிந்து மாவையன் வாரிசென்மா
மகத்து மகத்துவ நோக்கிடப் போனபொன் மீண்டிடில்ய
மகத்து மகத்து மடங்குவ தோபடி வார்வித்தமே. 61

வித்துரு வித்துரு மோற்பல மாவையர் மேன்மருண்டா
வித்துரு வித்துரு வத்துய ராட்கறு மோபலகு
வித்துரு வித்துரு வைக்கொலை செய்தரி மின்னிசிநா
வித்துரு வித்துரு வப்பாம் வெறியின் மிகுமையலே. 62

மையனம் மையனம் பாலாதி மாற்ற வனமலர்க்கா
மையனம் மையனம் புங்குறி மாண்டென்று வன்றுயர
மையனம் மையனம் பாய்வயன் மாவை வளநகரெம்
மையனம் மையனம் போருகத் தாட்குச் சிவைகரமே. 63

வைகறை வைகறை யங்கிரி யாற்குற மாதணைத்து
வைகறை வைகறை யார்வேலர் புட்கண மாத்துயிலேல்
வைகறை வைகறை முன்றிரி மாவையர் மால்பிடித்தாய்
வைகறை வைகறை மேற்பக லாவுறு மானிசமே. 64

மானிய மானிய மிக்கத் தனையைநன் மாவையில்விண்
மானிய மானிய மஞ்செய்து மற்றி மறமுகப்பாய்
மானிய மானிய லாராடச் செய்தின மாதியின்று
மானிய மானிய மார்விழ வேத்துமெம் மைக்குநன்றே. 65

மைக்கண மைக்கண வேர்த்தோண் மடமயி லேமருளா
மைக்கண மைக்கண யப்புறத் தந்தவர் மாவைவரு
மைக்கண மைக்கண ணைபூங் குழல்கண்டு மான்றனவி
மைக்கண மைக்கண வுச்சிகீழ் வீழ்வன வாரணமே. 66

வாரணம் வாரணம் பாற்பகை சாய்த்தவர் மாவையுறை
வாரணம் வாரணம் பங்குடை யார்தமை மார்கழித்தெய்
வாரணம் வாரணம் பாலெங்கு மார்கவிர் மானுமுடி
வாரணம் வரரணம் பாடேல்வை யேத்திடின் மாலறுமே. 67

மாலைய மாலைய னீறழ லாடிசேய் மாவைமரு
மாலைய மாலைய கத்தளித் தாய்தென் வளியொடன்றின்
மாலைய மாலைய னாழி குயில்வெண் மதிவருத்து
மாலைய மாலைய தீந்திடின் மாறு மனச்சலமே. 68

சலசஞ் சலசஞ் சரிகஞ்சொன் மாவைத் தரங்கத்துமா
சலசஞ் சலசஞ் சரப்பரி யாக்கொ டலைவவந்தா
சலசஞ் சலசஞ் சிதைத்தருள் வாயெனத் தாளிணைக்கி
சலசஞ் சலசஞ் சிதமற நோக்கநிச் சம்பணியே. 69

சம்பகஞ் சம்பகஞ் சார்சோலை கீலஞ் சலத்துறழ்பா
சம்பகஞ் சம்பகஞ் சாறட மாவைய தானவரஞ்
சம்பகஞ் சம்பகஞ் சாரயன் மான்மறை தாகனன்றுஞ்
சம்பகஞ் சம்பகஞ் சேர்த்தோ யருள்வர சாகரனே. 70

சாகரஞ் சாகரஞ் சாந்திசெய் வார்பவஞ் சாய்த்தலினுற்
சாகரஞ் சாகரஞ் சாத நடேசர் சடைகளநி
சாகரஞ் சாகரஞ் சாத்தினர் சேய்குக சண்முகவி
சாகரஞ் சாகரஞ் சான்மாவைத் தாளம்பு சாதரென்னே. 71

சாதனி சாதனி யாமா லுகுமென் றலையினம்பு
சாதனி சாதனி தார்க்குரைப் பேனன்பர் தம்முள்வன
சாதனி சாதனி லாமாவை நேசத் தலைவன்பாக
சாதனி சாதனி கத்தாற் கிலையித் தலைமண்டலே. 72

மண்டவ மண்டவ றொன்றிற்பல் வேறுசெய் வார்குணந்தே
மண்டவ மண்டவ னந்தெறச் சார்பல்சன் மத்தரின்னு
மண்டவ மண்டவ தைக்கொடி யார்ப்பா வனைச்சொலட்டே
மண்டவ மண்டவ மார்மாவை யன்கா லரவிந்தமே. 73

விந்தர விந்தர நாதஞ் சிவஞ்சத்தி விண்டுயர்கோ
விந்தர விந்தர வார்சடை யார்திரி வேடசிவ
விந்தர விந்தர சாமாவை யீரென்ன விச்சமற
விந்தர விந்தர விச்செற்ற வர்க்கிட்டிர் மெய்வசமே. 74

வசந்த வசந்த முறுமுன் முனிக்கு மறைசொல்குர
வசந்த வசந்த னுடலளித் தார்சுத மாமகத்தா
வசந்த வசந்த தனிகலமுற் றோயிறை வாசததி
வசந்த வசந்த மலரணி மாவைய வாமவென்னே. 75

வாமத்த வாமத்த லோகதெய் வத்திர்நம் மாவையர்தே
வாமத்த வாமத் தயலரன் சேய்மகிழ் மாவெற்புரு
வாமத்த வாமத்த மாவுள தோவென்கை வாளியிற்போழ்
வாமத்த வாமத்த கக்கறை சோர்ந்திங்கு வாவியதே. 76



வாவிய வாவிய வாரலா ரால்வளர் வாலவுரு
வாவிய வாவிய லாழி யரியருள் வள்ளியுள்ள
வாவிய வாவிய வல்லவ வாழவிவ் வூரருளால்
வாவிய வாவிய லோர வுரையருள் வாயவுள்ளே. 77

வாசந்தி வாசந்தி சாந்தஞ்செல் சோலையில் வள்ளிதன
வாசந்தி வாசந்தி யைந்தபெம் மானங்கண் மாவையிறை
வாசந்தி வாசந்தி ரோதய மாலை மலையமலை
வாசந்தி வாசந்தி யானாதி மாற்றன் மனங்கணியே. 78

கணியார் கணியார் கலியரி பாடலர் கண்கண்மயக்
கணியார் கணியார் புகல்வரொத் தேங்குகன் மாவைகடைக்
கணியார் கணியார் கருத்தின்று முற்றிற்றுக் காதிநெருக்
கணியார் கணியார் வலர்யா மிவண்விலக் காந்தினமே. 79

காந்தனங் காந்தனங் கொண்டழித் தான்குறக் கன்னியழ
காந்தனங் காந்தனங் கம்பிணித் தின்னயங் காட்டியசீர்க்
காந்தனங் காந்தனங் கொண்டொளிர் மாவைக் கடவுடார
காந்தனங் காந்தனங் கேட்பன வீவனங் கைத்தத்தமே. 80

தத்தம தத்தம காமாவைக் கோவி றணிற்பணிக்காய்த்
தத்தம தத்தம முந்தினர்க் கூதியஞ் சால்கடன்வே
தத்தம தத்தம ரேசரி னுண்டது சார்கிலர்கைத்
தத்தம தத்தம ரூஉமேனு மிங்கெனல் சங்கையதே. 81

சங்கர சங்கர நாசன் மருமகன் றாசர்சலச்
சங்கர சங்கர வின்றன் றுரைவர சாகரன்வா
சங்கர சங்கரங் காமாவை மாத்திரங் கங்குரைமா
சங்கர சங்கர னன்னயச் சாகர ரத்தியங்கே. 82

தியங்கந் தியங்கந் தநமவென் றோதுமுன் சேர்ந்திடுஞ்சத்
தியங்கந் தியங்கந் தருபொழில் சூழுஞ் சினகரநித்
தியங்கந் தியங்கந் தரமுரண் மாவையன் செஞ்சடையிந்
தியங்கந் தியங்கந் திருநீ றணிந்த சிவநந்தனே. 83

நந்தன நந்தன யந்தோன் மருக ஞமலிசெறி
நந்தன நந்தன மார்தட மாவைய நாதசதா
நந்தன நந்தன ரிப்பரி கூட னடாத்தியவர்
நந்தன நந்தன மேதரு வாய்நய மாவதுவே. 84

மாவலி மாவலி யாண்டறு மோவன்பர் மாமகிழி
மாவலி மாவலி யாவுமின் றேநெஞ்ச மாவலிக்கு
மாவலி மாவலி மாரதம் வந்தின்று மாவையனான்
மாவலி மாவலி யாழ்த்தோன் மருகன்றன் மாதலத்தே. 85

மாதவ மாதவ னூறிட நேரற்றசெம் மாசுணந்தேண்
மாதவ மாதவ வுண்பகற் கோளுடு வாய்த்தறவிம்
மாதவ மாதவ றின்னார்க்க மூழ்கி மருவினமான்
மாதவ மாதவ ணான்மாவை யான்முன் மயற்பங்கமே. 86

பங்கச பங்கச தானந்த மாமலர்ச் சாபகருப்
பங்கச பங்கச மம்புரிந் தார்சுத பண்ணவர்நம்
பங்கச பங்கச வீகாட்டு மாவைய பாலநெருப்
பங்கச பங்கச வாதுளம் வாகிரு பாகரனே. 87

பாகரன் பாகரன் சேய்மாவை யின்மண்பொன் பங்குசன்னி
பாகரன் பாகரன் றன்றுவந் தேகப் பணிந்தகிரு
பாகரன் பாகரன் றூர்தே ரிவண்வரப் பண்ணல்வியப்
பாகரன் பாகரன் னம்புரை கம்பு பணித்தனரே. 88

பணியம் பணியம் புலியன் புலியன் பரதமுடன்
பணியம் பணியம் பரர்க்களிப் போன்சுதன் பண்ணவர்நாப்
பணியம் பணியம் பகத்தோகை வாசி பரித்தவநட்
பணியம் பணியம் பொருமாவை யின்மலர்ப் பாதத்தினே. 89

தத்திமி தத்திமி மூின்னிசை காட்டுஞ் சபையரமிழ்
தத்திமி தத்திமி லானுடை யார்சுதர் தந்தனர்சீ
தத்திமி தத்திமி சைமீ னுறைகடன் மாவைமதத்
தத்திமி தத்திமி சார்வரை யாளர் தயாமிகவே. 90

யாமினி யாமினி கேதன மாவையர் கின்னலுரை
யாமினி யாமினி யத்தரி யார்திறற் கின்னல்புரி
யாமினி யாமினி லத்துகு மான்மகிழ் வென்றுமொழி
யாமினி யாமினி யெல்லினுஞ் சீருறு மெம்மக்கமே. 91

மக்கட மக்கட லான மயல்செற் றவன்னிவெங்கா
மக்கட மக்கட மாறரு மாறெங்ஙன் மாவையன்சே
மக்கட மக்கட லைப்பொடி பெண்செய் வரனையுரு
மக்கட மக்கட ரன்பினின் றேத்த வரும்வித்தமே. 92



வித்தக வித்தக வாதிய மித்தை விடுத்தருண்மே
வித்தக வித்தக மாற்றவுற் றேனினை வீட்டலையேல்
வித்தக வித்தக ராமாவை யாதீனர் வெந்துயர்சாய்
வித்தக வித்தக ரம்வெறி தன்னமி கைக்கம்பமே. 93

கம்பரங் கம்பரங் கொண்மாவை செந்தி கதிரைநல்லே
கம்பரங் கம்பரங் குன்றா வினன்குடி காமரேர
கம்பரங் கம்பரங் காரார் வரைபிற கங்கொளெருக்
கம்பரங் கம்பரங் கூத்தாடி சேயிலக் காமங்களே. 94

காமரு காமரு கற்பக மாவைய காந்தையலார்க்
காமரு காமரு டற்களித் தார்சுத கண்ணபிரான்
காமரு காமரு வாரிச பாதவெங் காலன்முன்னே
காமரு காமரு ளீதிமுந் நான்கு கரத்தங்களே. 95

தங்கம் பதங்கம் படங்கமுங் காட்டிடுந் தையலர
தங்கம் பதங்கம் படாசையிற் றாழ்த றவிர்த்துறநித்
தங்கம் பதங்கம் படேர்மாவை யிற்குளிர்ச் சந்திரமா
தங்கம் பதங்கம் படோற்சவந் தாழ்த றகுபுத்தியே. 96

புத்திரி புத்திரி பான்மயங் காது பொருந்திவிருப்
புத்திரி புத்திரி தோடமின் றேத்தணி போரவுணர்
புத்திரி புத்திரி யச்செய்த மாவையன் பொன்னிமவெற்
புத்திரி புத்திரி கச்சாமி தாளணி பூதியையே. 97

பூதியம் பூதியம் பந்துரம் பல்வகை போமதிறும்
பூதியம் பூதியம் புந்தித்துன் பேகும் புரிவினையூண்
பூதியம் பூதியம் பாரத் தறுமனந் தப்பொருளார்ப்
பூதியம் பூதியம் பார்மாவைத் தாளம் புயாதரன்பே. 98

யாதனை யாதனை யாற்றேட வேண்டு மிதயத்தம்பு
யாதனை யாதனை வாக்கினை தாளன் பியைந்துபணி
யாதனை யாதனை யாயருண் மாவை யிறையவதுய்
யாதனை யாதனை யொப்பிலர்க் கென்ற லெலாந்தருமே. 99

தருமந் தருமந் திருவறு நாளினிற் சாயுமிட்டத்
தருமந் தருமந் தமிக்கெழு நாளிற் றனையருமா
தருமந் தருமந் தொலைவென்றெண் ணாளினிற் சாய்குவர்ம
தருமந் தருமந் திபாய்மாவைச் சேய்பத மானந்தமே. 100

மானந்த மானந்த னந்தா மரைநன் மணியெழில்வி
மானந்த மானந்த மாரம ராவதி மாவையினெம்
மானந்த மானந்த னையர்தந் நாப்பண் வதிதல்கண்டு
மானந்த மானந்த மாக்கட லாடி மகிழ்ந்திருமே. 101

**மாவை யமக அந்தாதி முற்றிற்று**



உ

# முருகரநுபூதி

## உமாபதியார்

### காப்பு

திருமே வியதென் கயிலா சமென
அருள்சே ராவா சலநா தனயில்
முருகோ னநுபூ திமொழிந் திடவே
தருநா ரிவினா யகர்தாள் துணையே.

### நூல்

உலகா திபர்கோ தையுமா பதிநீள்
புலவோ னனுபூ திபுகழ்ந் திடவே
பலநாயகர் பார்வதி தென்பனகா
சலவேலவர் நாமகள் தாள் துணையே. 1

### சரவணபவன் துணை

பூவே மணமே பொருளே யுரைபூங்
காவே சுவையே கருணா நிதியே
கோவே மதியே குணவா ரிதியே
தேவே அரவா சலதே சிகனே. 2

### ஈசன் புகழ்தல் தோத்திரம்

சீலா சரணஞ் செகசோ திமய
வேலா சரணங் கள்விசா கானனுங்
கோலா கலனே சரணங் குமரி
பாலா சரணம் பரிபூ ரணனே. 3

கந்தா சரணம் கயிலா சபதி
நந்தா சரணங் கிரிரா சன்மகள்
மைந்தா சரணஞ் சரணங் கயிலை
விந்தா சரணஞ் சதுர்வே தியனே. 4

சரணம் பரனார் விளிசார் பதமே
சரணஞ் சுரர்பூ சிததா ளிணையே
சரணந் தமியே னிதயந் தனில்வாழ்
சரணஞ் சரணஞ் சிவசண் முகனே. 5

போற்றி மறையா கமபூ சிதனே
போற்றி யெனையாள் பரிபூ ரணனே
போற்றி பழனா புரிமே வரசே
போற்றி சிவமேர் வளர்புண் ணியனே. 6

சங்கம் திருநே மிதரித் தபிரான்
பங்கென் றுரைபெண் டிருபார் வதியும்
தங்குந் திருநா டதுதன் னில்வளர்
செங்குன் றினின்மே வியசே வகனே. 7

### மனமிரங்க

மலையா கியகுன் றுகள்தேர் வடிவுஞ்
சிலையா கையிலோ யிதுசே குமணம்
கலையா கனிவெள் ளனவுங் கருணை
அலையா கிரிமே வியவந் தணனே. 8

### விகாரமடக்க

மோகா மவிகா ரமுனிந் தடியேன்
யோகா தியில்நின் றொளியா முருவ
மோகா னவுமின் பமெனக் கருள்வாய்
நாகா சலமே வியநா யகனே. 9

### அன்னமளிக்க

கனகா சலமுந் தணிகா சலமென்
மனமே யெனவந் துநிறைந் துவளர்
அனதா னவினோ தஅலங் கிருதா
பனகா சலமே வும்பரா பரனே. 10



### பிணி விலக்க

பிணியே உடல்கொண் டுபிலன் றவிறு
மணியே திருவிஞ் சைமருந் தமுதாம்
வணிகே சுரனே சிவமா மலைவாழ்
தணியே திரிலோ கதயா பரனே. 11

### வித்தையுண்டாக

வேதா கமநூல் விவரங் களிதென்
றோதா யறிவா னதுகந் திடவே
நாதா மனநா வினினின் றுலவுங்
கோதா புரிமே வுகுணா நிதியே. 12

### நீதியுண்டாக

என்னா லுனையிப் படியே ளிதமாய்
மன்னா நிதியென் றுவருந் திடுவேன்
என்னான் முடியா துதியங் கிடுமென்
நன்னா கசிவா சலநா யகனே. 13

### பயம் தவிர்க்க

எங்கோ னெனதுள் ளமிருந் துவளர்
பங்கோ னெளியோர் கள்பயங் கரனேன்
றங்கோ லியநா யனையஞ் சலிசெய்
செங்கோ டினின்மே வியசே வகனே. 14

### தரிசனந்தர

பொன்கோ தைசகோ தரியாள் புதல்வி
மின்கோ தைசுதாள் சுதைவேல் மயிலோ
டென்கோ தயவாய் வருநா ளெதுவோ
தென்கோ தையின்மே வுசிரா மணியே. 15

### செல்வமுண்டாக

எந்தா யுமெனப் பறிந்தங் கிருதி
யிந்தா வெனவந் தருளீ கையது
தந்தால் வளர்செல் வமதுந் தணிவோ
கந்தா மணிமோ வளர்கா ரணனே. 16

**வாழ்வு உண்டாக**

சீரும் பெருவாழ் வதுசேர் கமனந்
தேரும் வடியே யினிதே செயலால்
பேரும் புகழுண் டுபிழைத் திடுவேன்
காருந் தணிகா சலகாங் கெயனே. 17

**நின்பதி யுண்டாக**

நூரூ ரதிபன் றருநுண் ணிமையான்
ஓரூர் நிலையென் றுஉகந் திலையென்
ஊரூ ரலைகொண் டுவுழன் றிடவோ
சீரூர் திருவே ரகதே சிகனே. 18

**பேதம் நீங்கல்**

அகரா தியினந் தமெனட் சரமும்
சகலா கமவிஞ் சையதுஞ் சமைய
மகமா பகைய தாய்வளர்ந் தகுகா
சிகரா சலமே வியசே வகனே. 19

**திருவாய் மொழிய**

இப்பா ரினிலுன் னையலா மல்என்
றொப்பா ரிணையார் நிசமுள் ளவரார்
செப்பாய் கலிகா ரணதெய் வமெனுந்
அப்பா பழனா புரியான் குகனே. 20

**அடியார் புகழ்தல்**

சிந்தத் தருணந் தனையே தெளிவாய்
வந்துன் செயலென் றதைவா வியவுன்
மைந்தன் புவிவாழ் கிறதுன் பெருமை
யுன்றன் புகழல் லவதோ குகனே. 21

**செய்வினை யற**

விண்ணோர் துதிமே விம்விறா லிமலை
துன்னார் மறையும் பயில்சுவா மிமலை
குண்ணா மெதினுங் குதிகொண் டபிரா
னெண்ணா வினையென் றறிநீ மனமே. 22



**வறுமை தொலைய**

ஒருகா லமுநிந் தைகளுங் கலிநோய்
வருகா லமுநீ துணைவந் தருள்வாய்
முருகா வசுதே வமுரா ரிதிரு
மருகா நிதிசேர் வணிகே சுரனே. 23

**கரி விலக்கல்**

சதமா யுனைநம் புவர்தம் விழிதேர்
பதசேர் வையிரும் படியி வையருள்
சுததூ ரகேசன் றனையன் றிரைகொள்
மதவா னைசகோ தரவல் லவனே. 24

**நஞ்சு விலக்கல்**

காலுண் டதிலாத் துக்கக் கும்விடம்
மாலுண் டரனுண் டதுமாய்ந் திடவே
பாலுண் டதுபோல் வினைபா யும்விடம்
வேலுண் டிடவே விடுவே லவனே. 25

**இருள் விலக்கல்**

தூர்மே கமதாய் வருதூ ரர்கண்மேல்
போர்மே வியுமே பொடிசெய் தவனே
சீர்மே வுசெழுஞ் சுடர்தீ பகமே
கார்மே விருள்தா கதிர்வே லவனே. 26

**விஷம் விலக்கல்**

அலகூர் விடமுன் கருடா சலனார்
உலகூர் விடமுண் டுவுலா வுதல்போல்
நிலமே விடவென் றுநிறைந் தவனே
வலகூர் விடமுன் மயில்வா கனனே. 27

**இடர் விலக்கல்**

மேன்விஞ் சையர்தம் மிடம்வே தவிகி
தான்முன் வினையுங் கிரகசா ரபலன்
ஏன்வந் திடுமுன் செயலோ திதெலாம்
பான்முன் பனிசெய் பனகா சலனே. 28

### மாயை விலக்கல்

வடுவா கியமா யவலைக் குள்மனந்
தடுமா றியுழன் றுதவிக் குதெனை
யடுபா விமயக் கமறுத் திடவே
தொடுவேல் முருகா சுரர்பூ பதியே. 29

### நினைத்தது முடிய

உனதா வல்மிகுந் துளனுன் னடியார்
மனதா வல்முடிந் திடவந் தருள்வாய்
எனதே வலுகந் துனதின் பமருள்
அனதா னகுகா கருணா கரனே. 30

### சருவ வசீகரம்

அருவா யுருவா யகமே வுயிராய்
குருவா யரசாய் நிலைகொள் பொருளாய்
தருவாய் மணிமந் திரமா கியவா
வருவாய் துணைசர் வவசீ கரனே. 31

### செக மோகனம்

தருகா றண்முதல் தானே வருவ
குருகா வலளென் றசொல்கொள் பவனே
வருகார் மயில்மீ தினில்வா துணையாய்
முருகா அருள்சேர் செகமே கனனே. 32

### ஸ்திரீ மோகனம்

அகவா கனனா லயர்தோ கையரும்
சகவாழ் வையிகழ்ந் துனதாள் கருதும்
புகழ்சீர் வடிவே பெருபூ பதியே
செகமோ கனதெய் வசிகா மணியே. 33

### பிறர் மனை விரும்பாமை

தருகா தலிமார் மயல்தங் கிமனம்
உருகா நிலைதந் திரவும் பகலும்
முருகா வெனநா வில்ஒளிந் திடவா
தருகாக வும்நின் றெனையஞ் சலியே. 34



### நமன் விலக்கல்

நமனும் பகடே றியும்நா டியெனைச்
சமரம் புரியா தகைதந் தருள்வாய்
தமரும் பெறுதாய் குருசா மியெனங்
கமுமுள் ளுயிரா கியகா வலனே. 35

### இல் வாழ்க்கை

உனையின் றியும்வே றுபொரு ளுளதாய்
நினையென் றிடினும் நினையே னிதமாய்
மனையுந் திருமக் கள்நல்வாழ் வதுவுந்
தனையும் தொலையன் பருள்சண் முகனே. 36

### மனம் ஒருவழிப்பட

அலைபட் டுளம்நொந் துமலைந் துமனங்
கலைபட் டதுழன் றுகலங் குதெலாம்
நிலைபட் டதுநேர் நிலைநின் றிடநூல்
வலைகட் டிடுவள் ளிமனோ கரனே. 37

### நோய் விலக்கல்

நீயும் பரிவுள் ளநிறைந் தமையால்
நோயும் பொடுயா மிடிநொந் துவிடும்
தேயும் சுடுகா ததுதின் றிடுகார்
வாயும் பகையா துமனோ பவனே. 38

### பூதம் பிசாசு விலக்கல்

தாயும் தமரும வளர்சங் கரனார்
சேயுந் துணையுண் டுசினந் துகுறள்
பேயுந் தொடரா தபிலன் றவறு
தாயும் பொருளென் றறிவாய் மனமே. 39

### வழித் துணை

படிமே லுனையண் டியபத் தரிடம்
குடியா கவுநின் றிடுகோ லமெனில்
அடியார் பிணையுண் டதனா லுனது
வடிவேல் துணையுண் டுவழித் துணையே. 40

அயிலுந் துணையுண் டுனதன் பதுவுஞ்
செயலுந் துணையுண் டுதினந் தினமும்
பயில்மந் திரமுண் டுபசுங் கலப
மயிலுந் துணையுண் டுவழித் துணையே. 41

**துயில் விலக்கல்**

தாயுண் டிருவோர் கள்சம தரமென்
வாயுண் டெனதன் புமனந் தனிலே
நீயுண் டெனதுள் ளருறைந் தசெய
லேயுண் டொருசிந் தையெனக் கிலையே. 42

**தாழ்வணுகாமலிருக்க**

இயலுண் டறிவுண் டிமையோர் பணியும்
புயமுண் டிளையோ னிடம்பூ ரணநன்
மயமுண் டரவா சலமா மலையார்
தயவுண் டுநமக் கொருதாழ் விலையே. 43

**துணையிருக்க**

அணையுண் டிடறாக் கயிலா றுமுகந்
துணையுண் டடியார் சுகம்போ தரவும்
பிணையுண் டிணையோன் அருள்பே சிடுநோய்
மனையுண் டனுபூ திமனத் துணையே. 44

**அடைக்கலங் காக்க**

தாளுங் கலியும் பிணியுஞ் சமனுங்
கோளங் குறியா தெதுகொள் கையெனில்
வாளுந் தமியே னுடல்வல் லுயிரும்
ஆளுங் குருசா மியடைக் கலமே. 45

**வரங் கொடுக்க**

நீதா வரமென் றுநினைந் தவுடன்
நேதா னெதிர்வந் தறிவென் னினது
மேதா விழிசிந் தையின்மே விவளர்
நாதா யெனையாள் குருநா யகனே. 46

**பேசி விலக்கல்**

பாலா மொழிபைங் கொடியார் கலவி
மாலா னதையென் றுமறந் திடுவேன்



கோலா கலவே லவனே குமரி
லீலா மறைபூ சிதநே மனனே. 47

**சூனியம் விலக்க**

மூவர்க் கொருகா ரணமூ லமெனத்
தேவர்க் குயிர்தெய் வசிகா மணிநின்
காவல் துணையுன் கவசந் துணையா
யேவல் பிணியே தணுகா தெமையே. 48

**ஊமை விலக்கல்**

உருகா மனுமவி ணச்சியும் பிரமன்
தருகா மன்வ ரந்தர வேபிணி
மருகா யதுதாய் நிலைமா றியுநின்
றிருகா ரணமுந் தருதே சிகனே. 49

**மனந் தெளிவு**

சிலைநம் முறுமென் றுதியங் கியதில்
இலையுண் டெனவெண் ணுமியற் கையெலாம்
நிலைகண் டனனெங் கும்நிறைஞ் சனனே
தலைகொண் டனனுன் பததா ளிணையே. 50

**சஞ்சலம்**

சிலையென் றிடுகா மலினிற் றலமாம்
நிலைநின் றிடுசெல் வமுநின் கருணை
அலைவின் றியெனக் களித்தா லடசஞ்
சலைகுன் றியுனன் புதனைத் திடுமே. 51

**பாரஞ்சுதல்**

நின்பங் கடியற் கினநீ மகள்வாய்
துன்பங் கணுமின் பசுகந் தரினும்
நன்பங் கல்சேர் நலமுங் கேடும்
உன்பங் கெனதொன் றிலையுத் தமனே. 52

**மனக் குறை தீர**

துறையா னவர்தம் முடனே சுதனும்
குறையா றியுமன் புகொடா ததின்மேல்

முறைதா னெவரோ டுமொழிந் திடுவேன்
தறைமேல் வளரிம் பர்தயா நிதியே. 53

**வஞ்சனை செய்யாதிருக்க**

நினையுந் தமியே னிடம்நே ரெனவஞ்
சனைவந் திடுகா விதயந் தருவாய்
வினைநிந் தையதா யமர்மே வசுரன்
தனைவென் றிடுகா ரணசண் முகனே. 54

**நர ஸ்துதி செய்யாதிருக்க**

நணம்பா விலுனைப் புகழ்நா வினியே
மணம்பா லரைநத் திவருத் துவதும்
பணம்போ கலிதொந் துபரந் திடவுன்
கணம்பார் முருகா கருணா நிதியே. 55

**வறுமை தீர**

சிறுமைப் பொழுதே அருள்செய் தபிரான்
வறுமைக் கிடமாய் விடும்வன் மையதும்
பெருமைக் கிடமா வதின்பே சுவனார்
அருமைத் துரையே யெனையாண் டவனே. 56

**துயர் தீர**

காவே றுதுசிந் தைபசுங் கலப
மாவே றியும்வந் தென்மனத் துயர்தீர்
சேவே றியதே வர்செழும் புயமென்
நாவே றியசீர் பதநம் பினனே. 57

**மனக் குறை**

திருவுங் கனசெல் வமதுன் செயலும்
வருகும் வருமென் றுவழுத் திமனம்
உருகும் படியன் றியுமொன் றறியேன்
குருவென் றுணையிப் படியோ குகனே. 58

**கிருபை யுண்டாக**

ஐயன் செயலிப் படியா னதன்மேல்
வையந் தனிலா ரைவழுத் திடுவேன்



னையும் படியே விடநான் மறுகச்
செய்யுந் தொழிலே திலைதே சிகனே. 59

**மனமிரங்க**

அண்டுஞ் சிறியே னையுமா ளடிமை
கொண்டுந் தமியே னுடைக்கோ லமெலாம்
கண்டும் பரிவின் றியகா ரணமென்
தொண்டன் றுணையா ருரையாய் துரையே. 60

**குறையாற்றல்**

விதனத் தையுமா றியுன்மே வடிகண்
டிதமுற் றிடநின் றுமிறைஞ் சிடவே
மதலைக் கொருகா லமும்வந் திடுமோ
சதமெய்ப் பொருளா யிசுதந் தவனே. 61

**உயிர்த் துணை**

காவிக் கமலங் களிகட ரவும்நான்
சேவித் திடவுஞ் சலிசெய் வதுவும்
பாவிக் கொருநா ளதுவோ பகராய்
ஆவிக் கரசே துணையா னவனே. 62

**அஞ்சல் செய்தல்**

சேவற் கொடியோ னடிசார் பதமாய்
ஏவற் கொடியோன் மனமே கருத
ஆவற் கொடியா னமல்சங் கிதமென்
சேவற் கொடியோ னருள்சே வகனே. 63

**மனக் குறை யாற்றல்**

என்றுன் றிருவுள் ளமிரங் கிடுமோ
மன்றின் புவிமேல் மகிவாழ் வதுதான்
என்னின் றதறிந் தெளியன் றிணிவேன்
அன்றின் றினியென் றுணையா னவனே. 64

**மனமிரங்க**

குன்றுங் கனியுங் கவிகூ றினதால்
ஒன்றுந் தயவில் லையுகந் திடிலா

ரென்றுந் தளர்வெய் தியிருந் திருகால்
என்றுந் துணைசண் முகமே மனமே. 65

**வாழ்வு பெற**

நானிப் படிபா டியுநா டியுநீ
ரேனிப் படிமோ டியதே செய்வதுந்
தானிப் படிசெய் வதடா தினியம்
மானிப் படிமேல் மிகுவாழ் வருளே. 66

**அன்பு பெறல்**

என்பே ரினிலே யினியா கிலுநல்
லன்பா கியுமா தரியா மல்விடில்
உன்பே ரினிலே பழியும் சுமரும்
நன்பூ தலமே பணிநா யகனே. 67

**மெய்ந் நிலைமை புகழ்தல்**

நிலைமைக் கினிதா கியநீ தியுமன்
சலைமைக் கினிகால் வெளிதா னும்வளர்
தலைமைக் கினியான் மதிதா னெனவென்
புலமைக் கினிதா கியபுண் ணியனே. 68

**மனத்தியல்பு**

ஆதா ரமகத் துவநீ தரமென்
மீதா னமுடறி பொருள்மெய் உயிரும்
மாதா வுநினைத் ததுவந் துதவும்
தாதா வுமெனக் கினிதா னவனே. 69

**மனந் தெளிய**

உலகிற் பலதெய் வமுமுண் டெனினும்
தலமெய்க் குருசண் முகனைப் பணியார்
அலகைக் கிணையா வரதான் முருகன்
வலமைதத் துரையென் றறிவாய் மனமே. 70

**அடிமை யாதல்**

அமரர்க் குயிர்கா ரணமா னபிரான்
குமரப் பெருமா னியல்கூ றுமவர்



தமதற் புதந்தான் தனிலங் ஙனஞ்சீர்
அமைநற் பதமே பெறுவாய் மனமே. 71

**வள்ளிநாயகியை மணஞ்செய்த புகழ்ச்சி**

பொன்னா டுநமா தொடுபொன் னுலகில்
மன்னா ரொடுயான் மருவே னெனதல்
அன்னாள் விபுதா சுதைய ளுலகந்
தன்னால் வரவுஞ் செய்தயா பரனே. 72

**உண்மை நிலை**

முன்னோ தியல்கூ றெனமொய் குழலாள்
தன்னோ டுரைசெய் ததுவுஞ் சகலோர்
அன்னா ளிலறிந் தன்றா கையினால்
உன்னா லமர்பொன் றிலையுத் தமனே. 73

**வாம நிலை**

மதுகொண் டவர்தங் குலம்வந் தவளென்
றதுகொண் டிகழ்வாள் பெரியா ளெனவும்
எதுகொண் டுரைபொன் புதல்வோ னியல்பு
அதுவிண் டுமைபூ செயறைந் தவனே. 74

**உயிர் காத்தல்**

வனமா தொடுகூ டிவரும் பொழுது
புனவே டுவர்வந் தமரும் பொழுது
சினமாய் வதைசெய் துதிரும் பவுயிர்
தனதா கவுகந் ததயா பரனே. 75

**மனத்தெளிவு**

முனிவந் திதுசே திமொழிந் திடவென்
றனைவந் துகபா டமடைத் திடவா
தனைசொல் லிவிரிஞ் சனதா யெனதாய்
மனதுந் தெளியச் செய்மனோ கரனே. 76

**சீர் பெற**

விண்சீர் பெரியா யவிரும் பிடவும்
மண்சீ ரெனுந்தா யவசம் பெறவும்

அண்சீ ருரைசெய் தவரும் பொருளே
நண்சீ ரதுவென் னநரா திபனே. 77

### குற்றம் விலக்கல்

பானந் தனையுண் குறவோர் மருகன்
றானந் தரநிந் தையெடா மல்வரக்
கானந் தமதந் தனையன் றுதவி
தேனுந் தினைமா விடுதே சிகனே. 78

### ஞானம் பெறுதல்

நீசேர் மருகன் குகனென் றிமையோர்
பேசா மலுஞா னமெனும் பெருமை
ஆசூ சமிலா மலறைந் தவனே
சேசா சலவா சசிரோ மணியே. 79

### விரத மகிமை

கங்கன் றினமுஞ் செகசோ தியினாள்
தங்குந் திதிசட் டிவிரதந் தனையே
பொங்குங் கனிவோ டுபுரிந் தவர்தம்
பங்கென் றுவிளங் குபரஞ் சுடரே. 80

### இணையிலாப் புகழ்

மதுகஆ டமுதோ தமிழ்வா ரிதியோ
துதிகொண் டினிதென் சுவையோ கனியோ
எதுவென் றுனைநா விலிறைஞ் சுவனா
வதுவுஞ் சலியா மயில்வா கனனே. 81

பணியோ வுயரே மமதோ பகை
மணியோ பொருளோ நிதியோ மணிசேர்
அணியோ தெதுவென் றடியன் புகலத்
துணிவோ வயில்வீ ரதுரந் தரனே. 82

உருவோ உடலோ வுயிரோ பொருளோ
அருவோ தமரோ அனையோ சனமோ
குருவோ தெய்வமோ குறியா தெனயான்
தெருள்வே னருளா யரவா சலனே. 83



தருவோ வளர்கா வனமோ சயில
மருவோ மலர்வா சனையோ களபப்
பொருவோ வெய்துவென் றுபுகழ்ந் திடநாம்
வருவோ மெனுமந் திரமா தவனே. 84

மகவென் றுதயங் கியும்வந் திடினும்
வெகுநிந் தைகள்செய் துகைவிட் டிடினும்
அகரும் பனதா யுனையான் மறவேன்
சுகதுன் பமுமுன் னதுசுந் தரனே. 85

### குற்றம் பொறுத்தல்

இறுசொற் பனமா கையிலும் கொடிய
வறுமைப் பிணியால் மகுசெய் பிழையும்
பொறுமெய்ப் பொருளே பொறுமைத் துரையே
திருநற் பொருளே அருள்செய் திடுமே. 86

### நீங்கா நிலைமை

இரவும் பகலுந் தினமெப் பொழுதென்
அரிசிங் குவைகண் ணிதயங் களிலும்
நெறியின் பமதா கநிறைந் தமையால்
குறைவொன் றிலையன் பர்குணா நிதியே. 87

### இனிமை கூறல்

உள்ளத் தினியே பணியூ ழியனான்
பிள்ளைப் பொருளல் லவோபே தைமையேன்
கள்ளத் தனமுங் கபடே தருமே
எள்ளத் தனைதா னிலையோ குகனே. 88

### அவமிருத்தியு வாராமல் காக்க

ஊனா யுயிராய் வளறாத் தமனே
நீனா மனமீ தருள்வாய் நினைக்கில்
வாணாள் வளரும் பெருமக் களுமே
வீணா மடியார் வெல்வே லவனே. 89

இனியா கிலுமெள் ளளவுன் கருணை
கனிவா கவுநின் றருள்கா ணவுமே

அனிரு தம்வரா மலும்அஞ் சலிசெய்
முனிநா தர்புகழ்ந் திடும்முத் தையனே. 90

### தவம் நிறைவேறல்

தவமா யுனைநேர் விரதங் களுமே
அவமா கிவிடா மலனுக் ரகமாய்
பவநா சனமே செய்பலந் தருவாய்
சிவபூ சிதகா ரணதே சிகனே. 91

### சரணடைதல்

தாய்நீ தமர்நீ குருசா மியுநீ
வாய்நீ மனநீ புகழ்மா நிதிநீ
ஆய்மா மறைநீ யதுமாய் கையினால்
நீயே கதிவே றிலைநீள் குகனே. 92

### பர மாதர் விலக்கல்

மானார் தருமாய் கைமயக் கமதால்
நானா வகையாய் மனநைந் திருகால்
தேனா கவுமுன் துதிசெய் திடவே
ஞானா வமுதே யருள்நன் குருவே. 93

### வணங்குதல்

ஏதுந் தெரியே னுனையே புகழ
வேதங் களுகா ரணமே யறியேன்
நீதங் கிடுசீ தனமா நிலைமை
ஓதுந் தமிழ்மா லையுகந் தவனே. 94

### கவிதை பாராட்டல்

முன்னா கவுமும் மணிமா லையதும்
பின்னா முருகன் பிரபந் தமதும்
என்னா ளும்விளங் கவுமே யுரைசெய்
மன்னா தெய்வயா னைமனோ கரனே. 95

இப்போ தெனதுள் ளமிருந் துமுரு
கப்பா ரனுபூ தியதா மெனவு



ஒப்பா கவும்ஓ தியுகந் தவனே
நற்பார் குறிநா யகிநா யகனே. 96

### குற்றம் பொறுத்தல்

சுதனிப் பொழுதுன் சொல்வார் கவியில்
எதுகுற் றமிருந் திடினும் பரிவாய்
மதலைச் சொலிதென் றுமகிழ்ந் தெனையாள்
சதலத் தடியார் கள்தயா பரனே. 97

### இனிமை கூறல்

நானோ துவதே தெனில்நா தனும்நீ
தானோ திருசெந் தமிழா கையிலும்
யானோ தியறென் றருள்செய் பவனே
ஞானோ தயனே மறைநா வலனே. 98

தோற்றும் பொருள்நீ கவிசொல் பவன்நீ
ஏற்றுந் தமிழ்மா லையதென் றகையே
சாற்றும் படிசெய் தெனையே தயவாய்ப்
போற்றும் பணியே கொள்பரா பரனே. 99

### அடியார் பிணைப்பு

அணையாய் மெலியா மலும்ஆ ளவுமென்
பிணையா னவனீ பிரியா மலுமென்
துணையா னவனீ செகசோ திசர
வணதே சிகனே மயில்வா கனனே. 100

செயமே வியநல் சீர்கரு ணேசா
கயமா முனிநீள் மரபா கியவே
லயநீள் பொன்செல் லபயனும் வரமே
வியமா லைசொல்நூ றும்விளங் கவுமே. 101

அளகா கியமே ரரவா சலமும்
பளனா பிரிமே வுபரா பரனார்
உளமே மகிழ்வா கவுமோ தியில்
வளமே வனுபூ தியும்வா ழியரோ. 102

முருகரநுபூதி முற்றிற்று

உ

# கதிர்காமத்து அம்மானை

## காப்பு

காரிருள் அகற்றுஞ் சோதிக் கதிரையம் பதியை நாடிச்
சீரிய தமிழினாலே சிறந்ததோர் அம்மானை பாட
ஆரியன் கமலக் கண்ணன் அச்சுதன் பாதம்போற்றி
வீரிய மதங்கள் பெய்யும் வேழமா முகவன் காப்பு 1

## விருத்தம்

ஏரம்பன் பாதம் போற்றி இறைஞ்சியான் பாடும் போது
பார்துழி கலைகள் தூவும் பாரதி எனது நாவில்
சீர்வரு நிலைகள் தந்து செழித்துல கெங்கும் வாழ்த்த
நீர்துயி லணிந்த மாதா நின்னடி சரணம் போற்றி. 2

## விருத்தம்

வரன்போகி தனயன்வில்லி வடுகனார் கடம்பன் மாரன்
தரன்பெறு சோமன்தேவி சசிதனைப் போற்றி யானும்
உரம்பெறு முரகந் தூக்கும் உலகம தனிலு யர்ந்த
அரன்பதம் போற்றி இந்த அம்மானை பாட லுற்றேன். 3

## வரலாறு

சீரார் புவியிற் திருப்பதிதன் செய்திசொல்ல
காரானை மேனிக் கணபதியே முன்னடவாய்
ஆதிசிவன் மரபில் அறுமுகனார் உற்பவித்த
காதை உரைக்கக் கற்பகமே முன்னடவாய்
வனத்தில் மயிலாட வான்கோழி கண்டிருந்து



கனைத்துநின்று ஆடுங் கதைபோல யான்தானும்
இந்தப் பெரும்புவியில் இளையோனு மிக்கதையை
சந்தப் படுத்தத் தகுமோ கலைஅறியான்
பாரி லெறும்பினங்கள் பாங்காய்ச் சமுத்திரத்தை
வாரிக் குடிப்பனென்ற வாறொக்கு மம்மானை
கற்றறியான் கூறும் கதிர்காமத் தும்மானை
முற்றறிந்து ஓதுவர்போல் மொழிவேனோ பூவுலகில்
பாவிசைத்துப் பாடிப் பயனெடுத்துச் சொல்லறியான்
நாவசைத்துப் பாட நாடினனோ மானிலத்தில்
வல்லவன் யானென்று வாழுமிந்த நற்பதியை
கல்லாதான் கற்ற கவிபோல யான்தானும்
முதுமொழியைக் கேட்டு மூவுலகோர் தான்மகிழும்
பதிமகிமை கண்டு பகரலுற்றே னம்மானை
புரந்தரனு முன்னாள் புகழுமிந்தச் சன்னிதியை
சிரந்தெளிந்து பாடச் சென்றேனோ பூவுலகில்
பகவன் மதத்தினர்கள் பாடிப் பணிந்தாறு
முகவன் திருப்பதியை மொழியத் துணிந்தேனோ
குரோத னுறையக் கும்பமுனி தான்துதிக்கும்
வரதன் திருப்பதியை வாழ்த்த நினைந்தேனோ
கடம்பன் மகிழ்ந்து காட்சிதரு மிப்பதியை
இடும்பனென நினைந்து இயற்றத் துணிந்தாலும்
மாரன் குமரன் மாசாத்தான் சண்டனையும்
காராய் எனநினைந்து கலைவாணர் தங்கள்முன்னே
தேடரிய தெய்வத் திருப்பதியை யான்நினைந்து
பாடத் துணிந்தேனே பாவலர்கள் தஞ்சமென்று
மானினங்கள் சூழ மயிலினங்கள் தான்வளர
தேனினங்கள் எங்குந் தெளித்துச் சிறந்திருக்க
குயிலினங்கள் கூவக் குஞ்சரங்கள் தான்பெருக
பயிலுங் கிளியினங்கள் பாங்காய்ப் பெருக்கமுற
வண்டினங்கள் ஓசையிட வாசமலர் பூத்திலங்க
தென்ற லசைப்பத் தெய்வத் திருப்பதியில்
மாணிக்கக் கங்கை வளைத்து மிகச்சூழ
ஆணிப்பொன் னாலமைத்த அலங்காரச் சன்னிதியில்
வரந்தி அபிராமி மாதா அரிப்பிரியை
சுரந்த சசியந்தன் சூலி அரம்பையுடன்
கந்தவே ளைத்தொழுது கதிர்காம மென்றுசொல்லி
வந்து பணிசெய்து மகிழ்ந்திருந்தா ரம்மானை

எழுமலையுந் தான்சிறக்க இமையோர் பணிந்துதொழ
கழுகு பணிசெய்யும் கதிர்காமச் சன்னிதியில்
கன்னல் கதலி கமுகுபலாத் தெங்கினொடு
செந்நெல் செழித்திலங்கும் திருப்பதியி லெந்நாளும்
அண்டர் துதிக்க அருள்பெருகி வாழ்வுயர
தொண்டர் தவம்புரிந்து சூழ்ந்திருப்பா ரம்மானை
யாளி-சிங்கம் மேவ யானை கரடி-புலி
தூளிதங்கள் செய்யாமல் தொடர்ந்துவிளை யாடிடுமாம்
கிள்ளையொடு பூனை கீரியொடு நாகசர்ப்பம்
துள்ளி விளையாடிச் சூழ்ந்திருக்கு மிப்பதியில்
முல்லை வனமும் முழுநீலஞ் செண்பகமும்
சொல்லரிய மாமலர்கள் சூழ்ந்து வளர்ந்தோங்கும்
சந்திரருஞ் சூரியருந் தானவரும் வானவரும்
இந்திரனு மாமுனியும் இறைஞ்சித் துதித்திடுவார்
அரியு மயனும் ஆதிசிவன் நந்தீசர்
பிரியமுடன் உகந்த பெருந்தலங்கா ணம்மானை
பார்வதியும் லெட்சுமியும் பாங்கான கங்கையொடு
வார்அணிந்த தேவநிலை மங்கையர்கள் தானிருக்க
தேடரிய இப்பதிக்குத் தென்கயிலை யாமெனவே
மாடேறு மீசன் வகுத்தாரே முன்னாளில்
அப்பதியை யான்தானும் அம்மானை யாய்ப்பாட
ஒப்பிடுமோ பூவுலகில் ஒன்று மறியேனே
கலையிற் சிறந்தோரைக் கைகூப்பி யான்தானும்
மலைகள் செழித்திலங்கும் வாழ்கதிரை மாநகரை
பாடிப் படித்துப் பண்டுவினை தானகற்ற
தேடித் தவம்புரிந்து செப்பலுற்றே னம்மானை
நாலு மதத்தோரும் நாவலரும் பாவலரும்
மாலு மயனறிய வணங்குந் தலமிதுகாண்
மங்கமுடிக் கோபுரமும் சந்தன மாமலையும்
எங்கும் புகழாக இலங்குமிந்தச் சந்நிதியில்
வெள்ளிமுள்ளுக் கானகமும் வெண்ணீற்று மாமலையும்
வள்ளிக் கொடிவளர வாழ்கதிரை மாநகரில்
மாங்கனியும் வாழை வருக்கனன்ன தாழையுடன்
தேங்கனியுஞ் சூழ்ந்து செழிக்குமிந்தச் சந்நிதியில்
ஆலு மரசும் அடர்மருது வம்மியுடன்
சோலைஎன வளர்ந்து சூழ்ந்திருக்கு மம்மானை
அல்ல லறவே அரும்வினைகள் தானறவே



சொல்லுங்கதிர் காமமென்று சொற்பெறவே யான்பாட
துவன்ற நடையாளே சொற்கலையில் வல்லவளே
தவன்ற திறத்தாளே சரஸ்வதியே முன்னடவாய்
தெரிந்து கலைபடித்த செந்தமிழோர் தங்கள்முன்னே
அறிந்து கதிர்காமத் தம்மானை சொல்வதுதான்
மாறில்லா நீள்புரியில் மாரி பொழிவதுமுன்
பேறில்லா நீள்பனிதான் பெய்ததொக்கு மம்மானை
ஆகையால் யானுரைத்த அம்மானை தன்னைஇப்போ
தாகமுடன் கேட்போர் தரணிதனி லேவாழ்வார்
என்னபிழை யானாலும் இதையே மனமகிழ்ந்து
சொன்னேனே கேட்போர் சொர்க்க மடைந்திருப்பார்
பேசறியான் சொன்ன தமிழ்ப்பிழைக ளைப்பொறுத்து
ஓசைபெற வாழ்ந்து உகந்திருப்பீ ரம்மானை
இந்தமட்டு மிப்பதியை எடுத்தே யுரைத்ததெல்லாம்
கந்தவே ளுற்பவித்த காதையொடு முற்சரிதை
ஓத உவந்து உளங்களிக்கப் பூவுலகோர்
பாதம் பணிந்து பாடலுற்றே னம்மானை
ஏதுகுற்றஞ் செய்தாலும் எளியேன் தனைக்காத்து
வாது புரியாமல் வடிவேல ரைத்தொழுவோம்
சித்திபெற எண்ணித் திருப்பதியை யான்நினைந்து
பத்தியொடு படிக்கப் பாட மனந்துணிந்தேன்
மானீன்ற கன்னி வள்ளியம்மை தானிருக்கும்
தேன்போன்ற மாநகரில் செல்வக் கதிர்காமம்
வள்ளிக் கிருதோழி வனவேடர் கற்சூழ
புள்ளிமா னீன்றசெய்தி புகல்வேன்பின் அம்மானை. 4

## விருத்தம்

முருகவே ளுதிக்க வேநல் முக்கண்ணன் விழித்தவாறும்
திருமகள் மைந்தன் றானும் தேவர்க்காய் அழிந்தவாறும்
பொருதிரைக் கடல்கள் சூழ்ந்த புவியிலே சூரர்தம்மை
கருதியே குகன் செயித்த கதைஎலாம் பகரலுற்றேன். 5

## நடை

முன்னாளிலே சூரர் மூவுலகும் தானாண்டு
கண்ணாயிரத் தோனைக் கடுஞ்சிறையில் வைத்தார்கள்

வேத மழித்து விண்ணவரைத் தான்பழித்து
வாது கொடுத்து வாழ்ந்திருந்தார் சூரர்களும்
ஆதலால் தேவரெலாம் அவுண ரிடுக்கமதை
ஏதனால் மாற்றி இருப்போ மெனநினைந்து
இந்திரனுந் தேவர் இருடிகளு மாமுனியும்
சிந்தைநொந்து மாலயனார் சீர்பாதம் போற்றிசெய்து
ஆறாத் துயராய் அழுதழுது கைகூப்பி
மாறாத் துயர்நீக்கும் வல்லவர்கள் நீங்களல்லோ
கொடியதொரு தீமையெலாங் கோவிந்தா நீதுரத்தி
அடியவரைக் காக்க அருளுதவு மென்றுரைத்தார்
அஞ்சலென்ற தேவர்களை அரியு மயனாரும்
வஞ்சமுடன் வந்தகுறை வழுத்துமென வுரைத்தார்
மாலோ னுரைகேட்டு வானவரு மிந்திரனும்
நாலு முகத்தோனே நாரணனே கேட்டருளும்
வாரி துயிலாக வடமேரு குடையாக
சீரிலங்கு மாநகரில் சேரவுணர் தீவினைதான்
ஆற்ற முடியாது அசுர ரிடுக்கணது
சாற்றறிய மாயவனே தாபரித்து ஆளுமையா
காக்கப் படைக்கக் காவலர்கள் நீங்களல்லோ
ஆர்க்கு மரிதாகுமென்று அபயமிட மாலயனும்
தேவர் தனைப்பார்த்துத் திருமாலும் வேதாவும்
மேவலரே உங்கள் வினைஅகற்றி வைத்திடுவோம்
பிஞ்சு மதிசூடும் பெருமா னிடமேகி
அஞ்சாதீர் நாங்கள் அவுணர்களை வேரறுப்போம்
வாருங்கள் நாமெல்லாம் மாதுமையாள் பாகனிடம்
சேருவோ மென்று தேவர்குழாங் கூடினராம்
சீராகக் கூடிச் சிறக்கக் குழாமிருந்து
பேராக நன்மொழிகள் பேசலுற்றா ரம்மானை
திருமா லிமையோர்க்குச் செப்புவது ஆதிசிவன்
கருவா லழிப்பதல்லால் காசினியிற் சூரர்களை
விழியா யிரத்தோனே மேவலரே கேட்டிடுவீர்
பழிவாங்க வேணுமென்றால் பரமன் தவமழிப்போம்
என்னத் திருமா லிமையோ ரடிபணிந்து
உன்னையல்லால் வேறுதுணை ஒருவரு மில்லையென
தாமன் மனமகிழ்ந்து சத்தியுமை பாகனிடம்
காமனைத் தானனுப்பக் கருதலுற்றா ரம்மானை
ஆதி மதனை அழைத்துச் சிவனிடத்தில்



மாது வடிவாக்கி மயக்குமென விடுத்தால்
வீரமது சிந்த விளங்கு மொருமதலை
சூரர்குலம் வேரறுத்துத் தொலைக்குமிந்தப் பிள்ளைஎன்று
ஆலோ சனையாய் அரிஅயனுந் தேவர்களும்
வால மதனை வாவென் றருகழைத்து
பெண்களுக்கு மேலான பேர்வடிவு நீரெடுத்து
கண்மூன் றுடையோனைக் கலைக்க வெனவிடுத்தார்
அப்போது காமன் அரிவை வடிவாகி
செப்பரிய ஈசரிடம் செல்வே னெனநடந்தான்
கரும்பு வில்வளைத்துக் கருவண்டு நாண்பூட்டி
அரும்பு மலர்ப்பாண மெடுத்து நடக்கலுற்றான்
வெண்கயிலை சென்று விமல னெதிராக
பெண்வடிவு கொண்டு பெய்தான் மலர்ப்பாணம்
மாரனவன் தானும் மாதுவடி வானசெய்தி
கூரான வேல்விழியீர் கூறக்கே ளம்மானை
குமிழைப் பழித்ததனங் கொடியைப் பழித்தஉரு
கமலைப் பழித்தமனம் கயலைப் பழித்தவிழி
மயிலைப் பழித்தசாயல் மதியைப் பழித்தநுதல்
முகிலைப் பழித்தகுழல் முறுவைப் பழித்ததிறம்
கரும்பைப் பழித்தகரம் கதிரைப் பழித்தநிறம்
அரும்பைப் பழித்தமறு அரவைப் பழித்தகுறி
இலையைப் பழித்தஉந்தி இணையைப் பழித்தபதம்
சிலையைப் பழித்ததுபோல் சேடியுரு வானமதன்
அன்றிலது போல்நடந்து அரனா ரெதிராக
நின்று உலாவி நிலைகுலைந்தான் காமனுந்தான்
கங்கை அணிந்தோனும் கலங்கி விழித்திடவே
மங்கை வடிவான மன்மதனுந் தானெரிந்தான். 6

## விருத்தம்

தேவர்கள் பகையை வெல்லத் தெரிந்துமே விடுத்த காமன்
மேவலே மலரின் மாரி விடுத்தது கண்டு முன்னோன்
ஆவலாய் விழுங்கும் போது அரிவையர் வடிவ மான
பாவலர் புகழுங் காமன் நீறெனப் பறந்தானன்றே. 7

## நடை

சதாசிவனு மப்போ சகிக்க முடியாமல்
பதாதி பரயோகப் பக்குவங்கள் விட்டெனவே

அக்கினி தேவன் அரனார் அடிவணங்கி
மிக்கவர மீயுமென வீரமதைக் கைகொடுத்தார்
வாங்கி விழுங்கி வணங்கி நடந்தவரும்
தாங்கரி தாகையினால் சரவணையிற் கக்கிவிட்டார்
மாயவனார் தங்கை மாதுமையா ளோடரனும்
காய மொடுகாயங் கலந்து கலவியுடன்
கூடி இருக்கக் குமரவே லுற்பவித்தார்.
பாடியே தேவரெல்லாம் பரமனைத் தொழுதுநின்றார்
பாசம் பகைஅறுக்கும் பார்வதியாள் புத்திரனும்
வாசமலர்ப் பொய்கையிலே வளர்ந்துவிளை யாடுவாராம்
ஆறு முகமும் ஆறிரண்டு தோள்களுடன்
நீறுபெறு மேனியோடு நீள்கரமு மீராறு
வதனவிழி பன்னிரண்டு மதிநுதலு மோராறு
மதனன் அழகெனவே வாழ்த்தியே தேவரோடு
வேதனும் மாலும் விண்ணவரும் இந்திரரும்
தாதுமலர் தூவிச் சந்தோஷ மாடுவாராம்
இன்றோடு சூரனின் இடுக்கண் தொலைந்ததென்று
கொண்டாடி நின்று கும்பிடுவார் தேவரெல்லாம்
அப்போது மாதுமையும் அரனா ரடிவணங்கி
தப்பாமல் ஓர்மதலை தாருமென்றா ளம்மானை
அந்த உரைகேட்டு அரனார் மனமகிழ்ந்து
சந்தோஷமாய் மதலை சரவணப் பொய்கைதனில்
மகிழ்ந்து விளையாடி வளருகிறான் மாதரசே
புகழ்ந்தெடுத்து நீயும் பொற்கொடியே வாருமென்றார்
ஈச னுரைகேட்டு ஈரேழு உலகளந்த
வாசவனார் தங்கை மகவாசை கொண்டெழுந்து
நடந்தாள் உமையவளும் நன்மதலை வாழுமிடம்
தொடர்ந்தா ளறுமுகனார் சோதியுருப் பெற்றிருக்க
மாதுமையா ளங்குசென்று மதலைதனை அணைத்து
பாதம் பிடித்துப் பார்வதியு முத்தமிட்டு
கொஞ்சி அணைத்துக் குழந்தைவடி வேலனென்று
பஞ்சுமலர் மெத்தையிலே பாலூட்டித் தான்வளர்த்து
தாலாட்டி சீராட்டி சண்முகனார் என்றுரைத்து
பாராட்டி மாதுமையாள் பாலகனைத் தான்வளர்த்தாள்
செல்ல மொழியும் சிறந்த அழகுடனே
மெல்ல நடந்து விளையாடி யேவருவார்



கைலைமலைப் பூவினங்கள் கண்டு மலர்ந்தோங்க
அகிலந் தழைக்குமென்று அரனார் மனமகிழ
மதங்கள் செழிக்க வானோர்கள் ஈடேற
பதங்கள் இசைக்கப் பாரரசர் தற்சூழ
ஐந்து வயதுசெல்ல அரனும் உமையவளும்
மைந்தனைத் தானேந்தி வாழ்த்தி மனமகிழ்ந்து
மூவுலகும் தானாளும் முதல்வரிவ ரென்றரனார்
ஏவல்செய்து தேவரெல்லாம் எந்நாளு மேதுதிப்பார்
கந்தன் கடம்பனென்றும் கைலைமலை நாதனென்றும்
சந்தோஷ மாய்உமையும் சங்கரனும் முத்தமிட்டு
விந்தைபெறச் சந்தனம் மேனியெலாந் தானணிந்து
உந்திச் சுழிவரையில் உருத்ராட்ச மாலையிட்டு
நந்தி மலரணிந்து நற்காவி வேட்டிகட்டி
சந்திரனைப் போல்நுதலிற் சந்தனப் பொட்டுமிட்டு
சதங்கை அரைக்கணிந்து தாளக் குடைகொடுத்து
பதுங்கிவிளை யாடுமென்று பார்வதியும் சங்கரனும்
வாழ்த்திவிட வேலவரும் மாதுமையாள் தன்னிடத்து
தாழ்த்தி நகைத்துத் தாய்மடியில் தானிருந்து
பாலருந்திச் சென்று பாரிலுயர் வெம்மலையில்
மால்மருகன் ஏறி மாதா மனமகிழ
குலாவி நடந்து குழந்தைவடி வேலவரும்
உலாவி கயிலையெங்கும் ஓடிவிளை யாடிவர
மாதா மனமகிழ வானோர்கள் கண்டுதொழ
வேதனும் மாலும் மிகமகிழ்ந்து கொண்டாட
கந்தம் புனுகு களபகஸ் தூரியுடன்
சந்தம் கமகமமெனத் தான்வளர்ந்தார் அம்மானை. 8

## விருத்தம்

மதனனைப் பெண்ண தாக்கி வானவர் அயன்மால் கூடி
விதனமே தீர்க்க வென்று விளங்கிய புராந்த கன்முன்
சுதனெனத் தோன்ற மாரன் சுடலையில் நடித்த ஈசன்
பதமதாய் விழித்து ஈன்ற பகவனைத் தேடிச் சென்றார். 9

## நடை

விளங்கும் அரியயனும் மேலோரும் இந்திரரும்
உளங்களிக்க வேதமதால் ஓர்ரதத்தைத் தானியற்ற

வேணுமென எண்ணி வேண்டும்படி இயற்றி
தோணும் அழகுடனே சொல்லுங் கிரணமுடன்
ஓது தமிழ்வேதம் ஒருநாளும் குன்றாமல்
கோதைஉமை பாகரிடம் கொண்டு நடக்கையிலே
கருவி அரவமிடக் கலித்தல் கிலுக்கமுற
குருமித்தல் ஆர்த்திலிங்க கொண்டரனார் தன்னிடத்து
வைத்தார் நமஸ்கரித்தார் வானவரும் மாலயனும்
கைத்தலத்தான் செய்தகுறை காட்டலுற்றா ரம்மானை
இந்திரனார் நன்னரசை ஏற்றரசு சாட்டியபின்
பந்தயம் கொண்டுநம்மேற் பலதீமை செய்யலுற்றார்
எண்ணரிது தேவர் இடுக்கமதைச் சொல்வதற்கு
பண்ணுப் புகழ்சூரர் பகைஅகற்று மென்றமுதார்
அப்போ தரனார் அமருமென்று தேவர்களை
துழவன்றனை நோக்கிச் சொல்லுவார் ஓர்வசனம்
பிஞ்சு மதிசூடும் பெருமான் மனதிரங்கி
அஞ்சாதீர் மாலயனே அறுமுகனார் தீர்ப்பார்காண்
வாரு மிருமென்று மாதுமையைத் தானழைத்து
தாரகச் செற்றோனைத் தானழையு மென்றுரைத்தார்
அம்பிகையாள் கேட்டு அகமகிழ்ந்து வேலவரை
உம்பர்முத லோரறிய ஓடிவா வென்றுரைத்தாள்
அன்னா னறுமுகனும் அன்னை அழைத்திடவே
முன்னோன் மகிழவுமை முலையுண்டு தானிருக்க
ஏனழையு மென்றீர் என்னுடைய புத்திரனை
நானழைத்தே னிப்போ நவிலுகென்றாள் சாம்பவியும்
சடையோ னுரையைத் தான்நோக்கி ஓதுவது
விடைஒன்று யான்பகர்வேன் விளங்கி அறிந்திடுவீர்
தேவியரே மகளும் தேவரோடு இந்திரனும்
கூவி அழுதசூரர் கோரந்தீ ரென்றழுதார்
பாவி அவுணரொடு பாலகனைத் தானனுப்பி
தாவி அமர்புரியத் தானழையு மென்றுரைத்தேன்
மங்கையோர் பாகா வானவர்க்காய் என்மகவை
பங்கமது செய்தசூரர் பழிவாங்க வைத்திடவோ
அண்டபிண்ட மெல்லாம் அழித்துப் படைக்கவல்லாய்
பண்டு பழிஅகற்றப் பாலகனை ஏவுவனோ
தாளிற் புழுதிபடத் தாவிவிளை யாடுவோனை
வான்புகழ் சூரனுடன் வன்போர்க் கனுப்புவனோ
வில்லி தலையன் விண்முழுது மாளிபுத்தன்



சொல்லி யயன்தேவர் சூரனுக்காய்த் தான்பயந்து
மறைந்திருந்து எந்தன் மைந்தனையோ ஏவென்று
சிறந்துரைத்தா ரென்று செப்புவதா லேகவிடேன்
என்றா ளுமையாள் ஈசன் மனமகிழ
நன்றான வார்த்தை நவிலலுற்றார் அம்மானை
குழக னுமைமடியிற் குஞ்சிரிப்புக் கொண்டிருந்து
துழவன் மருகன் சொல்வா ரொருவசனம்
அன்னை முகம்பார்த்து அறுமுகனு மப்பொழுது
என்னை யனுப்புமம்மா இமையோரைக் காத்திடுவேன்
அண்டமெல்லாம் ஓர்குடைக்கீழ் ஆண்ட அவுணர்களை
துண்டதுண்ட மாகத் துணிப்பே னெனைஅனுப்பும்
ஆசா னிவையுரைக்க ஆதியுமை தான்மகிழ்ந்து
நேசமுடன் போயுன் நினைவின்படி வாருமென்றாள்
கந்த னெழுந்து கங்கை அணிவோனை
மைந்தனென வணங்க வரங்கொடுத்தா ரம்மானை
விடைகொடுக்கக் கண்டு வேதாவு மாலோனும்
அடைவுடன் போர்க்கோல மாகுமென்றா ராதிசிவன்
தண்ணீராலே கழுவிச் சங்கரனு மாதுமையும்
வெண்ணீ றெடுத்து மேனிஎங்குந் தானணிந்து
சந்தனப் பன்னீர் தான்குழைத்துப் பொட்டுமிட்டு
விந்தையோடு போர்க்கோலம் வேணுமட்டும் இயற்றி
வில்லொருகை வாளொருகை வெல்லும் சரமொருகை
செல்லைசமு தாடிருகை ஒருகை தண்டுஒருகை
சூலாயுத மொருகை துணைக்கருவி தானொருகை
மாலாயுத மொருகை வச்சிராயுத மொருகை
வேலாயுதங் கொடுத்து விண்ணவரைக் காருமென்று
காலாயுதங்க ளெல்லாங் கந்தருக்கு மிந்திரனார்
வீரவாகுப் படையும் விண்ணவர்கள் விற்படையும்
சீராகவே கொடுத்துச் செப்புவா ரோர்வசனம்
கண்டு வெகுண்டுவருங் காசினியிற் சூரர்களை
வென்று வாவென்று விடைகொடுத்தா ரம்மானை
மாயன் மருமகன் வரம்பெற்றுத் தானெழுந்து
தூயமைவளர் சூரர்களைத் துணிப்பே னெனநடந்தார்
காளி கணங்கள் கசவாகு தேவருடன்
வாளி வில்லேந்தி வந்தெதிர்த்தார் சூரனுடன்
கண்டானே சூரன் கண்கள் சிவந்திடவே
அண்டம் கிடுகிடென்ன அடுக்கு நிலைகுலைய

ஆர்ப்பரித்துச் சூரன் அதட்டி அறுமுகனை
தார்ப்பரிய முள்ளவர்போல் சமர்செய்ய வந்தீரோ
முன்பு அமரரோடு முட்டிப் படைபொருதி
பின்காட்டி ஓடவைத்தேன் பிள்ளாய்நீ நில்லாதே
சொற்கேட்டு ஓடிவிட்டால் துன்பமது வாராது
மற்கட்ட வந்த மதலைபோல் ஆனீரே
சிவனு மயனும் திருமாலும் முன்னாளில்
தவனடமு னெனக்காய் தானே மறைந்திடுவா
தம்பியரே உம்மோடு சரிப்போர் புரியவொண்ணா
உம்பர் அறிய ஓடார் உயிர்பிழைத்து
என்று சூரன்கூற ஈசன்மகன் வெகுண்டு
மண்டலத்தை ஆளும் மமதையோ உந்தனுக்கு
வாடாநீ இப்போ வதைப்பேனென் கையாலே
மூடா கேளின்று முடிவாகும் நாளாச்சே
என்னை யாரென்று இகழ்ந்து நகைத்தீர்நீர்
உன்னோடுன் னுற்றாரை ஒருநொடியி லேமடிப்பேன்
பாரடா வென்று பற்கடித்து வேலவரும்
சூர னுடலைத் துணிக்கச் சிலைவளைத்து
விட்டாரே பாணமது விண்ணதிர மண்ணதிர
பட்டு மடிந்தான்காண் பத்மா சூரனுந்தான்
ஏவுஞ் சரங்களெல்லாம் எண்ணரிய சூரர்களை
கூவி அழிக்கக் குறைத்தலைகள் கூத்தாட
தாருகன் சிங்கமுகன் சண்முகனார் தன்னுடனே
பாரேழ் நடுக்கமுறப் பற்கடித்து வில்வளைத்து
சேனை ஒருகோடி தேர்ப்பரிகள் முக்கோடி
யானை ஒருகோடி யாளிசிங்கத் தேர்கோடி
எல்லையில்லாச் சேனை இருபுறமுஞ் சூழ்ந்துவர
வில்லிற் கணைதொடுத்து விட்டான் அறுமுகற்கு
கோடையிடி போற்சரங்கள் கொக்கரித்து முன்வரவே
வாடாமல் மால்மருகன் வடிவே லெடுத்தெறிந்தார்
அவுணர்குலம் வேரறுத்து அறுமுகனார் கையதனில்
மவுனமுடன் வந்து வடிவே லிருந்ததுகாண்
கூளி நரிநாய்கள் குறைத்தலையைத் தின்றாடும்
காளியொடு பேய்கணங்கள் களித்துமிகக் கொண்டாடும்
கோழி மயிலாகக் கொண்டெழுந்த சூரர்தமை
வாழுங் கரங்கொடியும் வாகனமும் ஆக்கினராம்
நறுமலர்கள் தானெடுத்து நான்முகனுந் தேவர்களும்



பெருமழைபோல் கந்தருக்கும் பெய்தார்கா ணம்மானை
தம்பட்ட மல்லாரி தாரைசின்னஞ் சங்கசைய
கும்பிட்டார் வானவர்கள் கூத்தாடி னார்மகிழ்ந்தார்
மேள மொலிக்க விண்ணவர் தாம்செழிக்க
வேழ முகத்து விநாயகரைத் தான்போற்ற
சாக்கிய னார்தான் சண்முகனை முத்தமிட்டு
நீக்கினீர் தேவசிறை நீடூழி வாழுமென்றார்
அன்னேரங் காங்கையரும் அண்ணாவென வணங்கி
மண்ணாசை கொண்ட வல்லசுரர் தங்களையான்
சமரில் அழித்தேனே தானவர்கள் கண்டுதொழ
அமரருக்கு வேண்டும் அரியவரம் நீரளிப்பீர்
என்று வடிவேல ரியம்புமந்த வேளையிலே
கண்டு வரங்கொடுத்தார் கனிஉகந்த கற்பகமும்
வாங்கினார் தேவர் மகிழ்ந்தா ரடிபணிந்து
ஓங்கு புகழுயர உன்கிருபை தாருமென்று
பாகசாத னன்றனக்குப் பட்டமது கட்டுதற்கு
நாக மதில்துயிலும் நாரணனும் வேதாவும்
சுரருடனே வேலோனுந் தொழுது கணபதியை
சிரமகுடஞ் சாற்றித் தேவரெல்லாங் கொண்டாடி
திட்டமுட னாண்டு தேவர்களைக் காருமென்று
பட்டந் தரித்தார்காண் மாவிந்திர லோகமதை
மாசகற்றி வைத்தார் வடிவேல ரம்மானை
பூசுரனுங் கந்தரைத்தான் போற்றிசெய்து ஓதலுற்றார்
வானுலகம் வாழ மாதுமையாள் தான்மகிழ
மானாள்தெய் வானைதனை மன்றல்செய்வீ ரென்றுரைத்தார்
மலரோ னுரைகேட்டு வடிவேல ரப்பொழுது
அலர முகம்பார்த்து அகமகிழ்ந்தா ரம்மானை
தேவர் கோன்றானுஞ் செந்தில்வடி வேலவரை
ஆவலுடன் பார்த்து அறைவா ரொருவசனம்
என்மகளை மன்றல்செய்தால் ஈரேழு லோகமெல்லாம்
உண்மையுடன் வாழுமென்று ஓதி அடிபணிய
கரியமால் தன்மருகன் கந்தர் மனமகிழ்ந்து
அரிவைதெய் வானைதனை அழையுமென்றா ரம்மானை. 10

## விருத்தம்

இந்திர னீன்ற மாதை இமையவள் எனவே செய்து
அந்தரக் கங்கை ஆட்டி அறுமுகற் கமைய வாக்கிச்

சுந்தரக் கிரண சோதி துலங்கவே தூசி நீக்க
சுந்தனை மணமே செய்யக் கலைமக ளெனவே வந்தாள். 11

## நடை

மையை விழிக்கெழுதி மார்பிற் பதக்கமிட்டு
கையிற் கடையமிட்டுக் காதுக்குக் கம்மல் வைத்து
கொண்டை முடித்துக் குலாவுந் துயிலுடுத்தி
தண்டை சிலம்பணிந்து தாதிமார் தற்சூழ
கண்டோர் களிகூரக் கந்தவேளும் மகிழ
செண்டு கரத்திலங்க தெய்வானை அம்மனுந்தான்
சொர்ண நவமுத்துத் துலங்குரத்ன மாலையிட்டு
அன்ன நடைநடந்து ஆவேந்திரன் மகளார்
தேவகன்னி நாககன்னி சென்று கவரியிட
பாவைதனை நிகர்த்த பாவனைபோற் தெய்வானை
வரவே அரியயனும் மனமகிழ்ந்து கொண்டாடி
கரமிரண்டு ஆறுடைய கந்தருக்கு ஏற்குமென்றார்
நயனமோ ராயிரந்தான் நாலுதிக்கும் வானுலகில்
மயனால் அலங்கரித்த வாறுகே ளம்மானை
கும்ப மொருநிரையும் கொடிக ளொருநிரையும்
தம்ப மொருநிரையும் தாரை யொருநிரையும்
சின்ன மொருநிரையும் சிறுனா ஒருநிரையும்
வன்ன மொருநிரையும் மடைக ளொருநிரையும்
மேள மொருநிரையும் வெடிக ளொருநிரையும்
தாள மொருநிரையும் சங்க மொருநிரையும்
வாழை ஒருநிரையும் வடுக்க னொருநிரையும்
சூழ்வரத் தோரணங்கள் சுற்றி நிறைந்தபின்பு
பச்சைக் குடைகோடி பவளக் குடைகோடி
வச்சிரக் குடைகோடி வன்னக் குடைகோடி
பட்டுக் குடைகோடி பதனக் குடைகோடி
தட்டுக் குடைகோடி சரிகைக் குடைகோடி
மட்டுமித மில்லாமல் வானுலகந் தான்சிறக்க
கொட்டு முரசதிரக் கொம்புசின்ன மூதிவர
முன்னணியும் பின்னணியும் முக்கோடி தேவர்வர
கண்ணா யிரமுடையோன் கண்டு மனமகிழ
மின்னார் வரவுகண்டு வேலவருந் தான்மகிழ்ந்து
அன்னா னறுமுகனார் அறைவா ரிமையோர்க்கு



வாசமலர்க் குழலாள் மாதுமையா ளென்தாயார்
நேசமுடனே தவசு நெடுநாள் வரையிருந்து
பெற்றெடுத்த தாயும் பிதாவு மறியாமல்
உற்றமன்றல் செய்ய ஒவ்வே னெனவுரைத்தார்
கடம்ப னிவையுரைக்கக் கண்ணா யிரமுடையோன்
மடந்தையரை யிப்போ வதுவைசெய்தா லும்மாலே
உய்யும் அமரர் உலகமெனத் தாள்பணிய
கையன் மனமகிழ்ந்து கைப்பிடித்தா ரம்மானை
கோபதியு மப்போ குகனா ரடிபணிந்து
நாவசைய ஓர்வசனம் நவிலலுற்றா ரம்மானை
தெய்வானை கேள்வா தேவர்சே னாபதியே
ஐயா உமக்கு அமரர் அடிமைஎன்றும்
காத்துச் சுரரைக் கடையேற வைத்தவரே
பார்த்துச் சிவனுமையும் பாங்காய் மனமகிழ
என்னுலகை ஆண்டு இமையோர்க் கரசனென
உன்னுலக மென்று உகந்திருப்பீ ரம்மானை
அத்தருணந் தன்னில் அண்டமுழுது மாடிவர
புத்திரியுங் கந்தருமாய்ப் பொன்னுலகை ஏற்றிருந்தார்
பாரி லவுணர் பகையின்றோ டற்றதென்று
மாரியெனப் புட்ப மழைபொழிந்தா ரம்மானை. 12

## விருத்தம்

ஒலியர்க ளுழவர் செட்டி ஓதிய மறையோர் வேந்தர்
வலியவ ரெனவே சேர்ந்து வரைபக வெறிந்தோன் றன்னை
நலியவே அடிக ளாகி நாடியே தவங்கள் செய்யக்
கலியுக வரதன் றானுங் காட்சிக ளளிக்க வந்தார். 13

## நடை

பூலோக மீதிற் புகழ்பெற் றடியார்
வேலா வெனக்கூவி மேவித் தவமிருந்து
அத்தனதைக் கண்டு அடியார்க்கருள் கொடுக்க
பக்தியோடு கந்தர் பழனிதனில் வந்தனர்காண்
செந்திவடி வேலவரும் தெய்வானை அம்மனுந்தான்
வந்து பழனிதனில் வாழ்ந்திருந்தா ரம்மானை
செந்நெல் செழித்து சிறந்து வளர்ந்தோங்க
அன்ன முலாவுநதி அதனில்மலர் பூத்திலங்க

முனிவர் தவம்புரிய மூவுலகும் தான்வாழக்
கனிகள் நிலத்துதிரக் காமனுயிர் பெற்றெழும்ப
குருகினங்கள் தான்செழிக்க குயிலினங்க ளோசையிட
பருதிமதி சிறக்கப் பாவாணர் பாட்டுரைக்க
திக்கெட்டும் ஆலயமுந் திசைநான்குந் தீர்த்தநதி
மைக்கட் டுடைய மயிலினங்கள் தானாட
தெங்கு கமுகு தேமாங் கதலிகன்னல்
பாங்குடனே தேன்சொரிந்து பழனிதனிற் பெருகும்
கொண்டல் குளிர்ந்தசையக் கொடியுயர்த்த நீர்வரந்தி
அண்டர் அறிந்து அகமகிழ்ந்து கொண்டாடி
இமையோரும் மாலயனும் இந்திரரும் மாமுனியும்
அமைய ஆறுமுகற்கு ஆலயமுந் தானியற்ற
தங்க நிலத்திற் சந்தனத் தூண்நிறுத்தி
துங்கவளை ரத்தினத்தால் தொடுத்துமுத்தால் வேய்ந்தபின்பு
மாணிக்கப் பீடமிட்டு மரகதத்தால் தாழுமிட்டு
ஆணிப் பொன்னாலே அழகாய் அலங்கரித்து
உரகமணி முகப்பாம் உள்மதிலும் வச்சிரமாம்
கிரகமதைத் தேவர்கண்டு கேதாரமென் றுரைத்தார்
ஆடினார் பண்ணவர்கள் அறுமுகனைத் தான்துதித்து
கூடினார் விண்ணவர்கள் கும்பிட்டார் தெண்டனிட்டார்
சூடினார் சேய்பதத்தைத் தொழுது நமஸ்கரித்து
பாடியே புத்தேளிர் பாவையொடு வேலவரை
கோயில் தனிலிருத்தி கும்பிட் டடிபணிந்து
தாயுநீ தந்தையும்நீ தற்காத்த தெய்வமும்நீ
தீராப் பகைதீர்த்த தெய்வானை கேள்வனும்நீ
கூரான வேலேந்தும் குமரனென வணங்கி
மேலவர்கள் பூசைசெய்து விண்ணுலகஞ் சேர்ந்தார்கள்
மாலோன் மருகன் வாழ்ந்தார் பழனிதனில்
அமரருக்காய் வேலேந்தி அவுணர்குலம் வேரறுத்த
குமர குருவான குழந்தைவரக் காணாமல்
சஷ்டி விரதம் தான்பிடிக்க மாதுமையும்
திட்டமுடன் மாலயனுந் தேவர்களு மிந்திரனும்
அயிரா வதத்தினரும் அறுமுகனுந் தேவியுடன்
கயிலாய மேகக் கருத்துற்றா ரம்மானை
அவரவர்கள் வாகனமும் அவ்வவர்கள் பொன்ரதமும்
கவரி அரம்பையிடக் கயிலாயஞ் சென்றார்கள்
பவனி வரவுகண்டு பார்வதியு மீசுரனும்



தவனமுடன் வேலவரைத் தானணைத்து முத்தமிட்டு
பாலா வுனது பாரிதெய்வ யானைதனை
வேலா மணந்து மேலோரைக் காருமென்று
நாரிபரனைத் தொழுது நமதுதிரு வேலவர்க்கு
பாரியிவ ளொக்குமென்று பகர்ந்தனர்கா ணம்மானை
வாழ்த்திச் சிவனுமையும் மருமகளைத் தான்தழுவி
கார்கதிரே சன்றனக்குக் கண்ணொளியாய் நின்றவளே
உருவைப் பழித்த ஒண்டொடியே தெள்ளமுதே
திருவைப் பணிந்து செல்லுங்கோ நற்பழனி
என்ன இருவர் இளங்கிளியும் வேலவரும்
வன்ன மயிலேறி வந்தார் பழனிதனில்
கண்ணனயன் இந்திரனுங் காமனொடு தேவர்களும்
தன்னகரஞ் சென்று தானிருந்தா ரம்மானை
எங்கும் பழனிதனில் எண்ணரிய ஆலயமும்
பொங்கு நதிவிளங்கப் பூசைகளுந் தானடக்க
முனிவர் தவம்புரிய மும்மூர்த்தி தேவரொடு
பணிகள்செய்து நிற்பார்கள் பாருலக மீடேற
திண்புயத்தோர் போற்றத் தேவர்கதி பெற்றிலங்க
முன்புநான் வள்ளிசேதி மொழிவே னெனவுரைத்தேன்
ஆதலால் இப்போது அறைவேன்யா னிச்சரிதை
பூதலத்தி லுள்ள புதுமைகே ளம்மானை. 14

## விருத்தம்

பாரெலா மளந்த மாயோன் பாவை லட்சிமியா ளோடு
மாரனை நினைந்து ஞான போகமாய் வனத்தி லேகிச்
சீரெனக் கலைக ளாகத் தேவியும் பெண்மா னாகக்
காரென வனத்திற் சென்று கலவியிற் கலந்த தன்றே. 15

## நடை

பாரெல்லா மோரடியாற் பகுந்தளந்து மாயோனும்
தாரணியைக் காக்குஞ் சரிதைகே ளம்மானை
பூலோக ராசாங்கம் புரிந்த அசுரர்களை
மேலவர்கள் சொற்படிக்கு வேலவனார் தானழித்து
சூல கபாலி சுந்தரஞ்சேர் மாதுமைதன்
பாலகனுந் தான்மகிழ்ந்து பழனிதனி லிருந்தார்

பைகொண்ட நாகப் படத்தினிற் பள்ளிகொள்ளும்
வைகுந்த வாசன் வனத்திற் றிருவுடனே
சேர்ந்தணைய வென்று சேயிழையாள் பெண்மானும்
கார்மேக வண்ணன் கலைமானுமாய்ப் புணர்ந்தார்
தெய்வபிண்ட மாகையால் சேரவொரு பெண்குழந்தை
வையம் மதிக்க வந்துதித்த தம்மானை
வந்துதிக்கப் பெண்சிசுவும் மாயோனும் லெட்சுமியும்
சந்தோஷ மாகித் தங்களுரு வெடுத்தார்
கார்பூத்த அவ்வனமுங் கன்னியவள் தானுதிக்க
சீர்பூத்த வாறெனவே செழித்ததுகா ணம்மானை
ஆலிலைமேல் பள்ளிகொண்ட அச்சுதனுந் தேவியரும்
பாலகியைத் தானீன்று பாங்கா யகன்றனராம்
வனத்தில் மதலை வருந்தி அழாதபடி
கனைத்து மிருகமெலாங் காட்சிகொடுத் தாற்றினதாம்
குறவர் வனத்துதித்த குழந்தை துயில்வதற்கு
பறவையினம் வந்து பாவனைகள் காட்டிடுமாம்
சர்ப்பமொடு யாளிசிங்கம் தந்தி கரடிபுலி
அற்புதமாய் அங்குநின்று அருங்காவல் செய்திடுமாம்
இவ்வளமை கண்டு இமையோர் கணநாதர்
அவ்வையர்க்குப் பூமாரி அருளோங்கப் பெய்தனராம்
அழாமலிளங் குழந்தை ஆச்சரிய முற்றிருக்க
குழகன் மணப்பெருமை கூறக்கே ளம்மானை
தென்னிலங்கை மாபதியிற் சிற்றூர் நகரதிலே
மன்னவனாய் வேலநம்பி மந்திரிமார் தற்சூழ
ஆண்டுவரும் நாளையிலே அரிவை செவிலியரும்
மீண்டுமொரு பெண்குழந்தை வேண்டித் தவமிருந்தாள்
ஆரணியந் தன்னி லரிவை தவம்புரிய
புார்செழிக்க மானீன்ற பாவை வனத்திருந்தாள்
மதிபருதி தானும் மானீன்ற கன்னியரை
கதிபெருக்கக் கண்டு கருணைமொழி பெய்திடுமாம்
தந்தி கரடிபுலி சர்ப்பமொடு யாளிசிங்கம்
சுந்தரமாய் வந்து சோபனங்கள் செய்திடுமாம்
மதலை அழவே வானவர்கள் தான்மகிழ
குதலைதனை எடுத்துக் குற்றம் வராதபடி
பூமாது கார்த்துப் பொற்கொடியை வைத்திருக்க
வாமாதே என்று வரங்கேட்டான் வேலநம்பி



வனத்தி லனேகரொடு மாவேட்டை ஆடுதற்கு
அனர்த்த மணுகாமல் அருள்தருவீ ரெந்தனுக்கு
என்று வணங்கும் எயினர்களைத் தான்பார்த்து
பண்டு குலமுறைமை பழுது வராதபடி
மாவேட்டை ஆடி மனது களிகூர்ந்து
தேவ கதிபெற்றுக் தேமாங் கனிஎடுத்து
கொண்டுவா வென்று குறத்தி செவிலியரும்
நன்றுவர மீந்தாள்காண் நல்லமிர்த வாய்மொழியாள்
சென்றாரே நம்பிதனம் சிலைவாளி தானெடுத்து
வண்டாடுங் கார்வனத்தில் மான்வேட்டை ஆடுதற்கு
போகும் வழியிற் பொற்பாவை தோணுவதும்
காகங் கரைந்து கதிபெறுவீ ரென்பதையும்
ஏந்தலனார் கண்டு இப்புதுமை இவ்வனத்தில்
சேர்ந்ததென மகிழ்ந்து திரண்டோர் சிலைவளைத்து
சரத்தைத் தொடுக்கத் தட்டிழிந்து மான்மரைகள்
இரைச்சல் குமுறலுடன் எழுந்தோடிப் போகையிலே
பறவையொடு பன்றிமுயல் பாங்கான தந்திகளை
குறவர் தளங்கூடிக் கொன்றழித்த பின்பவர்கள்
தாகம் பெருகித் தண்ணீர் விடாயெடுத்து
தோகை செல்விவளரும் தொல்வனத் தைத்தொடர
ஆகம் களைத்து அரியவிடா யாகிஉமை
பாகன்றனை நினைக்கப் பாணியெதிர் தோன்றிடவே
தண்ணீரைக் கண்டு தாகவிடா யோடுவர
கன்னி அழுதகுரல் கானவர்கள் தான்கேட்டு
நாடி நடந்து நற்குழவி வாழுமிடம்
கூடியே கண்டு குழந்தை தனைஎடுத்து
முத்தமிட்டு வேலநம்பி மோர்ந்தணைத்து மகிழ்ந்து
கர்த்தன் செயலிதுவோ கானவர்கள் ஈடேற
வள்ளிக் கொடிக்கருகில் மகவைஇங்கு ஈன்றவள்யார்
புள்ளிமான் காற்றடமே பொற்கொடிமார் வந்ததில்லை
அண்ண லதிசயித்து அவையோர்க் கறைவதுதான்
மண்விண் அளந்த மாயவனார் மாயையதோ
வடிவேலர் தன்செயலால் மானீன்ற பிள்ளைஎன்று
அடிபணிந்து தெண்டனிட்டு அறுமுகனே தஞ்சமென
இந்தமின்னார் கந்தருக்கு எழில்மனைவி ஆவளென்று
சந்தோஷ மாகத் தான்பணிந்து வேடரெல்லாம்
கொண்டாடிக் கொண்டாடிக் குழந்தைதனை ஏந்தி

சென்றாரே வேடுவர்கள் செவிலி குதலைஅழ
வந்து எதிர்நின்று மதலை ஏதுங்களுக்கு
சிந்தை களிகூரச் செப்புமென்றா ளம்மானை
மாதிவள்தன் சொற்கேட்டு வனவேட ரெல்லோரும்
பாதம் பணிந்து பாவையரைக் கைக்கொடுத்து
தாயாரே மான்வேட்டை தானாடி நிற்கையிலே
சேயழுத சத்தம் செவிதனிலே தான்கேட்டு
அச்சமொடு சென்று ஆவலுடனே எடுத்து
பட்சமுடன் வந்தோம் பழுது வராதபடி
வளர்த்து மகவை மனமகிழ வைத்திருந்தால்
தழைக்கும் நமதுகுலந் தாரணியு மீடேறும்
மானீன்றதே ஒழிய மாதீன்ற கன்னியல்ல
வானீன்ற மாமதிபோல் வளர்த்து மகிழ்ந்திருப்பீர்
என்றுதான் வேலநம்பி இவ்வசனந் தானுரைக்க
நன்று நமக்கிப்போ நற்குழந்தை வந்ததென்று
வள்ளிக் குழியருகில் மானீன்று விட்டமையால்
தெள்ளியதோர் வள்ளிஎன்று திருநாம மிட்டழைத்து
வரிவிழிக்கு மையெழுதி மங்கைமணிக் காப்புமிட்டு
கரியமணி சங்குமணி கழுத்துக்கு ஆரமிட்டு
பவளமணி முத்துமணி பச்சைமணி மாலையிட்டு
குவளைவிழி வள்ளியர்க்குக் குற்றம் வராதபடி
சாணைத் துணியில் சந்தனம்பன் னீர்தெளித்து
பேணித் தீருநீற்றுப் பொட்டுமிட்டுத் தான்வாழ்த்தி
காணிக்கை கட்டி கந்தவேளைத் தொழுது
மாணிக்கம் போலே வளர்த்தார் குறவரெல்லாம்
வள்ளி அழாதபடி மரநாராற் தொட்டிலிட்டு
அள்ளிமலரை அதிற் பரப்பித் தான்வளர்த்தி
காட்டிலே மானீன்ற கன்னியரே என்றுசொல்லி
ஆட்டிடுவார் தொட்டிலதை ஆரணிய வேடுவர்கள்
கஞ்சமலர் மெத்தையிலே கன்னிவள்ளி தான்துயில
வஞ்சியர்கள் தாலாட்டும் வன்மைகே ளம்மானை
வள்ளிக் குயிலே மானீன்ற பாவையரே
சொல்லிற் கிளியே துடிபோ லிடையாளே
வேடுவர்க ளீடேற மேதினியோர் தான்வாழ்க
நாடு நகர்செழிக்க நல்லமழை தான்பொழிய
இமையோர் மகிழ இவ்வுலகு மீடேற
உமையாள் புதல்வர் உம்மை மணம்புரிவார்



பன்னிரண்டு கையுடையான் பாங்காக உன்னையுந்தான்
எண்ணிரண்டு ஆண்டுதனி லேற்பார்கா ணோவியமே
சத்தனச் சோலைகளும் தங்குமலர் வாவிகளும்
விந்தைபெறு மாணிக்கம் மேவிவளர் கங்கைகளும்
எங்கு மலையும் இங்குமலர்ச் சோலைகளும்
தங்கி யிருக்கும் தலமிதுகா ணென்றுசொல்லி
தாராட்டித் தாராட்டித் தார்குழலை முத்தமிட்டு
ஓராட்டி மாதரெல்லாம் ஒண்டொடிக்குப் பாலூட்டி
வளர்த்தார் குறமாதர் வானவர்கள் தான்புகழ
தளைத்தா ளறுமுகற்குத் தையல்வள்ளி சிற்றூரில்
ஆண்டுவய தொன்றிரண்டு அத்தோடு மூவாண்டு
தோன்றும்வய தீரிரண்டு சொல்வயது ஐந்தாறில்
ஓடி விளையாடி ஊஞ்சலதில் தானேறி
பாடி நடனமிட்டுப் பாவையருந் தான்வளர்ந்து
ஏழு வயதில் இணைத்தோழி மாருடனே
வாழும் வயதெட்டில் வனத்தில் மலரெடுத்து
செல்ல விளையாட்டுஞ் சீரா யுடைநடையும்
மெல்லிய ரிருவரொடு விளையாடித் தானிருந்து
பாவை வயதொன்பான் பத்துவய தானபின்பு
காவி வரிவிழியாள் கன்னிப் பருவமெழ
கண்டுவன மாதரெல்லாங் கன்னியரை முத்தமிட்டு
கொண்டு கமலமதால் குளிப்பாட்டிக் கோதையர்க்கு
காதுக்குத் தோடணிவார் கைக்குவெள்ளிக் காப்பிடுவார்
கோதிக் குழல்முடிப்பார் கொண்டைக்குப் பூவணிவார்
கண்ணுக்கு மையெழுதிக் காலுக்குத் தண்டையிட்டு
வண்ணத் துகிலுடுத்தி வாழ்த்திவன மாதரெல்லாம்
மஞ்சட் கரைத்தழுத்தி மார்புமுகந் தேகமெல்லாம்
கொஞ்சிக் குரவையிட்டுக் குறமாதர் கொண்டாடி
வாணி திருமகளோ வரந்திஅயி ராணியுமோ
பாணி ரதியோ பரமன் மருமகளோ
மங்கையரை வாழ்த்தி வனிதையர்கள் கொண்டாட
சங்கரனும் பார்வதியும் தான்மகிழ்ந்தா ரம்மானை
வனமாதர் கூடி வள்ளிக் கமிர்தமென
தினைமாவைப் பிட்டவித்துத் தேனூற்றி யேகொடுப்பார்
அருந்திச் சடங்கறுத்து அண்ணன்மார் சொற்படியே
இருந்துவள்ளி கந்தரைத்தான் எண்ணித்தி யானமுற்றாள்
அப்படியே வள்ளி அவள்வாழும் நாளையிலே

செப்பரிய கானகத்திற் றினைவிதைக்க வேணுமென்று
காடுசெடி முள்வெட்டி கனல்மூட்டி மல்லரெல்லாம்
மேடு மடுத்திருத்தி விதைத்தார் தினையதனை
விலங்கினங்கள் கூடி விதைமுளையைத் தின்னாமல்
துலங்குஞ் சரவேலி தொடுத்துக் காப்புமிட்டு
பட்சிஎலி பன்றிமுயல் பாங்கான மான்மரைகள்
இச்சித் தழியாம லெண்ணிக் குறவரெல்லாம்
காவல் வைக்கவெண்ணிக் கானவர்கள் தான்கூடி
ஆவலோடு வள்ளியை அங்குவைப்போ மெனவுரைத்து
புனவர் மகிழ்ந் துதினைப் புனத்திலொரு வீடியற்ற
வனத்தி லுயர்ந்த மரந்தேடிச் சென்றவர்கள்
சந்தனத் தூண்வெட்டிச் சதுரப்பட நாட்டி
சுந்தரமா யம்மரத்தாற் தொடுத்தார் வளைகளெல்லாம்
படிரமதாற் கைமரமும் பாங்காய் நிலைக்கதவும்
வடிவி னொளிபரவ மருக்கொழுந்தால் மேய்ந்தபின்பு
முத்த மலங்கரித்து முருகவேளைத் தொழுது
பத்திபெறு ரெத்தினத்தாற் பாங்காய் விளக்கேற்றி
அத்திர வேல்விழியாள் ஆரணங்கு தானிருக்க
சித்திரமா யோர்பரணுஞ் செய்தனர்கா ணம்மானை
மலைமேற் குறவர்கோன் வள்ளியரைத் தானழைத்து
சிலைபோல் புருவவிழித் தேனே எனமொழிந்து
நம்முடைய கானகத்தில் நாங்கள் தினைவிதைத்தோம்
உம்முடைய தோழியரோ டுற்றுறவாய் நீயிருந்து
கிள்ளைவந்து கொய்யாமற் கீரியொடு மான்மரைகள்
துள்ளி அழிக்காமற் தோழிமா ரோடெழுந்து
நாலு திசையும் நடந்து துரத்திடவே
காலுங் கடுத்தலுத்தாற் கையிற் கவணெடுத்து
வந்துதினை கொய்யாமல் மாதே எறிந்திடென
சந்தோஷ மாயுரைக்கத் தானுமவள் சம்மதித்து
சிந்தை களிகூர்ந்து செப்புமொழி தப்பாமல்
விந்தையிரு தாதியொடு விடைகொண்டா ளம்மானை
கற்பி லுயர்ந்த கன்னியர்க்கு வேடுவர்கள்
அற்புதமா யம்புசிலை அழகுபெறத் தான்கொடுத்து
வன்னக் கவணுடனே மாணிக்கக் கற்கொடுத்து
மின்னாரைத் தானழைத்து மேவும் பரணிருத்தி
ஆலோல மென்றே யானையொடு மான்மரையை
வேலா வெனநினைந்து வீசித் துரத்துமம்மா



காடை கவுதாரி கடுகிவந்து தின்னாமல்
மாடப் புறாவினங்கள் வந்துதினை கொய்யாமல்
தாரா மயில்குயில்கள் சம்புக் குருளியுடன்
வாராமல் வள்ளியரே வன்னக் கவணெடுத்து
அகலத் துரத்திவிடு மாலோல மென்றுசொல்லி
புகலப் பெருவனத்திற் பொற்கொடியே யஞ்சாமல்
கந்தர்தனை நினைந்தால் கன்னியரே யிவ்வனத்தில்
உந்தனக்கு மெங்களுக்கு மொருகுறையும் வாராது
கங்கைதனிற் குளித்துக் காங்கேயனைத் துதித்து
தங்கையரே காருமென்று தானுரைத்தா ரம்மானை
மங்கையிரு பேருடனே வன்னக் கவணெடுத்து
துங்கப் பரணதனிற் சோதியொளி போலிருந்து
வச்சிரம்போற் கைக்கவணில் மாணிக்கக் கல்வைத்து
பட்சி பறந்துவரப் பாவையருந் தானெறிந்தாள்
குருகினங்கள் கிள்ளைபுறாக் கூட்டமொடு தானகல
அருகிருந்த தாதியொடு அகமகிழ்ந்தா ளம்மானை
அண்ணமார் கண்டு அழகுசெறி வள்ளியரே
பண்ணவர்கள் தான்மகிழப் பர்ங்கிமா ரோடிருந்து
காருந் தினைப்புனத்தைக் கனிகிழங்கு தேனெடுத்து
வாரோமென் தங்கையரே மாண்புடனே நீரிருப்பீர்
என்றுவன வேடுவர்க ளேகுந் ததியதனில்
நின்று கவணெறிந்து நீள்குழலா ளோலமிட்டு
மெய்யரென விளங்கும் மேதினியோர் தங்களிலே
பொய்யாப் பழியைப் பொருத்தவென நினைந்து
நாரத மாமுனிவர் நான்முகனைப் போற்றிசெய்து
பாரதனைச் சுற்றிப் பார்த்து வலம்வரவே
சேடி யிருவரோடு சேயிழையா ளோலமிட
கோடிப் பெருமையுறுங் கோமுனிவர் கேட்டுநின்று
தாவு மயூரமதோ தையலோ வையமதில்
கூவுங் குயிலோ குரலோசை யாரதென்று
தேடிவர மாமுனியுந் தினைப்புனத்தில் வள்ளியரை
நாடியே கண்டு நான்முகனைத் தான்தொழுது
உந்திக் கமலத்து உதித்தோனே யிப்புவியில்
சிந்தைமகிழப் படைத்துத் தினைப்புனத்தில் வைத்தீரே
பஞ்சசத்தி அட்டசத்தி பாருலகிற் கற்புடையோர்
அஞ்சப் படைத்து மரியவனம் வைத்தீரே
நாலு முகத்தோனே நரபதியே மாலோனே

வேலருக்காய்ப் பெண்ணாக விரைவிற் படைத்தீரோ
வீணை கரத்திலங்கும் விமல னிவையுரைத்து
தோணு மழகுஞ் சொல்மொழியுந் தானெழுத
துறவர் மனமகிழ்ந்து தோகைவள்ளி காணாமல்
அறவர் படமெழுதும் அத்தங்கே எம்மானை
சிரத்தை யெழுதித் திருப்பாதந் தானெழுதி
கரத்தை யெழுதிக் கண்ணெழுதி வர்யெழுதி
கொண்டை குழலெழுதிக் கொங்கை நுதலெழுதி
கெண்டை வயிறெழுதி கிளிமொழியாள் சொல்லெழுதி
பல்வரிசை தானெழுதிப் பாத விரலெழுதி
வெல்லுந் துடைபிடிபோல் மெல்லிய லிடையெழுதி
வதன மெழுதி வடிவெழுதி மார்பெழுதி
மதன மறுவெழுதி வாயழகு தானெழுதி
தேமற் சுழியெழுதி தேக வுறுப்பெழுதி
காமக் கலையெழுதிக் கையில் விரலெழுதி
அங்க மெழுதி அடிவயிறு தானெழுதி
மங்கை நிதம்பமுடன் வளருந் தொடையெழுதி
காதும் நகமும் கணக்கின் படியெழுதி
ஓது முதுகெழுதி உந்திச் சுழியெழுதி
கண்ட மெழுதிக் கழுத்தெழுதி மூக்கெழுதி
தண்டை மணியெழுதி தாவடந் தோடெழுதி
ஆடை யுடையெழுதி அலங்காரந் தானெழுதி
வேட மடவாரை மெய்ய ரெழுதியபின்
பார்த்தார்' மகிழ்ந்தார் பாவனைகள் சொல்லலுற்று
வேர்த்தா ருயர்ந்தோர் வேலாவென நினைந்து
பந்தோ குமிழோ பாவையிரு தனங்கள்
ஙிந்தைபெறு முத்தணியோ மெல்லியவள் பல்வரிசை
பூகமர வட்டோ பொற்கொடியாள் கண்டமது
நாக படமொக்கும் நாரியவள் தன்னிதம்பம்
முகிலிருளை யொக்கு மொய்குழலாள் கூந்தலது
ஒயிலைரதி எனலாம் ஒளியைக் கதிரெனலாம்
மாதுநுதல் மூன்றாம் வடிவுபிறை யொக்குமென
பாதமது புத்தகத்தின் பாவனைபோல் காணுதிங்கு
இலையை நிகர்க்கும் எழுதும் வயிறதுதான்
கலையிற் சிறக்குங் கண்டத் தழகிதுவே
வாழைக் கடங்குதொடை வதனம் பெருமதியாம்
தூழுங் கரும்புத் துண்டதுபோற் கையிதுவே



கண்ணை நிகர்க்கும் கயலின் விழியிதுவே
எண்ணரிய பெண்ணுருவம் எடுத்தே எழுதலுற்றேன்
என்றார் மகிழ்ந்தார் இறைவா வெனத்தொழுது
நின்றார் புகழ்ந்தார் நேரிழையின் தன்னருகில்
வந்துநின்று மாமுனியும் வள்ளிதனைப் பார்த்து
சிந்தையுற நோக்கிச் செப்புவா ரோர்வசனம்
மானீன்ற கன்னியரே வனத்தி லிருப்பதென்ன
தேன்போன்ற சொல்மொழியைச் செவியார நான்கேட்டு
நாடியிங்கு வந்தேன் நல்லதினை மாவெனக்கு
தாடியென்று கேட்கத் தையல்மிகக் கோபமுற்று
புனந்தனிலே நிற்பீரேல் பொல்லாங்கு செய்வனென்று
சினந்தாளே வள்ளி சிரித்தாரே நாரதரும்
கண்டு வெகுண்ட கன்னியரைத் தான்நோக்கி
அண்டம் புகழ்முனி அரிவையர்க்கு மேலுரைப்பார்
கண்ணுக்குட் கண்ணே கந்தர்தனக் கேற்றமின்னே
பெண்ணுக்குட் பெண்ணான பேதையரே சொல்வேன்கேள்
மடவார் குழலே வனவேடர் நாயகமே
திடமாக விப்போ சினந்தே னதட்டுகிறாய்
என்று முனிகூற இளங்கொடியாள் கண்சிவந்து
நின்றா லுமக்கு நிட்டூரம் நேரிடுங்காண்
அண்ணமார் கண்டால் ஆக்கினைகள் செய்திடுவார்
திண்ணமுடன் மாமுனியே செல்லுமென்றாள் மெல்லியளும்
அப்போது நாரதரு மரிவைமுழு ரூபமதை
செப்பமுட னமைத்துச் சென்றார் பழனிதனில். 16

## விருத்தம்

துறவரும் புனத்தை விட்டுத் தோகைமா மயிலி லேறும்
இறைவனைத் தேடிச் செல்ல விளங்கிளி வள்ளி யாளும்
பரணதி னருகாய் வந்து பாவைதன் கரத்தை வாங்கி
குறமட மாது தானுங் குறியெல்லாங் கூற லுற்றாள். 17

## நடை

கொடிச்சி எனுங்குறத்தி கொங்கை அசைந்திடவே
பிடித்துவள்ளி தன்கரத்தைப் பார்த்துப் பலனுரைப்பாள்
வாலைப் பருவமுள்ள வஞ்சியரே செப்பிடக்கேள்
வேலருன்னை மன்றல் விரைவில் முடிப்பார்காண்

அட்டதிக்கோர் தான்புகழ ஆறுமுக வேலரொடு
மட்டளவில் லாமலையில் வாழ்ந்து குடியிருப்பீர்
ஏனம்மா வுன்மனதில் ஏக்கமொன்று தோற்றுதிப்போ
கானமதி லோர்முனிவன் கலக்கம்போ லாகுதிங்கே
தினையறுக்கு முன்பாகச் செந்திவடி வேலவரும்
உனைமயக்க வேடமெல்லா மூட்டுவா ரம்மணியே
வடக்கிற் கெவுளியொன்று வந்தநாட் டொட்டுயிங்கு
நடக்கும் முறைகளெல்லாம் நவிலுதடி மெல்லியரே
கனவுந் தலைமயக்கும் கருத்தும் பிசகுவதும்
மனமுங் கலக்கமுற்று வாடுகிறீர் பெண்ணணங்கே
வேட னொருவன் வில்லோடு தான்வருவான்
மாடமதி லேமறைந்து மவுன முடனிருப்பீர்
ஆண்டி யொருவனிங்கு ஆபரணங் கூறிடுவான்
வேண்டா மெனத்துரத்தி மேவி மறைந்திருப்பீர்
வேங்கைமர மொன்றதுதான் வேலிமருங் காய்வளரும்
தீங்கொன்று செய்யாமல் தெய்வமர மென்றுசொல்லி
உந்தனுக்குத் தெய்வ மொருவரன்றி வேறுமில்லை
கந்தரெனும் ரேகையது காணுதுகா ணென்றுரைத்து
ஆறுமுக வேலவரை அனுதினமு மேதுதித்து
நீறணிந்து வாருமம்மா நிந்தனைகள் வாராது
பிறவி யெழுவருண்டு பிதாவு மவர்களல்லோ
துறவியெனப் போவீர் தோகையரே யான்போறேன்
மெய்யென்று நம்பி விரதம் பிடித்திருந்தால்
கையன் மணம்புரிவார் கண்டுகொள்ளு மென்றகன்றாள்
மாதுவள்ளி யன்றுதொட்டு மனமகிழ்ந்து தானிருக்க
வாதுபுரி நாரதரும் வடிவே லரைத்தேடி
வந்து பழனிதனில் வரையெறிந்தோன் தன்னிடத்தில்
கந்தா கடம்பனென்று கைகூப்பி வாய்புதைத்து 18

## விருத்தம்

பண்ணவர் துணைவா போற்றி பார்வதி மகனே போற்றி
விண்ணழ லொளியே போற்றி வினைகளைக் களைவாய் போற்றி
எண்ணரி தானாய் போற்றி இந்திரன் மருகா மூன்று
கண்ணவன் புதல்வா போற்றி கர்த்தனே போற்றி போற்றி 19



## நடை

ஐயா வறுமுகனே யண்டர்தொழு நாயகமே
வையமதி லோர்வனத்தில் மங்கையரைப் போலேதான்
வானுலகுங் காணேன் மண்டலத்திலுங் காணேன்
தேனுலவு மாதுகுழல் தென்றல்முகி லென்றிடலாம்
கன்னியவள் கழுத்தைக் கமுகவட்டுக் கொப்பிடலாம்
மின்னொளிபோல் வள்ளியர்தன் மேனியழ கெனலாம்
காரிகையார் தன்விழியைக் கயல்விழிக்கு ஒப்பிடலாம்
நேரிலவள் கரத்தை நிகழ்கரும்புத் துண்டெனலாம்
நாவெடுத்துப் பேசில் நற்கிளியின் சொல்லெனலாம்
கூவு மிசையைக் குயிலோசை யென்றிடலாம்
கூறரிது மால்மருகா குறமாதின் பேரழகை
வேறொருத்தி யுந்தனக்கு வேண்டாங்காண் வேலவரே
கண்டால் மயங்கிக் கலங்கி விழுந்திடுவீர்
சென்றா லறிவீருன் சிந்தை மகிழ்ந்தணைவீர்
தெய்வானை யுந்தனுக்குச் சீரான பெண்ணுமல்ல
பொய்யாது ஐயாநீர் போயறிவீ ரென்றுமுனி
துதித்தா ரறுமுகனைத் தொழுதார் நமஸ்கரித்தார்
விதித்த குறமாதை விரும்புமெனப் பணிந்து
எழுதும் படத்தை எடுத்துமிக நாரதரும்
தொழுதுவேல் கைகொடுத்துத் துதித்தபின்பு மெய்யாவர்
நடந்தார் பொதியமலை நற்றவங்கள் செய்யவென்று
கடந்தார் பழனிவிட்டுக் கந்தருந் தென்னிலங்கை
பார்ப்பார் படத்தைப் பாவையிவ ளெவ்விடமோ
வேர்ப்பார் திகைப்பார் வேதனைகள் கொண்டிடுவார்
சிற்றூரைத் தேடித் தினைப்புனத்தில் வேலர்வர
மற்றுமிரு தோழியொடு மகிழ்ந்துவிளை யாடியபின்
வஞ்சி யெழுந்து வாழுந் தினைப்புனத்தில்
அஞ்சாமல் வள்ளியம்மை ஆலோல மென்றசத்தம்
வேலவனார் கேட்டு வேட ருருவாகி
சாலமொடு அம்புசிலை தானெடுத்து மால்மருகன்
கலைமானை யெய்துகுறை காயமெனத் தேடுவர்போல்
மலையிற்குற மாதேயொரு மானோடி வந்ததுண்டோ 850
கண்டீரே யானாற் காட்டா யதன்சுவட்டை
கொன்றுவிட்டா லுனக்குக் கொடுப்பேன்நான் பேர்பாதி
என்று முருகேச னிவ்வசனந் தானுரைக்க

நின்று வெகுண்டுவள்ளி நிந்தனையாய்க் கந்தருக்கு
வேடா உமக்குவிடை மெல்லியரோ சொல்லுவது
நாடாதே யிங்கே நடப்பாய் புனத்தைவிட்டு
தேடுங் கலைமானைத் தெரியில் வனத்தேகி
ஓடி யகன்றா லுயிர்பிழைப்பாய் வில்வேடா
நில்லாதே செல்லும் நின்றா லனர்த்தமுண்டு
பொல்லாங்கு செய்வேன் போடா புனத்தைவிட்டு
குறத்தி கொடிச்சியென்னும் குலம்பேசி யிவ்வனத்தில்
மறத்தி மதலையைப்போல் வாதுகொண்டு கேட்கவந்தீர்
மானிறைச்சி தின்னும் மடைச்சியென்று பேசுகிறீர்
தேனிருக்க மாவிருக்கத் தெவிட்டாக் கனியிருக்க
கண்டுனக்குச் சொல்லக் காரியமே தென்றுரைக்க
அண்டினேன் வள்ளியரே அணைந்து புணைந்திடுவீர்
தண்டையழகுந் தாவுங் குழலழகும்
கண்டவுடனே கலங்கி மயக்க முற்றேன்
கூடிக் குலவி குறமாதே செய்திடுவோம்
நாடியே யிவ்வனத்தில் நாமிருவர் வாழ்ந்திடலாம்
வாரு மிருபேரும் மருவி மகிழ்ந்திடுவோம்
தாரு மொருவாக்குத் தையலரே யெந்தனுக்கு
வேண்டினார் வேலவனார் வேகமுற்றாள் மெல்லணங்கும்
தூண்டினாள் கோபமதை சொல்லாத சொல்லுரைத்தாள்
காட்டிலே சென்று கலைமானை யெய்தனென்றென்
வீட்டிலே நின்று விளம்பா தகன்றிடுவீர்
அணுங்கு பன்றிதின்ற ஆணவமோ வுந்தனுக்கு
மணங்கொண்டு கன்னியரை மருவரச் செய்ததுகாண்
துஷ்டா வுனக்குச் சோலிவருங் கேலியதால்
கஷ்டப் படப்போறீர் கையில் கவணிருக்கு
வம்பாகே ளுந்தனுக்கு மமதையோ யிவ்வேளை
கம்பா லடித்துக் கலைப்பேன்நீ நில்லாதே
புனத்தி லிருக்குமிளம் பூவையரில் மோகமென்ன
மனத்தில் நினைத்ததெல்லாம் மாற்றி யகன்றிடுவீர்
வண்டாடுஞ் சோலை வாழ்கதிரை மாநகரில்
குன்றாமல் நாங்கள் குடிகொண்ட நாள்முதலாய்
தீது வந்ததில்லை திருமுருகர் தன்துணையால்
வாதுகொண்டு பேசுகிறீர் வந்தியோ நானுனக்கு
வள்ளி யிவையுரைக்க வடிவேலர் தான்மகிழ்ந்து
தெள்ளமுதே நீயுமிப்போ சேர்ந்தணைந்து முத்தமிடும்



பாவையரே யுன்னழகைப் பார்த்தால் மயக்கமது
தாவுதே வஞ்சியரே சஞ்சலத்தைத் தீருமடி
தெங்கின் குரும்பையெனச் சிறந்த தனத்தாளே
பங்குபெற்று சேர்ந்தணைந்தால் பரகதிநீர் சார்ந்திடுவீர்
புள்ளி மயிலேறும் புனிதனிவை யுரைக்க
வள்ளியம்மை தான்சினந்து வன்னக் கவணெடுத்து
எறிவேன் வனவேடா யிப்புனத்தை விட்டகலும்
அறியாயென் னண்ணர்வந்தா லடிப்பா ருனைத்துரத்தி
செப்பினாள் வள்ளியம்மை செந்திவடி வேலவரும்
தப்பாமல் வேங்கைமரம் தானானார் அம்மானை
அன்னநடை வள்ளி அம்மரத்தைத் தான்பார்த்து
என்ன புதுமையிது இப்புனத்தில் வந்ததென்று
பாங்கிமா ரோடுவள்ளி பகருமந்த வேளையிலே
வாங்குசிலை வேடர்தளம் வந்தார் புனத்தருகே
கண்டார் வெகுண்டார் கானப் பெருங்குறவர்
விண்டார் புதுமையென்று வினவினார் வள்ளியரை
தங்கையரே யிந்தமரம் தான்புனத்தில் வந்ததென்ன
மங்கையரே யுன்வதனம் வாட்டமுற்ற காரணமேன்
குறவர்கோ னிவ்வசனம் கூறவே வள்ளியரும்
முறையோ வெனப்புலம்பி மொழிவா ளொருவசனம்
அண்ணரே பாங்கியரோ டரியகிளி துரத்தி
திண்ணமுடன் நிற்கையிலே சிலைவாளி தன்னுடனே
மலைவேடன் தானொருவன் வந்து புனத்திலிப்போ
கலைஒன்றை எய்துவிட்டேன் கண்டீரோ என்றுரைக்க
சொல்லப் பயந்து துயரமுற்று யானிருக்க
பொல்லாக் கதைமொழிந்தான் போடர எனவுரைத்தேன்
வேடன் அகல வேங்கைமரம் ஒன்றதுதான்
கூடம் எனவளர்ந்து கொண்டதுகா ணண்ணர்களே
இதுபுதுமை யேயொழிய ஏதும் புதுமையில்லை
கதிபெருக அண்ணருக்குக் கன்னியவள் தானுரைக்க
கேட்டுக் குறவர்தளம் கேவலங்கள் செய்தவனை
வாட்டுவோம் தங்கையரே வடிவேலர் தன்செயலால்
தளங்களொடு வேலநம்பி தங்கையரைப் போயிரென்று
வளர்ந்த திருமரத்தை வடிக்க வெனநினைந்து
கோடரி கத்திகொண்டு கூடிப் பெருங்குறவர்
சாடு மளவில் தானனர்த்தங் கண்டார்கள்
வேடர் ஒருமித்து வேங்கைமர மிவ்வனத்தில்

வாடாமல் நின்றால் வள்ளிக் குதவியென்று
பேசி யகன்றார்கள் பெரிய தினைப்புனத்தில்
ஆசையொடு தேன்தினைமா அருந்தவென நீர்குளித்து
வந்து பசியாற மரமான வேலவரும்
தந்திரமா யோர்கிழவன் தானானா ரம்மானை 20

## விருத்தம்

வரைபக வெறிந்தோன் செட்டி மரமென நின்று மாயை
தரைதனில் நடந்து ஆணடி களர்பணி வளைய லென்ன
உரைபல கூறி வேட ருற்றிடும் வனத்தி னூடே
நரைதிரை தளர்ச்சி யாகி நவின்றனர் மணிக ளென்றே 21

## நடை

தாடி நரையும் தளர்ந்த நடையுடையும்
சூடு மணிவளையல் சொல்லரிய ஊன்றுதடி
கரத்திற் பிடித்துக் களைத்தவர்போல் வேலவரும்
சிரத்தில் மணிபைவைத்துத் தினைப்புனத்தில் வந்தவரும்
தள்ளாடித் தள்ளாடித் தந்திரமாய் நின்றுநின்று
மெள்ளமெள்ளச் சென்று வேடர் தினைப்புனத்தில்
வளையல் மணிகூறி வடிவேலர் செல்கையிலே
அழகுசெறி வள்ளியரு மண்ணமார்க் கேதுரைப்பாள்
ஆரோ ஒருகிழவன் அணிமணிகள் கூறுகிறார்
வாரா யெனவழைத்து வாங்குமெந்த னண்ணர்களே
இவ்வசனம் வள்ளிசொல்ல எயினர்குல வேலநம்பி
அவ்வை மனமகிழ அழைத்தார் கிழவனைத்தான்
விழுவா ரெழுந்திருப்பார் மேனி படபடப்பார்
அழுவார் பசிக்குதென்று அசைந்து நடந்திடுவார்
தம்பியரே இக்கடப்பைத் தானேற மாட்டேன்காண்
வெம்பாமல் வந்திடுவீர் வேண்டும் விலைநவில்வேன்
ஆண்டி இவையுரைக்க அங்குசென்று வேலநம்பி
வேண்டும் வளையலொன்று விலையதனைச் சொல்லென்றான்
முருகன் மலர்ந்து மூவுலகுந் தான்தந்தோன்
மருகன் விலைபகர்ந்த வண்மைகே ளம்மானை
கேட்கவிலை சொல்லவோ கேளாமல் சொல்லிடவோ
பார்க்க வெனைப்பகிடி பண்ணாமல் வாங்குமென்று
மாணிக்கக் கல்நூறு வைத்தால் வளையலொன்று



காணிக்கை போல்தருவேன் கானவரே வாங்குமென்றார்
கேட்டுக் குறவர்கோன் கிழவாநீ சொன்னவிலை
வாட்டமில்லை எங்களுக்கு வந்துபசி ஆறுபின்பு
வாங்கி மகிழ்வோம் வள்ளியர்க்குத் தானணிவோம்
தீங்கு வாராது தேன்தினைமா தின்னுமென்று
வடுவை நிகர்த்தவிழி வள்ளியரே வாருமிங்கு
கொடுமிவர்க்கு நல்ல குகைத்தே னுடன்மாவும்
அந்த உரைகேட்டு அன்னநடை வள்ளியம்மை
சிந்தை களிகூர்ந்து தேன்தினைமா கொண்டுவர
பண்டாரங் கண்டு பாவையரைத் தான்பார்த்து
கொண்டு வரவேண்டா முன்குடிலிற் படுக்கவிடும்
எழுந்து நடந்து இளைத்துக் கடப்பேறி
விழுந்து கிடந்துகந்தர் விளம்புவா ரோர்வசனம்
கடிந்தோர் குகைபோலே கன்னியரே உன்மனையில்
மடிந்ததார் சொல்லுமம்மா வாசலெல்லாந் தூசிருக்கு
என்ற மொழிகேட்டு ஏங்கி மனந்தளர்ந்து
அண்டர் புகழ்வள்ளி அண்ணமார்க் கோதலுற்றாள்
அண்ணரே இக்கிழவன் அருவருப்புப் பட்டிருந்து
என்னுடைய வீட்டி லிடந்தா வெனக்கேட்டார்
சொல்லுகுறாய் தங்கையரே துவண்ட கிழவனவர்
பொல்லாங்கு செய்யார்காண் பொற்கொடி அஞ்சாதே
நெஞ்சம் பதறாதே நெட்டூரம் பண்ணார்காண்
அஞ்சாம லேஅவரை ஆதரித்து வைத்திருநீ
தேனெடுத்து வாரோம் சேயிழையே இப்பொழுது
கானகத்தி லேகவென்று கடந்தார் புனத்தைவிட்டு
மலைமேற் குறவர் வனத்திலே சென்றபின்பு
சிலைபோலப் புருவவிழி செல்வவள்ளி ஆண்டியரை
வாருங் கிழவாஉன் வளையல்மணி காட்டெனக்கு
ஊரேது பேரேது உமக்குப் பொருளேது
தலைநரைத்துப் போனதென்ன தாடி வளர்ந்ததென்ன
நிலைகள் தளர்ந்ததென்ன நிசமாக ஓதுமென்றாள்
வள்ளி இவைகேட்க வடிவேலர் தான்மகிழ்ந்து
புள்ளிமான் கன்றார்க்குப் புகல்வா ரொருவசனம்
அன்னமே என்னை அறிய விரும்புமுன்னே
துன்னுபுக லிவ்வனத்திற் சூழவந்த காரணமேன்
குறவர் குலமல்லநீ குமரகுரு வேலர்குலம்
உறவாக இப்புனத்தில் உற்றிருக்குங் காரணமேன்

மூதாதை உண்டோ முன்தாதை ஆருமுண்டோ
மாதா உமக்கார் மணவாள னுண்டோசொல்
சேடன்மார் என்றுமிங்கு செப்புகிறாய் வேடர்களை
பாட்ட னெவரென்று பகருமம்மா வள்ளியரே
சொல்லுவீ ரானால் துணையாயுனக் கிருப்பேன்
நல்லமணி வளையல் நான்தருவே னுந்தனக்கு
என்னக் கிழவ னிளங்கிளியா ளேதுசொல்வாள்
அண்ணர் வருமுன்னம் அணிவளையல் காட்டுமென்றாள்
பாசிமணி வளையல் பாவையர்க்கு வேலவரும்
ஆசைகொள்ளக் காட்டி அறைவா ரொருவசனம்
மின்னே இதற்கு விலைஅதிக மாகுமாம்
என்னவிலை தருவா யிந்த வளையலுக்கு
சங்குவண்டு என்று சாற்றும் வளையலிது
பொங்குதொடி குருபாய்ப் புகலும் வளையலிது
பிடிகமென வாழ்த்திப் பேசும் வளையலிது
மடிகள்கொண்டு மன்றாடி வாங்கும் வளையலிது
ஒன்றையொன்று தள்ளாது உமக்கு எதுவேண்டும்
நன்றாய் விலைகேளும் நான்கொடுப்பே னுன்றனுக்கு
தோரை மதாணி சுடிகை பரிபுரமும்
நேரா யிருக்குதின்னும் நேரிழையே கேள்பார்ப்போம்
என்றுமெய்யாள் தன்னிடத்தில் ஈசன்மகன் கேட்க
தொண்டரென விங்குவந்த துவண்ட நரைக்கிழவர்
தினையு மிறுங்குந் தேனுந் தருவேன்நான்
புனைய வுமக்குப் புலித்தோலும் நான்தருவேன்
ஏதொன்றும் பேசாமல் என்கைக் கிணங்கியதாய்
தாவென்று கேட்டாள் தையலரு மம்மானை
வஞ்சி யிவையுரைக்க வளையல்மணிப் பண்டாரம்
மிஞ்சவே பொன்பணமும் வெகுவாய்த்தரு வீரென்றால்
உமக்கு வளையல் ஒண்டொடியே நான்தருவேன்
சுமக்கும் தினைவேண்டாம் தோகையரே என்றுரைத்து
பண்டுபணக் காரரைப்போற் பவுஷா யழைத்தார்கள்
இன்றுதானே தெரியும் இயல்பற்ற வேடரென்று
ஏன்வந் தலைந்தே னென்தலையி லேபிரமன்
வீண்வார்த்தை கேட்க விதித்தானோ வென்றுரைத்த
செட்டிதனைப் பார்த்துச் சேயிழையாள் வள்ளியரும்
மட்டிக் கிழவாநீர் வடுச்சொல்ல வந்தீரோ
நடைகள் தளர்ந்து நாடிதலை நரைத்து



உடையிழந்த பண்டார மோடும் புனத்தைவிட்டு
புரவலன் போற்பேசிப் புன்சிரிப்புக் கொண்டிருந்து
இரவல் நகைவளையல் எடுத்துப் பெரிதாக
காட்டிக் கதைபேசிக் கானவரைத் தானிகழ்ந்தென்
வீட்டி லிராமல் விரைவிலே தானெழுந்து
நடநீர் திடமாய் நளினக் கதைபொருத்தி
மடவார்க ளோடு வம்புவசை கூறவந்தீர்
வல்லவர்க ளெங்களண்ணர் வருவார்நீர் நில்லாதே
பொல்லாங்கு செய்திடுவார் போகிழவா நிற்பதென்றால்
வில்லா லடித்து வெருட்டித் துரத்திடுவார்
நில்லாதே செல்லும் நின்றா லனர்த்தமுண்டு
பல்லாண்டு கோடி பதியாண்ட முக்கோடி
கல்லாண்டு வந்தவெங்கள் கானவரைத் தானிகழ்ந்தீர்
என்றுவள்ளி சொல்லி யிருக்கக் கிழவனுந்தான்
சென்றுவிடேன் பெண்ணே சிலைவேடர் தான்வரட்டும்
பெண்ணாரே யுங்களண்ணர் பெருமையைப் பேசாதே
மண்ணி லெலிபிடிப்பார் மரம்வெட்டித் தேனெடுப்பார்
கண்ணிகுத்தி யேபறவை கடுகிப் பிடித்திடுவார்
எண்எழுத்துத் தானறியா எயினர்குலம் நீங்களல்லோ
அன்னமெனும் பண்டம் அருந்தத் தெரியாதார்
மன்னர் குலமென்றும் மகத்துவங்கள் சொல்லாதே
காடை கவுதாரி கமடமொடு பன்றிமுயல்
வேடரெனத் திரிந்து விரவிப் பிடித்தருந்து
மலையன் சிலம்பனென்றும் வரையா ளதிபனென்றும்
சிலையா லுயர்வனென்றுஞ் சினங்கொண்டு பேசாதே
மாதங்க ரென்றும் மாநிலத்தோர் சொல்வார்கள்
சாதங்கள் தின்றறியாச் சாதியென்றா ரம்மானை
செந்திவடி வேலவனார் செப்பவே வள்ளியம்மை
வந்திடட்டு மண்ணமார் வாய்பொத்த வைத்திடுவேன்
வந்த வரத்தும் வழியில் விழுந்ததுவும்
சிந்தைதனி லெண்ணாமல் சேட்டைமிகப் பண்ணுகிறீர்
ஆடி யசைந்துவிழ அண்ணமார் கைகொடுக்க
கூடி நடந்துஎந்தன் குடிசைக்குள் ளேயிருந்து
நிந்தம்போ லெண்ணி நெடுநா ளுறவினராய்
குந்தி யிருந்து குலம்பேச வந்தீரோ
ஆனாலும் நீர்தான் அறிவிற் குறைந்தவர்காண்
போனாரே யண்ணன்மார் பொறுத்திரு வந்திடட்டும்

வேந்தா புரந்தரனே வேலாவெனப் புலம்பி
நேர்ந்தாளே யண்ணர்களை நிமிஷம் வருவதற்கு
ஓடினாள் வள்ளியம்மை யுற்ற கடவலடி
தேடினா ளண்ணர்களைத் தேங்கி நின்றா ரம்மானை
கந்தரிவை யறிந்து கன்னியரே நான்போறன்
உந்தனுக்கும் எந்தனுக்கும் ஒருகுறையும் வேண்டாங்காண்
அண்ண ரண்ணரென்று ஆங்காரம் பேசாதே
மின்னே யவர்திறமை யறிவேன் விளம்பாதே
குறம்பேசிக் கானவர்கள் குகைத்தே னெடுத்திடுவார்
திறம்பேசிச் செப்புகிறாய் தெரியுமுங்க ளண்ணர்குலம்
வாருமென் வள்ளியரே வயிறு பசிக்குதம்மா
தாருந் தேன்மாவுந் தண்ணீரு மெந்தனுக்கு
கேட்டுமிகப் பண்டாரம் கிடந்து மகிழ்வாராம்
தீட்டும் விழியுடைய செல்விவள்ளி தான்பார்த்து
வாதிற்கு வந்தீரோ வளையல்விற்க வந்தீரோ
சூதிற்கு வந்தீரோ சோலிசெய்ய வந்தீரோ
பகிடிபண்ண வேண்டுமென்றும் பணக்கார ரில்லையென்றும்
மகிடிவித்தைப் பையை வடிவாகக் கட்டிவைத்தீர்
வாகிழவா வுன்றனக்கு வயிறு பசிக்குதென்றீர்
மாவருந்திச் சென்று மடுவிலே நீர்குடித்து
ஓடிப் பிழைத்து உன்னூரைத் தேடுமென்று
வாடி மனங்கருகி மங்கையரும் மாவெடுத்து
இந்தாரும் தேன்தினைமா எடுத்து அருந்தியபின்
அந்தா மடுவிருக்கு அங்குசென்று தண்ணீருண்டு
வந்த வழிதேடி வளையல்மணிப் பையெடுத்து
முந்த நடவுமென்று மொழியவள்ளி வேலவரும்
தின்னு மளவில் செருமிப் பொறுத்ததுபோல்
கன்னியவள் காணக் கண்பிரண்டாற் போலிருந்து
வாவியுங் காணேன் வழிகாணே னென்றழுது
பாவியரே எந்தனக்குப் பாங்காய்ப் பொறுக்குதடி
நாவி கலந்தீரோ நான்சாக வென்றசைய
ஆவி யகலுமென்று அழகுவள்ளி தாவியபின்
பொய்கைக் கரையருகில் பொற்கோடி கொண்டுசெல்ல
தையலரே மாவில்நஞ்சி தான்புரட்டித் தந்தீரோ
கிறுதி வருகுதடி கிளம்பி நடவாதே
இறுதி முடியுதென்று இருந்தார்கா ணம்மானை
ஏங்கினார் வேலவனார் இளைத்தார் கழுத்தசைத்தார்



தூங்கினா ரப்போது தோகையரு மேதுசொல்வாள்
பாங்கியரு மில்லை பார்வனத்தி லெந்தனுக்கு
ஏங்கி யழுது என்செய்வே னென்றுரைத்து
அண்ணரையுங் காணேன் ஆருதவி யெந்தனுக்கு
பண்ணவரே காருமென்று பரதவித்து வள்ளியரும்
ஆல மருந்திடுகில் ஆயாசந் தீருமென்றாள்
வேலர் மனமகிழ்ந்து மெல்லியரைத் தான்நோக்கி
கிழவன் கிழவனென்று கீழ்த்தரமாய்ப் பேசினையே
அழகா யுனையணைய ஆகாதோ வள்ளியரே
எனக்கும் உனக்கும் இணங்குங்கா ணோவியமே
சினக்காம லென்னைச் சேர்ந்தணைந்து முத்தமிடும்
சீறிச் சினந்து சிந்தனைகள் செய்யாதே
கூறிய புன்சிரிப்புக் கோதையரே கொண்டணைவீர்
உந்தன் கவலை ஒருநாளும் மாறாது
எந்தனைநீர் சேர்ந்தணைந்தால் எந்நாளும் வாழ்ந்திடுவீர்
பாவையரே யுன்னைப் பாங்காக வைத்திருப்பேன்
தாவி யணையச் சம்மதங்கள் சொல்லுமென்று
முருகன் இவையெடுத்து மொழியவே வள்ளிமனம்
கருகித் தளர்ந்து கந்தா வெனநினைந்து
தாதவிழும் மாதுகுழல் தையலரு மப்பொழுது
தீது வசனம் செப்பாதே யெந்தனுக்கு
ஆறு முகனை அனுதினமுந் தான்நினைந்து
நீறு தரித்து நீள்தவசு செய்திருக்க
தாதையைப்போ லிங்குவந்து தார மெனநினைந்து
வாதுகள் கூறாதே வாரி யருந்துமென்றாள்
மின்னா ருரைத்தமொழி வேலவனார் தான்கேட்டு
அண்ணா வெனநினைந்தா ரம்பிகை யார்தனையன்
என்ன புதுமையென்று எண்ணி யறிந்தவுடன்
கன்னி மனதைக் கலக்க வெனநினைந்து
முறம்போ லிருசெவியும் மூடுதுதிக் கையுடனே
திறம்பெரிய யானையெனத் தினைப்புனத்தி லேகவென்று
மாதங்கந் தூங்கல் வாரணந்தோல் வல்விலங்கு
வாதெறும்பி யும்பல் வயமா புழைக்கைதும்பி
ஒருத்தல் கும்பிநாகம் உவாகளிறு பூட்கைகரி
பெருத்த மதகரியாய்ப் பெருமரமெல் லாம்முறித்து
சீறிக் கைஊதித் தினைப்புனத்தி லேவரவே
வீறிட்ட தட்டி வேழம் வருவதைத்தான்

கண்டாளே வள்ளியம்மை கலங்கி நடுக்கமுற்று
அண்டர் துதிக்க அறுமுகனே யென்றலறி
ஓடி மரத்தி லுற்றொழிக்க வேழமது
சாடி யடிப்பதுபோற் தையலரைத் தேடிவர
ஐயோ முறையோவென் னண்ணரென வேழமது
கையூதிக் காட்டிக் கடுமரமெல் லாம்பிடுங்க
மாதுநல்லாள் வள்ளியம்மை மணிவளையல் பண்டாரம்
பாதம் பணிந்துஎன்னைப் பாதுகா ரென்றழவே
கும்பி குளறிக் கும்பமசைந் தசைந்து
உம்பல் நடக்க ஒண்டொடியாள் தான்பதறி
மரத்தில் மறைய வாரணமு மங்குசெல்லும்
சிரத்தில் கரத்தைவைத்துச் செந்திவே லென்றோடி
ஆடு கொடிதேடி அரிவையருந் தானேற
கோடு தனையுயர்த்திக் கூச்சலிட்டுத் தானதட்ட
வாடி மனங்கருகி வள்ளியருந் தானிறங்கி
ஓடிவர வேலவரும் ஒண்டொடிக்கு மேதுரைப்பார்
கடம்பன் வருவதுண்டோ கன்னியரே யிவ்விடத்தில்
இடும்பி எனவுன்னி ஏனலைந்து வாடுகிறாய்
வல்விலங்கு அந்தா வருகுதுபார் வுள்ளியரே
நில்லாமல் என்னிடத்தில் நேரிழையே யோடுமென
தாலவட்டம் வீசித் தந்திவரும் நேரமதில்
சாலமொடு கந்தர் தடுப்பதுபோற் சத்தமிட
குஞ்சரந் தேங்கிநின்று கோதையரைப் பார்த்திடவே
வஞ்சியரே யோடுமென்று வடிவேலர் தானுரைக்க
அபய மபயமென்று ஆண்டியர்கள் தாள்பணிய
உபயப் படுவீரோ உம்மை மணம்புரிய
சொல்லுங் கரியைத் துரத்துவே னிப்பொழுது
பல்லோர் புகழப் பாருலகி லேயிருப்போம்
கெடுதி வருமுன்னங் கிளிமொழியே வள்ளியரே
சடுதியொடு சொல்லும் தந்திதனை யான்தானும்
ஓடும் படிதுரத்தி உந்தனைநான் கார்த்திடுவேன்
கூடுவீ ரென்றுசொல்லக் குறமாது தானழுது
அரன்மகனே கங்கைமைந்தா ஆண்டவனே கடம்பா
சிரமதனி லேபிரமன் தீங்கெழுதி வைத்தானோ
தாரகச் செற்றோனைத் தான்பணிந்து மன்றல்செய்ய
நேராக நேர்ந்து நினைந்திருந்தே னென்றழுதாள்



அழவே குழகன் அரிவையரைத் தான்வாழ்த்தி
துழவன் மருகன் சுயரூபங் காட்டலுற்றார்
இராச உருப்போலும் தேவ குருப்போலும்
நிராசரங்க ளெங்கும் நிறைந்து ஒளிபரவ
காட்டி மகிழ்ந்து கந்தவேள் வள்ளியரை
கூட்டி மறைந்தார் குறவர்கோன் தேடலுற்றார். 22

## விருத்தம்

பரணதி லிருந்த வள்ளி தவத்தினாற் பரம னாலே
சரவணை தனிலு தித்த சண்முகன் பின்னே செல்ல
மரமது வெட்டித் தேனும் கனிகொடு வந்து வேடர்
கரமது சிரமேற் கொண்டு கானமே தேடிச் சென்றார். 23

## நடை

தேனுங் கிழங்குந் தெவிட்டாக் கனிகளெல்லாம்
வேணும் படியெடுத்து வேடுவர்கள் தான்வரவே
கங்கையெனும் பொய்கைக் கரையருகிற் பார்ப்பளவில்
தங்கையரின் காற்சுவட்டைத் தானிருக்கக் கண்டவர்கள்
மடந்தைஎனும் வள்ளியம்மை வாரதில்லை யிவ்விடத்தில்
நடந்தறிவோ மென்று நற்புனத்தில் வந்தார்கள்
அன்னமெனும் வள்ளி அங்கிருக்கக் காணாமல்
மன்னனொடு வேடுவர்கள் வனமெலாம் தேடலுற்றார்
செப்பரிய மாணிக்கஞ் சேர்ந்திருக்கும் சந்நிதியின்
தப்பாமற் தேடித் தானலைந்து கானவர்கள்
சென்றார் கதிரைமலை திக்கெட்டுந் தேடவென்று
கன்றித் தடங்களையும் கண்டே யழுதழுது
தங்கையரே யென்று சஞ்சலங்கள் கொண்டுநின்று
மங்கையென வேலவனார் மணஞ்செய்து கொண்டாரே
திங்கள் தனையணியும் சிவனார் மகனுடனே
எங்களையும் நீமறந்து ஏகினையோ தங்கையரே
கந்தன் கடம்பனென்று கனவு நினைவதிலும்
எந்தநாளும் மறவா திருந்ததினாற் சென்றீரோ
தேடித் தவம்புரிந்து செந்தில்வடி வேலரொடு
கூடிக் கதிரைமலைக் குகையிற்குடி கொண்டீரோ
வரையேழுந் தேடி வள்ளியரைக் காணாமல்
தரையிலுருண் டுருண்டு தங்கையரே என்றழுதார்

அழுதழுது விண்டுவிட்டு அன்னவர்கள் தானிறங்கி
பொழுது மறையுமுன்னம் போவோ மெனநடந்து
வாற வழிதனிலே வஞ்சியரைக் காணாமல்
சேறு தனில்நடந்து தேம்பிப் புலம்பலுற்றார்
வாவிதனிற் கயல்காள் வள்ளியரைக் கண்டீரோ
தாவும் மயில்காளென் தங்கையரைக் கண்டீரோ
கூவுங் குயிலினங்காள் கோதையர்கள் வந்ததுண்டோ
மேவும் முகிலினங்காள் மெல்லியரைக் கண்டீரோ
மானி னினமே மலைக்காட்டு நங்கணமே
தேனினிய வாயாள் செல்வவள்ளி யாரணங்கை
கண்டீரோ சொல்லுமென்று கானவர்கள் தான்புலம்பி
தண்டுள மால்மருகன் சண்முகனே தஞ்சமென்று
வந்தார் தினைப்புனத்தில் வள்ளியவ ளில்லையென
நொந்தா ரழுதார் நூதனம்போ லாகுதென்று
தேடாக் கனியே தெவிட்டாத தெள்ளமுதே
வேடர் புனத்தைவிட்டு வேலரொடு சென்றாயோ
பரணதனைப் பார்த்துப் பாவைய ளில்லையென
தரணிபுகழ் வேடரெல்லாந் தானழுதா ரம்மானை
அழுதகுரல் மாற அசரீரி யொன்றுநின்று
தொழுது கடம்பனொடு தோகைசென்றாள் தேடாதீர்
சென்றாளே வள்ளியம்மை தேடாமலே மகிழ்ந்தால்
வண்டாடு மிப்புனமும் வாழுமென்று சத்தமிட
கும்பிட்டார் வேடுவர்கள் கூத்தாடி னார்மகிழ்ந்தார்
அம்புவில்லை வீசி ஆர்ப்பரித்து ஆடியபின்
தித்திதவில் தாரை தேவதுதி போலார்ப்ப
சுற்றிக்கதிர் காமமெங்கும் தோரணமும் தாநிரைத்து
கொத்தாலே பந்தரிட்டுக் கோயிலென்று வேடுவர்கள்
நித்தந் துதிக்க நினைந்துகரங் கூப்பினராம்
மானிறைச்சி தேனும் வனத்தில் தினைமாவும்
தானெடுத்துக் கொட்டுவத்தில் சண்முகர்க்கும் வள்ளியர்க்கும்
வைத்து வணங்கி வடிவேலரைத் துதித்து
அத்தானே தங்கையென்று ஆடிப் பவுரணையில்
மாணிக்கக் கங்கையிலே வந்துநீ ராடினராம்
காணிக்கை கொண்டு கந்தருக்கு வைத்தனராம்
வைப்பார்கள் கும்பிடுவார் வாய்புதைத்து நின்றிடுவார்
அப்பா வறுமுகனே ஆரணங்கே வள்ளியென்று
உங்களைப்போல் தெய்வம் உலகத்திற் கண்டறியோம்



எங்களையுங் கார்த்து இரட்சிக்க வேணுமென்று
கானவர்கள் போற்றிக் கடுகப் புனத்திருந்தார்
வானவர்கள் புட்ப மழைபொழிந்தா ரம்மானை
மயிலேறுங் கந்தரவர் வள்ளியரைத் தானோக்கி
ஒயிலே ஒருவசனம் ஓதக்கே ளிவ்வேளை
வல்லவரா முங்களண்ணர் வனமெல்லாந் தேடியபின்
சொல்லரிய வாகாயச் சோதி மொழியறிந்து
கங்கை யருகுதனில் கனிதேன்மா கொண்டுவைத்து
மங்கையரே கோயில்கட்டி வணங்குவதைப் பார்த்தீரோ
காம மகற்றுங் கதிர்காமச் சந்நிதியில்
போவோ மிருபேரும் பொற்கொடியே வாருமென்றார்
ஆதிபரன் மைந்தன் அன்னநடை வள்ளியோடு
சோதிவளர் மாமலையைத் துதித்து வரும்போது
சொரூப மகற்றிச் சுற்றிக்கதிர் காமமெங்கும்
அரூபி யெனவிருவர் அமர்வோம் எனநினைந்து
பார்த்தனர்கள் கொத்துப் பந்த ரழகதனை
நேர்த்தி எனக்கண்டு நீங்கோம் எனவிருந்தார்
அன்றே தொடுத்து அதிசயமா யோர்விளக்கு
குன்று தனிலிருந்து கொண்டெரிந்த தம்மானை
மள்ளர் எழுந்திருந்து மலைமேலே பார்ப்பளவில்
தெள்ளுதமி ழிந்துமதம் சேர்ந்ததென்று ஆடியபின்
நாளுக்கு நாளாய் நற்கனியும் தேந்தினைமா
சூழப் படைத்துத் துதிப்பார்கள் வேடுவர்கள்
கண்டுமகிழ் வாரிருவர் கானவர்கள் செய்பூசை
என்று முவந்தே யிருந்தார்கா ணம்மானை
சாற்றரிய கந்தரோடு தையலெனும் வள்ளியரும்
தோற்றப் படாமல் சுயரூபத் தோடிருவர்
வருவார் கதிரைமலை வானவர்க்கா யம்மானை
பிரியார் கதிர்காமம் பெருமையுற வாழ்ந்திருப்பார்
தங்க நிலமும் சந்தன மாமலையும்
எங்கும் மலர்பூத் திலங்குமிந்த மாபதியில்
கங்கைதனில் மாணிக்கம் கருணையொடு தான்விளையும்
பங்கமில்லா வெண்ணீறு பார்மலைபோல் தோணுவது
கண்டு களித்துக் காங்கேயரும் வள்ளியரும்
என்று மகலா திருப்போம்நா மிவ்விடத்தில்
ஆடுவோங் கங்கைநீ ரணிவோந் திருநீறு
பாடுவோம் நாங்கள்கொத்துப் பந்தருக்குள் வந்திருந்து

மானிடர் காணாமல் மறைவா யிருபேரும்
கானவர்கட் கெல்லாங் கருணை கொடுத்திடுவோம்
வானவர்கள் கூடி வாழ்கதிரை மாமலையில்
தேனேஎன் வள்ளியரே தெவிட்டாத தெள்ளமுதே
ஒன்பது ரத்தினத்தால் ஓதரிய ஆலயங்கள்
அன்போ டியற்றி அதற்கு மதிலிழைத்து
சிங்கா சனமமைத்துத் திருமாலும் வேதாவும்
மங்கா மணிவிளக்கு வைத்து வணங்குவதை
பார்த்தீரோ எந்தன் பைந்தொடியே யிப்போது
காத்திரமாய் விண்ணவர்க்குக் கருணை கொடுப்பதற்கு
ஓடிக் கதிரைமலை உற்றிருப்போம் வள்ளியரே
பாடிக் கதிர்காமப் பந்தலுக்குள் வந்திருப்போம்
அகலாமல் நாங்கள் அங்குமிங்குஞ் சென்றிருந்தால்
புகழாய் நமக்குப் பூசை புரிந்திடுவார்
இவ்வார்த்தை வேலர்சொல்ல இளங்கிளி ஏதுசொல்வாள்
ஒவ்வாதே எங்கள்சிற்றூர் உங்களுக்கு வேலவரே
தலைமே லுனது தாளிணையைப் பூண்டுகொள்வேன்
மலைமே லிருந்திறங்க மாட்டேனென்றாள் வள்ளியரும்
அப்படிநீர் சொல்லாம லங்குமிங்குஞ் செல்வதற்கு
ஒப்பிடுவேன் கேளும் ஒண்டொடியே யிப்போது
தேவரெலாங் கண்டுதொழத் திருமலையி லேயிருப்போம்
பூவுலகோர் வந்துதொழப் புகழ்ந்ததிருச் சந்நிதியில்(1300
உறைவோ முலகோரு முற்றவிமை யோர்காண்
நிறைவே னறிவீர் நீங்கா தொளியாக
என்றுவடி வேலர்சொல்லி யிருக்கும் தருணமதில்
சென்றுசிலை வேடுவர்கள் தேனெடுக்கப் போம்வழியில்
வள்ளி சுவடும் வடிவேலர் தன்சுவடும்
வெள்ளையானை காற்சுவடும் வேடுவர்கள் கண்டுநின்று
தங்கையரைத் தான்நினைந்து சண்முகனைப் போற்றிசெய்து
உங்கள் திருவருளை ஊழிமுடி வாகுமட்டும்
அப்பனே காட்டு அரிய திருப்பதத்தை
எப்போது காண்போம் என்றனர்கா ணவ்வளவில்
நடந்து மலைமேலே நற்கனியும் தேனெடுத்து
கடந்தார்கள் சிற்றூர்க்குக் கானவர்க ளம்மானை
சொற்பயிலும் மின்னாரும் தோகைமயில் வேலவரும்
பொற்பதியிற் தர்க்கமிடும் புதுமைகே ளம்மானை 24



## விருத்தம்

சரவண பவனும் வள்ளி தன்னையே நோக்கி யெந்தன்
விரகமே தீர்ந்த திப்போ மேலவ ளிடத்திற் செல்ல
வரமது வளித்து நீரும் மகிழ்ச்சியா யிருப்பீ ரானால்
பரகதி பெறுவீ ரென்று பகர்ந்தனர் மனைவி யோடும்.25

## நடை

ஆடரவு தானணியும் ஆதிசிவன் மைந்தனுந்தான்
வேடமட வாருடனே விளம்புவா ரோர்வசனம்
தேனலரும் மாதுகுழல் தெய்வானை யம்மனுந்தான்
காணாமல் தேடிக் கதறுவாள் வள்ளியரே
வந்துவெகு நாளாச்சே வாழ்கதிரை மாநகர்க்கு
சிந்தை கலங்கியெந்தன் தெய்வானை தானழுவாள்
போக விடைதாரும் பொற்கொடியே மாதரசே
தாகவிடாய் போலத் தவத்தினர்கள் தேடுவரென்
றாறுமுக னீதுரைக்க அன்னநடை வள்ளியம்மை
சீறிச் சினந்தெழுந்து தெய்வானை யாருமக்கு
மனைவி யொருத்திஎன்றால் மறுதாரங் கட்டுவரோ
கனவிலுந் தான்நினையார் காசினியோ ரானாலும்
அம்புவியோர் தங்களுக்கு அரிவை யிருவருண்டோ
நம்பியே னுன்னை நற்பதவி சேரவென்று
கானா ரிவையுரைக்க வடிவேலர் தான்மகிழ்ந்து
தேனே யுமக்குமொழி செப்புகிறேன் கேட்டிடுவீர்
முன்நா ளெமக்கு மும்மூர்த்தி தேவரெல்லாம்
மின்னார்தெய் வானைதன்னை விவாகம் முடித்தார்கள்
அந்தநாட் டொட்டு அவளாசை நான்மறவேன்
சிந்தை மகிழ்ந்தனுப்பும் தெய்வானை யாரிடத்தில்
மாசில்லா நீள்பழனி வாழ்நகர மாரணங்கே
நேசமொடு போய்வாறேன் நில்லுமென வுரைத்தார்
பச்சை மயிலேறும் பகவானு மீதுரைக்க
அச்சமில்லா வள்ளி யாரணங்கு மேதுரைப்பாள்
அழகில் மிகுந்தவளோ அண்ணமா ருள்ளவளோ
கிளையி லுயர்ந்தவளோ கீதம் படிப்பவளோ
என்னைப்போ லேயழகாய் இருப்பாளோ தெய்வானை
உன்னைப்போல் தந்திரியை ஒருவரையுங் கண்டறியேன்

தார மிரண்டானால் தாரணியில் மானிடவர்
வார மெனவென்று வகுப்பார்கள் யானறிவேன்
புத்தியில்லா வார்த்தை பொருத்திமிகப் பேசுகிறீர்
சத்தியமா யுன்னைத் தான்விடவும் மாட்டேன்காண்
போனா லுமக்குப் புறம்பாக நான்வருவேன்
ஆனா லிதுபாவம் அவள்வரட்டு மிவ்விடத்தில்
நாங்க ளிருபேரும் நன்மையா யுன்றனக்கு
பாங்குடனே தானிருக்கும் பாவனைகள் செய்திடுவோம்
ஒன்றா யிருந்துமக்கு ஊழியங்கள் செய்வேன்நான்
மன்றாடி னாலும் வாழ்பழனி போகவிடேன்
மாற்ற முருவாகி மரமாகி நற்புனத்தில்
தோற்றி எனையெடுத்துத் துயரப் படுத்துவதேன்
இந்தமொழி வள்ளிசொல்ல ஈசன் மகன்மகிழ்ந்து
சொந்தமோ நானுனக்குச் சோலிகள் செய்யாதே
உற்ற புகழுடைய ஓவியங்காண் தெய்வானை
சற்று மவளாசை தவிரேன்காண் மாதேகேள்
வாழும் புவியிலுனை மன்றல்செய்தேன் என்றறிந்தால்
நாளு மமரரென்னை நகைத்துப் பழித்திடுவார்
மங்கையரே கேளும் வாழுமந்த மாபழனி
சங்கையொடு போகவரந் தாருமென வள்ளியம்மன்
கோபித்துக் கண்சிவந்து கோபமுற்றுத் தானெழுந்து
தாவித் துரத்திடுவேன் தையல்தெய் வானைதன்னை
வரட்டு மவளிங்கு வாதாட வேண்டாங்காண்
திருட்டுக் கதைபிணைத்துச் செப்பாம லிங்கிருப்பீர்
சந்ததியை யான்வெறுத்துத் தளிர்வனத்தி லும்மோடு
வந்தே னெனமகிழ்ந்து வருத்துவதும் ஞாயமதோ
பெண்கட்டி என்றறிந்தாற் பிரியப்பட மாட்டேன்
கண்கட்டி வித்தையைப்போல் காட்டி எனைமயக்கி
தந்திரமாய் என்னைத் தானணைய வேணுமென்று
சுந்தரமாய் வேடமெலாந் தொடுத்துப் பிணைத்தபின்பு
தட்டி எடுத்தீரே சங்கை குறைக்கவென்று
விட்டுப் பிரிந்தீரேல் விழுவேனிக் கங்கையிலே
உனக்குமதிப் பில்லாமல் ஒருபெண் இருந்திடவே
கனக்கப்பெண் வேணுமென்று கருக்குவது நீதியதோ
பழனி பழனியென்று பதறிமிகப் பேசுகிறீர்
கழனி நதிவந்து கலக்குமோ வேலவரே
மாணிக்கம் முத்து வைரம் வைடூரியங்கள்



ஆணிப்பொன் வெள்ளிதங்கம் அறத்திலுயர் ஈழமுடன்
செந்நெல் வரகு தினையெறுங்கு எள்ளுடனே
கன்னல் கதலி கமுகுபலாத் தெங்கினொடு
அரசு புன்னைவம்மி அத்திவன்னி யால்மருது
வரிசை வரிசையதாய் வகுத்திருக்க விப்பதியில்
நீதியில்லா நீள்பழனி என்றுமிகச் செப்புகிறாய்
கோதில்லா விப்பதியைக் குற்றமென்று பேசாதே
மானிடர் கூடிவந்து வணங்குவார் பார்த்திருநீர்
தேனடருஞ் சோலைத் திகழ்காந்தி சொல்லரிது
இப்பதியில் மாணிக்க மெங்கும் நிறைந்திருக்க
அப்பதிக் கேகவென்று ஆபத்துக் கொள்ளாதே
கதிரை மலையும் கதிர்காமச் சந்நிதியும்
பதியிரண்டுங் காணாதோ பழனிக்கேன் போவதுண்டு
வைப்பாட்டி யார்காண் மனையாட்டி யாருமக்கு
எப்பாட்டி யானென்று எடுத்துரைப்பீ ரென்றழுதாள்
வாது புரியவள்ளி வடிவேலர் தான்பார்த்து
நீதியில்லா வார்த்தை நிகழ்த்தாதே மாதரசே
பொறுக்கவறி தாகுதுநீர் புகலும் மொழியதனை
வெறுப்பே னுனையினிநான் விளம்பாதே வீண்மொழிகள்
நிதியந்தா வென்றேனோ நிந்தனைகள் செய்தேனோ
நதியொன் றொழியஇங்கு நாலேழு நதியுமங்கு
இருக்கப் பழனிதனி லிலங்குமென்று வள்ளியர்க்கு
விருப்புற் றகமகிழ்ந்து விளம்புவா ரம்மானை
இந்திரனார் புத்திரியை இங்குவரச் சொல்லுகிறீர்
அந்தரத்தோ ரிங்கு அனுப்புவரோ ஆரணங்கே
சொல்லா மொழியைத் தோதகமாய்ப் பேசாதே
கல்லோதா னுன்மனது கரையாதோ இப்பொழுது
வேத மழிந்தாலும் விண்ணோ ரழிந்தாலும்
ஏதும் புகலாமல் என்னை யனுப்பிவிடும்
சொன்னமொழி தட்டாதே தோகையவள் தேடிடுவாள்
என்னை யனுப்பிவிடும் ஏகியிங்கு வாரேனென
இருவரும் தர்க்கமிட்டு இருக்குந் தருணமதில்
வரிவிழியாள் தெய்வானை வடிவேலர் எங்கேயென்று
தேடிப் பழனியெங்குந் தெரிவையரு மாத்திரமாய்
ஓடித் தவத்தினர்க்கு உற்றமொழி கூறிடுவாள்
முன்பொருநாள் நாரதரும் முக்கணனார் புத்திரரும்
அன்புடனே பேசி அகமகிழ்ந்தார் கண்டிருந்தேன்

அன்றுதொட்டின் றுமெந்த னன்பனைக் காணவில்லை
கொண்டுதரு வீரெனவே கும்பிட்டாள் தெய்வானை
மாமணியாள் கைகூப்ப மாணிக்க வாசகனார்
ஆமெனவே ஞாலமதால் ஆராய்ந்து பார்க்கலுற்றார் 26

### விருத்தம்

அருந்தவர் மகிழ்ந்து தெய்வ யானையி னடியைப் போற்றி
தெரிந்திடக் கடம்பன் தன்னை சிந்தை யைம்புலனை யொன்றாய்ப்
பொருந்திட வடக்கி யோகம் புரிந்தவர் பார்க்கும் போது
சொரிந்தது மயிலும் வேலுந் துணைவியோ டிலங்கை தன்னில் 27

### நடை

பஞ்சப் புலனைப் பகுப்பா யொருப்படுத்தி
நெஞ்சி லடக்கி நினைந்தார் கடம்பனைத்தான்
செப்பரிய பூவுலகில் தென்கயிலை மாநகரில்
வைப்பாட்டி வள்ளியுடன் வடிவேலர் தானிருக்க
கண்டு மகிழ்ந்தார் கதிரேசன் வாழ்பழனி
குன்றுதனைக் காத்துக் குமரேசன் நிற்பதையும்
தேவாதி தேவரெல்லாம் சிறந்ததொண்டு செய்வதையும்
கோவேந்தர் பிற்காலங் கோயில்கட்டி வைப்பதையும்
என்று மகலாம லிலங்கைதனைக் காப்பதையும்
பண்டு வினையகற்றும் பாவனையும் ஞானமதால்
ஆராய்ந்து பார்த்து ஆவலோடு கைகூப்பி
காரா யெனையென்று கண்விழித்தா ரம்மானை
விழித்தார் எழுந்தார் வீழ்ந்தார் நமஸ்கரித்தார்
செழித்தார் திருப்பாதம் சேர்ந்தோ மெனநினைந்து
புந்தி மகிழ்ந்து புளகிதங்கள் கொண்டெழுந்து
எந்தன்திருத் தாயாரே என்றுதெய்வ யானைதன்னை
வணங்கி யுமது மணவாளன் தென்கதிரை
இணங்கி மனைவியுடன் இருக்கிறா ரம்மணியே
அப்பதியை விட்டு அகலா ரொருநாளும்
இப்பதியில் நாங்கள் இருப்பதினா லென்னபலன்
வானவரு மிந்திரரும் மாதுமையும் லெட்சுமியும்
பானுமதி மாலயனும் பணிவிடைகள் செய்திருக்கார்
கன்னியர்கள் கூடிக் கங்கைநீர் தானாடி



பொன்னுலக மென்று புகழ்ந்து மகிழ்ந்திருக்கார்
வரத்தா லுயர்ந்த வல்லசுரர் மாமலையில்
கரத்தை சிரத்தில்வைத்துக் கணங்கள் குவிந்திருக்கு
கஞ்சமலர் வாவிகளும் கங்கைநீ ரோடைகளும்
துஞ்சா நிலைமைகொண்டு சூழ்ந்து வளைந்திருக்கும்
கொத்தால் கோயில்கட்டி கொள்தினைமா கொண்டுவைத்து
அத்தானே என்றழுவ ரங்குநின்று போற்றுகிறார்
வாவிதனிற் கயல்கள் மகிழ்ந்துவிளை யாடுவதும்
கூவுங் குயில்மயில்கள் குரலோசை மெத்தவுண்டு
கிள்ளைபுறா நங்கணங்கள் கீதம் படிப்பதுவும்
வள்ளிக் கொடிவளர்ந்து வனம்போ லிருக்குதங்கு
குஞ்சரங்கள் கூடிக் கோடுடனே வந்துநின்று
பஞ்சகர்த்தஞ் செய்து பாவனைகள் காட்டுவதும்
நாகம் படம்விரித்து நாரி யுமையவள்தன்
பாகன் மதலையென்று பணிந்து வணங்குவதும்
வரையேழ் துலக்கமெழ மாணிக்கக் கற்களெல்லாம்
தரையில் விளைந்து தானெரித்துக் காட்டுவதும்
தூண்டா விளக்கொன்று சோதிவொளி போலிருந்து
நீண்டு எரிந்திருக்கும் நேர்மைகளைச் சொல்லரிது
ஏழுமலை யொன்றாய் இலங்கும் தலமிதுவாய்
கேளாய் என்ஞானமதில் கிட்டினது கண்டீரே
இன்னு மதிசயங்க ளிழுத்தே னகலுதது
கன்னியரே யென்று கைகூப்பி யேதுசொல்வார்
மாணிக்க வாசகனார் வடிவேலர் தன்னையங்கு
காணவரி தாகுமென்று கதிபெறவே ஓதலுற்று
அன்னவரு மங்கு அமரரொடு தானிருக்க
பொன்னுலுகம் போலப் புகழ்பெற் றிருக்குதது
மின்னனையே கேளும் மேதினியி லப்பதிபோல்
எந்நகருங் கண்டறியார் ஈசர் அடியார்கள்
வேலவரைக் காணில் விரைவொடு நாங்க ளெல்லாம்
சீலமுடன் மாபதிக்குச் செல்லுவோம் வாருமென்றார்
தெய்வானை யார்கேட்டுச் சிந்தை மிகத்தளர்ந்து
ஐயாநீ ரங்குசென்று அழைத்துவா வென்றுரைத்தாள்
ஆனை முகத்தோன் அடியான் மனதிரங்கி
கானமயில் வேலவரைக் காணவென்று தானெழவே
சோமன் மகளார் துதித்து அடியானை
வாமனென்னுந் தேவன் மைந்தனைநீர் கண்டிடுகில்

தென்கயிலை சென்று திருப்பதியி லேயிருந்து
என்பதியை நோக்கி இலங்கும் சடாக்ஷரத்தை
மாறியபின் யோக மந்திரத்தை யுச்சரித்து
கூறியிரு அங்குக் குமரவேள் தான்வருவார்
முருகவேள் சாமியறு முகனே குகன்மாயோன்
மருகன்சேய் கார்த்தி கேயன் வரையதனை
எறிந்தோனே என்று எழுந்து வணங்கியபின்
அறிந்து மகிழ்ந்து அடியானே இங்குசெல்வார்
நீரு மவரோடு நின்மலங்கள் விட்டகற்றி
வாருமெனத் தெய்வானை வரங்கொடுத்தா ளம்மானை
விக்கினங்கள் தீர்க்கும் விநாயகனைப் போற்றிசெய்து
தக்கபுகழ் வாழ்கதிரை தான்வந்தா ரம்மானை
வெற்புடனே கண்டம் விண்டு மதிலாக
நற்பதியுந் தானிருக்கும் நன்மைகண்டு அவ்வடியான்
குடக்குக் குணக்குக் கொண்டசி வேதையொடு
வடக்குமெனுந் திசையும் மாணிக்க வாசகனார்
நாலு திசையும் நன்றாய்ப் பார்ப்பளவில்
வேலையென்னும் மேருகிரி மேவும் அவனியென்று
திட்டை தனிலிருந்து சிவயோக ஞானமொடு
நிட்டை முடித்தார் நேரிழையாள் சொற்படிக்கு 1500
அண்டர் புகழ அறுமுகனார் தான்மகிழ
தொண்ட ரெனவே துதித்திருந்தார் யோகமதில்
ஏக மனதொன்றாய் இருக்கும் சமயமதில்
தோகையொடு வேலவனார் சூழ்ந்தா ருகந்தைமலை
வரைகள் மகிழ்ந்ததுவாம் வடிவேலர் வந்ததென்று
தரைகள் புகழ்ந்து சந்தோஷம் ஆடினதாம்
வாரியருக் காகஇந்த மலையு மிருக்குதென்று
காரியங்கள் பேசிக் காணாமல் நாமிருப்போம்
அண்ணரடியான் அருள்ஞான முள்ளவன்காண்
என்னைப் பழனிதனில் எடுத்துப் பறந்திடுவான்
சித்த ரதிகமல்லோ தெய்வானை யம்மனுக்கு
இத்தரணி வந்து என்னைக் கொடுபோவார்
வடுவேல் விழியணங்கே வள்ளியரே எந்தனைத்தான்
விடுவாளோ தெய்வானை விரைவில் விழித்திருப்போம்
தெவிட்டாக் கனியே தெள்ளமுதே வஞ்சியரே
பகட்டா லெனையெடுத்துப் பழனிக்குக் கொண்டுசெல்வார்



ஆகையால் நாங்கள் அடியார்கள் போம்வரைக்கும்
தாகமற்று வாழ்ந்து தாமிருப்போம் வள்ளியரே
மங்கையரே இம்மலையில் மறைந்து உகந்திருந்தால்
எங்கும் புகழாக இலங்குமென்றா ரம்மானை
அம்புவிழி மானேமுன் அவுணர்கெட வேலெறிந்தேன்
சம்புவெனும் நாவல்தனில் தங்குந் தடமதுபார்
தேவர் கணஞ்சூழ்ந்து திருமுருகர் வேலெனவே
நாவலடி தன்னில்நின்று நற்றொண்டு செய்யுதுபார்
இந்த மலையு மேழு திருப்பணியும்
கந்த ரடியார்க்குக் காவலென்றா ரம்மானை
குறமாதோ டாறுமுகன் கூறுந் தருணமதில்
நிறையோக வாசகனார் நினைத்தார் கடம்பனையும்
காவித் துகிலுடுத்துக் கன்னியொடு ஓர்மலையில்
மேவி மறைந்திருக்கும் வேலவனைப் போற்றிசெய்து
நன்றாக உன்னை நமஸ்கரிக்க வேணுமென்று
குன்றாக மாமுனிவர் கூறயான் கேட்டிருப்பேன்
வாழ்புவியி லேபழனி மாமலையி லுந்தனது
தாளிணையைக் காணாமல் சஞ்சலமா யிங்குவந்தேன்
வல்லா வுன்மனைவி மாதுதெய்வ யானையம்மன்
தொல்லை யகற்றுமென்று தொழுதனர்கா ணம்மானை
அடிபணிந்து மாணிக்க வாசகரு மங்கிருந்து
மிடியாருக்கு வந்த வேதனையைத் தீர்ப்பவனே
என்னச் சடாட்சரமும் இலங்கியறு கோணமதாய்
தன்னை யறியாமல் சரத்தில் உருத்தோன்றி
ஆடி யெழுந்து அறுமுகனைக் காணாமல்
தேடிச் சுடர்வீசிச் செல்லமுன்னம் வள்ளியர்க்கு
புத்திமதி யுரைத்துப் புன்னகைகள் கொண்டெழுந்து
நித்திய யோகமமை நிலைநிறுத்திக் கொண்டிருந்த
வாடத் தவத்தோன் மாணிக்க வாசகனார்
தேடப் புலனடக்கிச் சிவத்தைத் தியானமுற்றார்
வாடாதே நாங்கள் வாழ்கதிரை மாநகர்க்கு
போவோ மிருபேரும் புறப்பட் டெழுந்திடுவீர்
ஓதரிய வேல்முருக ரொண்டொடிக்கு மீதுரைக்க
ஏதும்பக ராமல்வள்ளி எழுந்தனர்கா ணம்மானை 1550
நடந்தா ரிருபேரும் நற்கதிரை மாநகர்க்கு
கடந்தா ருகந்தைவிட்டுக் கதிர்காம மம்மானை
அட்டசித்தி கொண்டு ஐம்புலனை யுள்ளடக்கி

நிட்டை முடிக்கும் நிருபனையும் வேலர்கண்டு
வஞ்சியரே பாரும் மாமணியாள் தன்னடியான்
அஞ்சலென்று என்னை அறுகோண ஆசனத்தில்
ஆறெழுத்தும் மாறி அடைத்துப் பிரணவத்தை
கூறமுன் போயென் கொழுநனைத்தா வென்றுரையும்
குகனாரு மீதுரைக்கக் கோதை யடிபணிந்து
பகவானே எந்தன் பர்த்தாவை ஈயுமென்றாள்
ஐந்து புலனு மகலத் தவசியரும்
வந்து பணிந்த மாதை முகம்நோக்கி
சிரத்திற் காதைவைத்துச் சிவாயநம வென்றெழுந்து
வரத்தினாற் கந்தரையும் வள்ளியர்க்கு ஒப்புவித்தார்
திங்கள் தனையணியும் சிவனார் மகனார்க்கு
மங்கையராய் வள்ளியம்மன் வாய்த்ததுகா ணம்மானை
வாலைப் பருவமின்னார் வள்ளியம்மை மாயையதால்
சீலத் தவங்குறைந்து தெய்வானை யாரடியான்
தென்கயிலை யோனே திருமால் மருகோனே
உன்பதியை யானு முகந்தே னெனைக்காரும்
வான்கண்ட காவில் வளங்கண்டு வந்திருந்த
தேன்வென்ற மாநகரில் சேர்ந்தே னெனைக்காரும்
முந்தூழி பிந்தூழி முத்துபெற இப்பதியில்
எந்தூழிக் காலமட்டு மிறந்தோர்க்கு முத்திகொடும்
அண்டர்க் கமுதே ஆறிரண்டு கையனே
தொண்டர்க் கருள்புரிவீர் என்று துதித்திருந்து
அடக்கினார் ஐம்புலனை அங்காயக் கூட்டையங்கு
கடத்திக் கணேசரொடு காத்தனர்கா ணம்மானை
அத்தருணந் தன்னில் அறுமுகனும் வள்ளியரும்
மித்திரனார் தன்னிடத்தில் மேவிநின்று ஏதுரைப்பார்
மாதரசே கேளும் மாணிக்க வாசகனார்
கோதறவே அண்ணர்பதங் கொண்டா ரறிந்திடுவீர்
செய்ய திருப்பதியில் தேவ ரடியானும்
பொய்யுடலை விட்டுப் பொற்கயிலை தானடைந்தார்
வையஞ் செழிக்குமினி வனவேடர் தான்கூடி
ஐயன் கணேசனென்று அடிபணிவா ராரணங்கே
அடியான் சமாதிவிட்டு அகலேன் ஒருபோதும்
குடியாக நாமிருப்போம் குன்றாத் திருப்பதியில்
யானைமுக னோடுமிவ ராவி கலந்ததினால்



கானவர்கள் தன்னிடத்தில் கனவாகத் தானுரைப்போம்
வாராயுன் அண்ணர் வனத்தில் மிகத்துயிலும்
நேரமதிற் சென்று நிலைமை யுரைத்திடுவோம்
தேனேநீ ரென்பிறகே செல்லுமென வள்ளியரும்
நானே வருவேனென்று நடந்தா ரிருபேரும்
அரன்மகனார் தன்னை யரிவையருந் தான்நோக்கி
வரம்மிகுந்த இவ்வடியான் வந்திங் கமர்ந்ததென்ன
சொல்லுமென வள்ளியம்மை தோகைமயில் வேலவரும்
நல்லதுகேள் சொல்வனென்று நாடி நடக்கையிலே
மேரு கிரியென்னும் மேன்மைதங்கு மோர்மலைகாண்
பாரி லுயர்குடையாய்ப் பரந்திருக்கும் நாளையிலே
வாயு சினந்து மாதிரத்தில் மோதியதால்
ஆயிரத் தெட்டரியில் அற்றதுகாண் மூன்றுமுடி
தெறித்துவந்து வீழ்ந்தது தெட்சணமா மாழிதனில்
குறித்த வவனியெனக் கொண்டுதிட லாகியபின்
தென்னிலங்கை யென்றும் திருமூர்த்தி நாமமிட்டு
மன்னன் குபேரனையும் வைத்தார்காண் வள்ளியரே
ஆதலா லிந்த அடியான் சமாதிகொண்டார்
பூதலத்தோர் போற்றிப் புகழ்வரென்றா ரம்மானை
கானக நாடன் கண்துயிலும் வேளையிலே
தானவரை வென்றழித்த சண்முகனார் வந்துநின்று
பாதி மணியணியும் பராபரனார் பங்கிலுறை
சோதியுமை யாள்புதல்வன் சொற்பனத்தில் சொல்வதுகேள்
நாடுநகர் வேடர்களே நற்பதியில் ஓரடியான்
கூடுவிட்டுத் தானகன்றார் கோயில்கட்டிக் கும்பிடுங்கோ
கேட்ட வரந்தருவார் கிளைவழியு மீடேறும்
வாட்டமில்லை யுங்களுக்கு மாணிக்கப் பிள்ளையென்றார்
மந்திரமும் வேண்டாம் வணக்கமென்று கூறுகிறேன்
கந்தா வெனமுன்னே கணேசனென்று தான்வணங்கி
நின்ற நிலையோடே நினைவை யொருப்படுத்தி
கொண்டு இருகரத்தைக் கூப்பிநின்று வாய்புதைத்து
வேண்டும் பதார்த்தம் விரைவிற் படைத்திடுங்கள்
தோன்றும் பதம்பெறுவீர் தொல்லுலகோர் வாழ்ந்திடவே
காணிக்கை கட்டிக் காவடிகள் தோளில்வைத்து
மாணிக்கக் கங்கைதனில் வந்துநீ ராடிடுவார்
நானுமுங்கள் தங்கையரும் நாடி யவரருகில்

பூணும் விரதம் பிடித்தகலோ மென்றுசொல்லி
ஆண்டி வடிவெடுத்த அமரர் துணைவனுந்தான்
தோன்றி வேடரிடம் சொற்பனத்தில் சொல்லியபின்
அகன்றார்காண் வள்ளியொடு ஆரணிய வேலநம்பி
துயின்று விழித்துச் சொற்பனங்கள் கண்டெழுந்து
தம்பிமார் தங்களையும் தானழைத்து மன்னவனும்
உம்ப ரொருவ ருற்றதிருச் சந்நிதியில்
அடங்கி யிருக்கிறதாய் ஆறுமுக வேலர்வந்து
விடங்கிற் றுயிலுகின்ற வேளைதனிற் சொற்பனத்தில்
சொன்னார் துதித்தேன் தொழுதேன் நமஸ்கரித்தேன்
மன்னா வெனமகிழ்ந்து மறைந்தார் சிறந்திலங்க
கண்டே னவரெனக்குக் கனக்க முறையுரைத்தார்
என்றும் மறவேன்யான் ஏகி யறிந்திடுவோம்
வாரும்நா மெல்லோரும் வாழ்கதிரை மாநகர்க்கு
சேருவோ மென்று சிறைதளங்க ளோடுவந்தார்
நற்பதியை நாடி நடந்து வரும்வழியில்
அற்புதங்கள் கண்டு அகமகிழ்ந்து தான்வரவே
கங்கையரு காகவரக் கர்த்தன் சமாதிதன்னை
அங்குகண்டு நின்று அடிபணிந்து போற்றிசெய்து 28

## விருத்தம்

உவணமே பழனி தன்னில் ஊழியஞ் செய்து நிற்பக்
கவுணமே கட்டி யாய்ந்து கதிரையம் பதியில் வந்து
அவுணரைச் செயித்த செட்டி யடிகளா யமர்ந்த யோக
மவுனமா யடங்கு முந்தன் மலரடி போற்றி யென்றார் 29

## நடை

புனவர் ஒருமித்துப் பூவெடுத்துத் தேனெடுத்து
கனவி னுரைப்படியே கங்கைநீர் கொண்டுவந்து
தேக சுத்திசெய்து திருநீற்றுக் காப்புமிட்டு
ஏகவுயிர் தானடங்கி இருக்குந் தவசியர்க்கு
மலரை யிறைப்பார்கள் மாணிக்கப் பிள்ளையென்று
சிலரோடிச் சென்று தேன்கட்டி வைத்திடுவார்
வனத்து மடந்தையர்கள் மகிழ்ந்து குரவையிட
கனத்தசிலை வேடரெலாங் கையெடுத்துக் கும்பிடுவார்



தேனை யிறைப்பார்கள் தினைமாவைக் கொண்டுவைப்பார்
வீணை யொலிப்பார்கள் வேலவர்க்கு மாமெனவே
துதித்தார்கள் வேடுவர்கள் சூழ்ந்தார் கதிரையெங்கும்
கதித்தபுகழ் வள்ளியொடு கந்தருந் தான்மகிழ
இந்தப் படியே எள்ளுருண்டை மாங்கனிதேன்
கந்தம் புனுகு கமகமெனத் தான்படைத்தார்
வள்ளியரும் வேலவரும் மாணிக்க வாசகர்க்கு
தெள்ளியதோர் பூசைகண்டு செழித்துக் களித்திருப்பார்
விண்டு மகிழ விண்மகிழ மண்மகிழ
அண்டர்கோன் புத்திரியும் அடியான் அறுமுகனை
காணாமல் வாடிக் கலங்குவதோ யானறியேன்
தோணாரோ வென்று துதித்தான்கா ணம்மானை
வாரிசூழ் பூவுலகில் மாணிக்க வாசகனார்
ஆரியனார் மைந்த னன்பனொடு தானிருந்து
வாதுபல கூறி வழக்குண்டோ யானறியேன்
ஆதியே முத்துலிங்க ஐயரே வாருமிங்கே
என்றழைக்க முத்துலிங்க ரெழுந்தே யடிபணிய
தண்டமிழ்சேர் தெய்வானை சாற்றுவா ளோர்வசனம்
அந்தகன்போல் நாரதனும் அரன்மகனார் தன்னிடம்
வந்து வணங்கிநின்று மகிழ்ந்து ரகசியங்கள்
பேசி யொருபடத்தைப் பெருந்தாளம் போற்கொடுத்து
ஆசி பலகூறி அகன்றதென்றா ளம்மானை
தாசியர்மே லாசைகொண்ட தன்மைபோல் கங்கைமைந்தன்
வாசியென யோகம் வகுத்தார்பின் காணவில்லை
அப்போது மாணிக்க வாசகரைத் தானழைத்து
தப்பாம லென்றன் சாமிதன்னைத் தேடுமென
ஆகந் தனையடக்கி யாய்ந்து விழித்தபின்பு
தாகமுடன் தென்கதிரை சார்ந்தா ரெனவுரைத்தார்
ஐயாநீர் அங்குசென்று அழைத்துவா வென்றனுப்ப
மெய்ய னகன்றார் விரைவில் வராதமையால்
வாது பலபேசி வருந்தி யிருப்பதுண்டோ
ஆதியே முத்துலிங்க ஐயரே நீருமிங்கு
துரித நடையோடு சென்று சூரர்குலம்
முருகன் தனையழைத்து மூவருமாய் வாருமென்றாள்
வாவென்னத் தெய்வானை வரத்திலுயர் முத்துலிங்கர்
நாவசைத்து ஆமெனவே நமஸ்கரித்துத் தானெழவே
வாழ்த்தி வரங்கொடுத்து வடிவேலரைக் காணில்

தாழ்த்தி நடவாதே தாமதியா தேகுமென்றாள்
அம்ம னுரைக்க அடிபணிந்து முத்துலிங்கர்
செம்மையொடு நடந்த செய்திகே ளம்மானை 30

## விருத்தம்

புரந்தரன் மருகன் தானும் புகழ்பெறும் கதிரை சேர்ந்து
வரந்திகழ் சூழப் பெற்ற வரையேழு மொளிகள் வீச
கரந்தனர் வள்ளி யோடு கானவர் பணிகள் செய்ய
இருந்தனள் தெய்வ யானை ஏகினர் தவத்தி லுற்றார் 31

## நடை

தென்திசையை நோக்கித் தீதகலத் தான்வரவே
புன்சிரிப்புக் கொண்டு புகழ்ந்துவடி வேலவரும்
வாரார்காண் முத்துலிங்கர் வாழ்கதிரை மாநகர்க்கு
பாராய்நீ யென்றே பகர்ந்தனராம் வள்ளியர்க்கு
அடிக ளௌனத்திரிவார் யமரர்க்குத் தொண்டுசெய்வார்
கொடிக ளுயர்த்திக் கும்பிட் டடிபணிவார்
ஆல மருந்தார் அன்னமுண்டு பின்துயிலார்
பாலும் பழமருந்திப் பழனிதனி லிருப்பார்
கனல்போ லிருவிழியும் கவுணமென வைம்புலனும்
அனல்போ லுடலும் அருள்ஞானப் பார்வைகளும்
இப்படியாய் எண்கணக்கு இல்லாத என்னடியார்
தப்பாம லேபழனி தானிருந்து வாழுகிறார்
ஒருவ ரொருவரென உற்றதிருச் சந்நிதியில்
வருவார்காண் வஞ்சியரே வாழ்கதிரை மாநகர்க்கு
வந்தா லகலார் வாழ்கதிரை மாமலையில்
சிந்தை களித்துச் சேர்ந்திருப்பார் கண்டறிநீ
வேந்தர் சிலர்வந்து வேலா வெனத்தொழுது
நேர்ந்து திருப்பணிகள் நேர்மையுட னேயமைப்பார்
இன்னுஞ் சிலகால மேகினபின் மானிடர்கள்
பொன்னுலக மென்று போற்றி வருவார்கள்
மானாரோ டாறுமுகன் மலரலர்ந்து செப்பிடவே
தேனார்தெய் வானையிடஞ் சித்த ரதிகமென்ன
சொல்லென்று வள்ளியம்மை தோகைமயில் மீதேறும்
வல்லவனார் கூறும் வண்மைகே ளம்மானை
அடியா ரதிகமுள்ளார் ஆவேந் திரன்மகளார்



மிடியார்க்கு வேண்டும் வரமீவாள் வள்ளியரே
மூவர் முதலாக முக்கோடி தேவர்களும்
ஏவல் புரிவார் என்றுமக லாதிருப்பார்
விற்புருவ வேல்விழியார் மின்னார் நிலைமையொடு
அற்புதங்கள் கூறில் அநேகமென்றா ரம்மானை
அம்மொழியைக் கேட்டு அகமகிழ வள்ளியரும்
செம்மையுடன் முத்துலிங்கர் சேர்ந்தார் கதிர்காமம் 32

## விருத்தம்

திமிரமே யகன்று ஞான தீபமே செழித்த தப்போ
அமிர்தமென் றறிந்து நான்கு திசைகளை யாய்ந்த போது
குமிரத கொடிக ளாகக் குன்றினி லிலங்கி மேவச்
சமிதவ முடைய யோகர் சார்ந்தனர் பதியி லன்றே 33

## நடை

வேர்த்துக் களைத்து வேலா வெனநினைத்து
பார்த்து மகிழ்ந்தார் பத்தன் சமாதிதன்னை
உருவுந் திருவும் உற்றெழுந்த ஞானவிழி
கருவு முடலுங் கலந்துவினை மாற்றுவராய்
சிந்தை மகிழச் சேர்ந்தாரோ வுன்பாதம்
வந்தா ருகந்தார் வாழ்கதிரை மாபதியை
பரிதிமணி யானைநிலம் பாவிசைத்துப் பாடினதால்
கருதி யுமதுபதக் காட்சி கொடுத்தீரே
முன்னாட் குறுமுனிவர் முத்திபெற வேண்டியவர்
தென்னகரஞ் சென்று தென்கயிலை மாநகரில்
சேர்ந்தோர்க்கு முத்தி திடமாய்க் கிடைக்குமென்று
கூர்ந்து அகத்தியனார் கூறயான் கேட்டிருப்பேன்
அறுமா முகனே அடியார்க் கெளியோனே
சிறுவ னடியான்நான் செய்தபிழை அத்தனையும்
மன்னித் தருளுமையா மயில்மீதி லேறியெந்தன்
முன்னின் றருள்புரிவீ ரென்றுவிழி மூடியபின்
கலைகள் சிறந்திலங்கக் கந்தரும் வள்ளியரும்
மலைமே லிருந்து மகிழ்ந்துமொழி பேசுவதும்
எட்டு வடுகனொடு எண்ணரிய தேவகணம்
பட்டுப் பணிசெய்து பாவனையாய் நிற்பதையும்

வரையேழ் மகிழ வனமெல்லாம் பூத்துதிர
தரைகள் மகிழ்ச்சியுறத் தான்கண்டார் ஞானமதால்
கண்டு விழித்துக் கைகூப்பி வாய்புதைத்து
என்று மகலேன் இப்பதியை விட்டேயான்
குற்றமது செய்தாலும் கொடுங்குற்றஞ் செய்தாலும்
முற்றும் பொறுத்து முத்தி எனக்களிப்பீர்
வாதாடுஞ் சூரர்களை வடிவேலால் மாய்த்தவுன்றன்
பாதாரம் நான்பணிந்தேன் பரமகதி தாருமிப்போ
உந்தனைத்தான் தேடி ஓடியிங்கு வந்தேனென்று
சந்தேகம் வையாமல் தாரு முமதுபதம்
காண நினைந்துவந்தேன் கடையேற வேணுமென்று
தோணுவா யென்னெதிரே சோதியுரு வத்துடனே
மங்குலிந்த நற்பதியின் வளைந்து மதிலாக
எங்குஞ் சிறந்தே யிலங்குவதைக் கண்டவுடன்
போகேன் பழனிதனில் பொற்கொடியாள் தெய்வானை
வேகமுற்று என்மேல் வினையேவும் நேரமதில்
தோகை மயிலேறித் தோன்றியந்த மாதுமுன்பு
ஏக வொளியாகி இப்பதியில் கொண்டுவையும்
பாவியெவ ராகிலுமிப் பதியிலே தானிறந்தால்
ஆவிதனிற் கலந்தே யாளு மடியாரை
வையமதில் மானிடர்கள் மாயைதனிற் பட்டுழன்று
செய்யாத பாவமெல்லாஞ் செய்தோர்க ளானாலும்
தென்கயிலை சென்று திருப்பதியி லேமிதித்தால்
முன்செய்த பாவவினை முற்று மழிந்திடச்செய்
காணவரி தாகுதென்று காதாரக் கேட்போர்க்குப்
பேணியவ ரிப்பதியைப் பெறவே யருள்புரிவாய்
கந்தன் கடம்பனென்று கதிரைப் பதியடைந்தால்
உந்தன் பதவி யுடனே கிடைக்கவையும்
துரித மெழுந்து தொடராம லிப்பதியில்
பரிதி யெதிர்நின்ற பனிபோ லகலவையும்
அறங்கள் துலங்கிவர அதர்மங்கண் டேயகல
திறங்க ளொடுசித்தர் சேர்ந்துமுத்தி பெற்றிடவும்
வள்ளி மணவாளா வாழ்கதிரை வேலோனே
புள்ளி மயிலேறும் பூவையிரு பங்காநீர்
அந்தரமாய் நின்று அவனியெல்லாங் காப்பவனே
வந்து பணிந்தோர்கள் வாழவர மீயுமையா
எவ்வுலகுங் காணே னித்தலம்போல் மெய்த்தலத்தை



ஒவ்வுங் கயிலையென்றால் ஒத்துவரு மென்றடியான்
சிறந்து விளங்கும் தேவ ருவந்திருப்பார்
நிறைந்த புவியலுள்ளோர் நீள்தவங்கள் செய்துநிற்பார்
அற்புதங்க ளெல்லாம் அநேகம் மகிழ்ச்சியுற
நற்பதிதா னென்று நரர்கள் துதித்திடவே
காட்சி கொடுத்துக் கதிரைப் பதிசெழிக்க
தீட்சை யெனக்களிப்பீர் செந்திவடி வேலவனே
பொற்பதியைக் கண்டவுடன் போகேன் பழனிமலை
சொற்பயிலுந் தெய்வானை துன்பமது எந்தனுக்கு
செய்யாமற் காருமுந்தன் சீர்பாதம் யான்மறவேன்
கையா யுனக்கபயம் கடம்பா வுனக்கபயம்
ஏழு பிறப்பி லெத்தீமை செய்தாலும்
வாழுங் கதிர்காமம் வந்தா லகலவையும்
எதிர்வினையால் வாடி இடறிவிழும் வேளைதன்னில்
கதிரைவே லென்றாற் காத்துரட்சித் தாளுமையா
காலன் முடுகிக் கடும்பாசம் வீசையிலே
வேலா வெனநினைந்தால் வெருண்டுயம னோடவையும்
சிங்கமொடு யாளி சினத்த கரடிபுலி
பங்கமது செய்யப் பழிகொள்ளும் வேளையிலே
எண்ணியுமைத் துதிக்க இடையூ றகற்றிவிட்டு
நண்ணிவந்து உந்தன் நற்பதியிற் சேரவையும்
சர்ப்பமொடு யானை தாரில்விஷ ஜெந்தெதிர்த்தால்
அற்புதமா யங்குசென்று அடியவரைக் காத்தருளும்
இரவிமதி யுள்ளளவும் இப்பதியே தான்சிறந்து
வரவே கிருபைசெய்து வைப்பாய் வடிவேலா
கனவிலும் மாணிக்கக் கங்கையென நினைந்தால்
வினையி லுழலாமல் விடையளித் தாளுமையா
உகத்துக் கலியன் உதித்துத் திருப்பதியின்
மிகுத்த கருணைகளை விடாது பறைத்திடினும்
மகத்துவங்கள் கொள்ளவையும் வாழ்கதிரை மாநகரை
செகத்தோர் துதித்திடுவார் திருவிழாச் செய்திடுவார்
மாசு படராமல் வையுமையா இப்பதியை
தேசமனிதர் வந்து தினந்தினமும் தான்தொழுவார்
கண்பா ருமது கருணைதனைக் கொடுத்து
நண்பரெவ ராகிலுமிந் நற்பதியி லேமிதித்தால்
பாவ வினையகன்று பரகதிகள் பெற்றிடவே

தேவ கணமாக்கிச் சேருஞ் சுரருடனே
என்றுதிரு முத்துலிங்கர் இவ்வரங்கள் கேட்கையிலே
கண்டு மனமகிழ்ந்து கந்தரும் வள்ளியரும்
பிரசன்ன மானார்கள் பெருந்தவத்தோன் தன்னெதிரே
சிரமதனில் கைகூப்பிச் செந்திவடி வேலவரை 34

## விருத்தம்

சங்கரன் மைந்தா போற்றி தாருகர் செற்றாய் போற்றி
மங்கையர் பாகா போற்றி மாலவன் மருகா போற்றி
கங்கைதன் மகனே போற்றி காமனை நிகர்த்தாய் போற்றி
எங்கணும் நிறைந்தாய் போற்றி இறைவனே போற்றி போற்றி
35

## நடை

வீழ்ந்து நமஸ்கரித்து வேலோனே தெய்வானை
வாழ்ந்து கதிர்காமம் வந்திருக்க வையுமையா
வந்திருக்க வையும் வாழ்கதிரை மாபதியில்
செந்திருவே வந்தாற் செழிக்குமென்றா ரம்மானை
கேட்டவர மெல்லாங் கேசவனுந் தான்கொடுக்க
தீட்டும் விழியுடைய செல்வவள்ளி பாதமதில்
கும்பிட் டடிபணிந்து குமரவேள் கோதையரே
நம்பிக்கை யோடு நரர்தேவ ரிப்பதியில்
வருவா ரவர்களுக்கு வாழ்த்தி வரங்கொடுத்துன்
அருகாக வைத்திருக்க அருளுமென்றார் முத்துலிங்கர்
வள்ளியம்மன் கேட்டு வாழ்த்தி வரங்கொடுத்தாள்
துள்ளி யெழுந்திருந்து துலங்குங் கலையறிந்து
ஐந்தெழுத்தை யொன்றா யடக்கச் சிவமெழுந்து
கந்தவேள் தன்னுடனே கரந்ததுகா ணம்மானை
ஆவி யகன்று அறுமுகனா ரோடிருக்க
பாவ மகல்சடத்தைப் பக்குவங்கள் செய்தபின்பு
கொண்டாடி வள்ளியருங் குழந்தைவடி வேலவரும்
மன்றாடி முத்துலிங்கர் வாங்கும் வரங்கொடுத்தோம்
தேசந் தழைக்குமினித் தென்கதிரை ஈடேறும்
பாச மகலும் பசுபதங்கள் நின்றோங்கும்
குற்றாலங் காசி குருநாடு நற்பழனி
ஆற்றோடு வெண்கயிலை அரியவை குந்தமொடு
சேர்ந்த திருப்பதியோர் தென்கயிலை மாநகர்க்கு



நேர்ந்து வருவார்கள் நீள்தனங்கள் செய்யவென்று
முன்னா ளமரர்க்காய் மும்மூர்த்தி தான்கூடி
அந்நாட் சமுத்திரத்தை யகற்றி யவனியென
கின்னர்பிரான் தனக்குக் கிரீட முடிதரித்து
மன்னனென ஆளு மென்று வைத்தார்கள்
வேதத் துவிபம்என்னுந் திருநாம மிட்டதென்று
பாவையெனும் வள்ளியொடு பகர்ந்தபின் வேலவரும்
மானேகேள் முத்துலிங்கர் வரத்தின் படியேதான்
நானே பழனியென்னும் நற்பதிக்குச் சென்றங்கு
அயிராணி ஈன்றவெந்தன் அரிவையரை யழைத்து
மயூரமதி லேற்றி யிங்கு வரவே வரந்தாரும்
குழக னிரக்கக் குஞ்சிரிப்புக் கொண்டிருந்து
அழகுவள்ளி போய்வரவென் றடிபணிந்தா ளம்மானை
பத்தியுற்ற வள்ளியிடம் பாங்காய் விடைகொடுத்து
கர்த்தன் மயிலேறிக் கன்னியரைக் கொண்டுசெல்ல
பறந்தார் பழனியெனும் பதியில்வந்தார் கந்தருந்தான்
சிறந்தாள் தெய்வானை செட்டிதனைக் கண்டுமிக
போற்றிப் பணிந்து புனலாலே தாள்கழுவி
சாற்றி நறுமலர்கள் சாமிதனை யாசனத்தில்
இருத்தியபின் தேகம் இளைத்ததென்ன உந்தனுக்கு
வருத்தியதார் சொல்லும் மாதுமையாள் புத்திரனே
மாதொருத்தி வைப்பாட்டி வைத்தீராந் தென்னிலங்கை
ஏதொருத்தி யிங்கிருப்பாள் என்றோ வந்ததுகாண்
நானுனக்குப் பெண்ணுமல்ல நாச்சிமா ரங்கிருப்பாள்
வீண்மடந்தை யென்றுஎன்னை விட்டுப் பிரிந்தீரே
தேவர் எலாங்கூடி தெய்வானை யம்மனென்று
பூமாரி பெய்துமன்றல் புரிந்துவைத்த குற்றமதோ
சண்டனைபோல் நாரதனும் தட்டியுமை யெங்கனுப்ப
கண்டு கதைபேசிக் கனக்க மகிழ்ந்தீர்கள்
எந்தன் தலையெழுத்தை யாரோ டுரைத்தாலும்
வந்த விதியை மாற்றுபவ ராருமுண்டோ
தந்தைஎனு மிந்திரனார் தானுமெனைக் காத்திடென்று
உந்தன் பதம்பிடித்த துணராமற் போனீரோ
இலங்கை தனிற்சென்று ஏந்திழையா ளோடணைந்து
கலங்கி யெழுந்துவந்த காரணம்போல் தோனுகுது
வேடர் குலமாதை விரும்பி யகன்றீர்நீர்
தேடாக் கனியா திரவியமா வக்குறத்தி

நானொருத்தி யுந்தன் நாரி யெனவிருக்க
தேனே யவளாசை யென்று தெரிந்தலைந்தீர்
வதனமோ ராரும் வாடியுடல் மெலிந்து
விதனமொடு வந்தீரென வேலவருந் தான்மகிழ்ந்து
வாதுகள் கூறாரே வாருமிரு பேருமதாய்
ஓதரிய தென்கதிரை உற்றிருப்போ மம்மணியே
வாருமென்னத் தெய்வானை வடிவேலரைப் பார்த்து
நீருஞ் சுனையும் நிறைந்திருக்கும் மாநகரே
பெருமையொடு மிப்பழனி பேர்பெற் றிலக்கமுற
உரிமையற்றே யேக வொத்து வருமோதான்
ஓதென் றுரைக்க உற்ற கடம்பனுந்தான்
ஆதிசிவன் முதலாய் அமரர் கணநாதா
அட்டதிக்குப் பால ரானைமுகன் மாலயனும்
மட்டள வில்லாத வாழ்கதிரை மாநகரில்
குடிகொண்டா ரம்மணியே குகனேவல் செய்யவென்று
மடிகொண்டு தேவகணம் வரைமே லுலவுவதை
என்னென்று சொல்வேன் ஏழுமலை தன்சிறப்பை
முன்னின்று பார்த்தால் முத்துரத்ன மென்றுசொல்வீர்
சித்தர்முனி இருஷி சிறந்த சபையுமுண்டு
பத்தரொடு முத்துலிங்கர் பாங்காய்ச் சமாதிகொண்டார்
திங்கள் மும்மாரி செழித்துமிகப் பெய்வதுவும்
மங்கு லிறங்கி வரந்திதனை யள்ளுவதும்
துகினம் சிவலையெனச் சூழ்ந்திருக்கு நேர்மைகளும்
எகினக் குலத்தோர்கள் ஈட்டிவில்லோ டேகுவதும்
எல்லா மறிவீர் ஏகிவந்து பாருமென்றார்
பொல்லாங் குரையாமற் பொற்கொடியுஞ் சம்மதித்து
வந்தார் கதிர்காமம் வானவர்கள் கொண்டாடி
சிந்தை களிகூர்ந்து தெளித்தார்கள் புட்பமழை
புரந்தரனார் புத்திரியும் பொற்பதியைக் கண்டவுடன்
வரந்து வளைந்து மகிழ்ந்தசைந்து ஓடுவதும்
பார்த்து மனமகிழ்ந்து பழனி தனைமறந்து
வேர்த்துக் கடம்பனொடு விளம்புவா ளோர்வசனம்
என்னினைவை மாற்றும் இளங்கிளியா ளெவ்விடங்காண்
சந்நிதியில் தானோ தைய லிருப்பதுகாண்
வேடுவச்சி தன்னை விரும்பிநீர் மேலாக
கூடுவிட்டுப் பாய்ந்ததுபோற் குறத்தி யொடுமிருந்து



உன்மாமன் நெய்திருட உறியேற மாதர்கண்டு
வன்மமெழக் கையாலே மாறியடி பட்டகுலம்
ஆசான் குழலூதி ஆவினங்கள் மேய்த்திருந்த
மாசன் மருகாவுன் வைப்பாட்டி யைத்துரத்தி
இருந்தாலே உன்னோடு இணங்கி நடந்திடுவேன்
பொருந்தாதே போனாற் போவேன் பழனிதனில்
ஒட்டியிரேன் நானும் உனக்குப்பெண் வேணுமென்றால்
எட்டியிருக்க வைத்தால் இணங்குவே னும்மோடு
மாணிக்க வாசகரும் மாதவத்தோன் முத்துலிங்கர்
தானிங் கிருந்து சமாதிகொண்ட தும்மாலே
காட்டு மடந்தையரைக் கலியாணஞ் செய்வதினால்
மாட்டிடைய ருங்கள் மரபிதென வேலவரும்
கேளாயென் மாதே கிளிமொழியாள் வள்ளியம்மன்
ஏழு பிறவி எடுத்தா ளெனைஅணைய
மானீன்ற கன்னியல்ல மாயவனும் லெட்சுமியும்
தானீன்று விட்டகன்றார் சண்முகனே தஞ்சமென்று
வெள்ளானை யீன்றுவிட்ட மெல்லியர்காண் நீர்தானும்
புள்ளிமா னீன்றதிருப் பொற்கொடிகாண் வள்ளியரும்
மாதவனார் உங்களையும் மாயையதா யீன்றுவிட்டார்
ஆதவன்போல் நாங்கள் ஆண்டிருப்போ மிப்பதியை
அக்கைதங்கை யென்றும் அரிய பிறவியென்றும்
ஒக்க விருந்தால் ஊழிமுடி வாகுமட்டும்
திருவு முருவுஞ் சேருமிந்தச் சந்நிதியில்
கருதிப் பழனிதன்னைக் காவல்கொண்டு யான்வருவேன்
உன்னடியார் கூடி உகந்தை கதிரைமலை
தன்னடிமை யாக்கித் தான்வரட்டும் மாதரசே
வள்ளியர்க்கு இப்பதியும் வாழும் தினைப்புனமும்
தெள்ளியதோர் வேடர்குலம் சேர்ந்துஅர சாண்டிடட்டும்
நானே நிறைந்திருப்பேன் நரலோகத் தண்டமெழ
கானவர்கள் பூசைசெய்வார் கண்டு மகிழ்ந்திடுவோம்
வள்ளியெதி ராயிருக்க மானே யருகிரும்நீர்
வெள்ளானை மீதேறி வீதிவலம் யான்வருவேன்
ஆமென்னத் தெய்வானை அதற்கிசைய வேலவரும்
ஓமென்னும் மந்திரத்தை உச்சரித்தா ரம்மானை
வாசவனார் புத்திரியை வைத்தார் அருகாக
நேசமுற்ற வள்ளியரை நேரா யிருத்தியபின்
ஏழு மலையும் இலங்கி வளர்ந்தோங்கி

வாழுமென்று கந்தர் மகிழ்ந்தார்கா ணம்மானை
ஊழி முடிந்தாலும் உம்ப ரழிந்தாலும்
வாழ்வுபெற்று இப்பதியும் வருமென்றா ரம்மானை
வடக்கி லுயர்ந்ததமிழ் மதத்தினர்க ளிங்குவந்து
அடக்க முறையோ டமர்வரென்றா ரம்மானை
அண்டத் தசரீரி ஆகாயந் தனில்நின்று
தொண்டு வெகுசெய்து துதிக்குமென்றார் அம்மானை
வேந்தர் மகிழ்ந்து மேதினியோர் தான்புகழ
சேர்ந்துவெகு ஆலயங்கள் செய்வரென்றா ரம்மானை
திருக்கேச் சுரமும் தென்கதிரை மாமலையும்
விருப்புற் றிருக்க விடைகொடுத்தா ரம்மானை
எம்கூடம் நீலம் இமயம் கயிலைவிந்தம்
விமநிடதம் மந்தாரமும் மேவுகந்த மாதனமும்
மூவுலகோர் தான்மகிழ்ந்து முனிசுரர்க்கு நற்பதியாய்
மேவுமென்று கந்தர் விடைகொடுத்தா ரம்மானை
மிக்கோர் கலைஞர் மேவுங் குறவருடன்
நக்கோர் களிப்பதில் தரிப்பரென்றா ரம்மானை
ஆடு குண்டைதண்டு அலவன் அரிமடந்தை
தேடுகோல தேழும் சேர்ந்த கொடுமரமும்
சாடிமான் மீனமதார் வியமாய் ஆறுமுகன்
கூடியிருக்கு தென்று குமரவேள் தானிருந்தார்
தார மிரண்டுடனே சண்முகனார் வீற்றிருக்க
வார மிரண்டெனவே வந்ததுகாண் பூவுலகில்
தெற்கு வடக்குஎன்றும் தென்கயிலை நற்பதியாம்
கற்கும் புலவரெல்லாம் காட்சிபெறப் பாடினராம் 36

## வாழி

மும்மூர்த்தி வாழ்க முருகவேள் தான்வாழ்க
அம்மையுமையாள் வாழ்க யானைமுக வேள் வாழ்க
இந்திரனும் தேவர்களும் இருஷி கணநாதர்
அந்தரத்தோர் அட்டசத்தி அண்டபிண்டந் தான்வாழ்க
அறமுயர்ந்து வாழ்க அவனியெல்லாந் தான்வாழ்க
திறலரசர் வாழ்க தெய்வதுதி தான்வாழ்க
கூடமுயர் ஏழுமலை குன்றாமல் தான்வாழ்க
வள்ளிதெய் வானையொடு மாணிக்க வாசகரும்
புள்ளிமயில் முத்துலிங்கர் பொற்பதியும் தான்வாழ்க



மானினங்கள் வாழ்க வாசமலர் தான்வாழ்க
கானிலுயர் தாபரங்கள் களித்துயர்ந்து தான்வாழ்க
பாடினோர் வாழ்க படித்தோர் மிகவாழ்க
நாடியே கேட்டு நவின்றோர்கள் தான்வாழ்க
ஏட்டி லெழுதி எங்கெங்கும் வைத்தோர்கள்
தாட்டியமாய் வாழ்ந்து சஞ்சரிப்போர் தான்வாழ்க
கூடினோர் வாழ்க கும்பிட்டோர் தான்வாழ்க
தேடிக் கதிர்காமஞ் சேர்ந்தோர்கள் வாழியவே. 1997

**கதிர்காமத்து அம்மானை முற்றிற்று**

உ

# கதிர்காம வேலர் திருவருட்பா

## சிவஞான தேசிக சுவாமிகள்

உலகடங் கலுமருண வெயிலுமிழு முபயரவி
ஒருகோடி நிகர்மேனியும்
உமைமுலைப் பாலொழுகு கடைவாயும் இளநகையும்
உச்சியிற் றிகழ்கொண்டையும்
திலதமுஞ் சுட்டியுந் திருநீறும் அழகுபொழி
திருநுதலும் அருள்மாரிசேர்
திருநயன முங்கருணை வதனமும் அம்மைதரு
திருமுலைப் பாற்கிண்ணமும்
இலகுசெங் கைம்மலரும் அஞ்சலெனு மொருகரமும்
இருசெவியும் உபயரவியாம்
இருகுண்ட லங்களும் பாததா மரைகளும்
இலங்குங் குழந்தைவடிவாய்க்
கலகலென வேசிலம் படியனேன் காணநீ
காசிதனில் ஓடிவருவாய்
கங்கையுமை பாலனே கதிர்காம வேலனே
கந்தசுவாமிக் கடவுளே. 1

தற்பரஞ் சோதியே பூரணப் பிரமமே
சதுமுகப் பிரமாதியோர்
சதுர்மறையும் அடிமுடிகள் காணாம லேதேடு
சச்சிதா னந்தசிவமே
அற்புதா னந்தவரு ளமுதமழை மேகமே
யனந்தகல் யாணகுணமாம்
அகண்டபர வெளியே யென்னுயிர்க் குயிரே
யருட்கருணை மேருகிரியே



சிற்பரந் தந்தசிந் தாமணிக் குவியலே
செந்தேன் நெடுஞ்சலதியே
தெள்ளமுத மேசன்ம மாற்றுதற் கடியார்கள்
தேடவரு மருமருந்தே
கற்பகச் சோலையே யென்றடிய னேனுனைக்
கவிமாரி சொரியவருள்வாய்
கங்கையுமை பாலனே கதிர்காம வேலனே
கந்தசுவாமிக் கடவுளே. 2

சகலபுவ னம்பணி சதாசிவற் கோர்குடிலை
தான்மொழிந் தருள்குருக்கள்
சதுமுகப் பிரமாவை முடியினிற் குட்டியே
தான்சிறை யிடுங்குருக்கள்
அகிலசக தண்டகோ டிகளெலாம் பின்படைத்
தருள்தந்தி டுங்குருக்கள்
அகத்திய மகாமுனிக் கருள்செய்து சடைமுடியி
லடிவைத்திடுங் குருக்கள்
பகருமுப் பத்துமுக் கோடிவா னவர்மகுட
பந்திபணியும் குருக்கள்
பதினெண் புராணமு முனிவர்பணி செய்யப்
பகர்ந்திடு குருக்களின்நான்
ககனமா ருதமென்ன வத்துவித மாகக்
கலந்திடச் செய்தலரிதோ
கங்கையுமை பாலனே கதிர்காம வேலனே
கந்தசுவாமிக் கடவுளே.

திருமக ளுகந்தநெடு மால்சக் கரப்படை
தேவேந்திரன் வச்சிரம்
சிவன்மழுப் படையூழி யனலோடு காற்றெனச்
செட்டிநீவிட்ட நெடுவேல்
ஒருகணத்தே வடவையும் மதியு மிரவியு
மொளிக்கவொரு கோடியாகி
உக்ரப்ர சண்டரவி யெனவோடி யண்டங்க
ளோராயிரத் தெட்டினும்
வருசூர பன்மனும் வஞ்சக்ர வுஞ்சகிரி
வயிறொடுபெருந் தாரகன்
மார்பைப் பிளந்ததென் றாலடிய னேன்மிக
வருந்தவே நின்றுநோய்செய்

கருமமலை யைப்பொடி படுத்தலரி தோவுனது
கைவேலினுக் கருளுவாய்
கங்கையுமை பாலனே கதிர்காம வேலனே
கந்தசுவாமிக் கடவுளே. 4

அரிமருக முருகசர வணபவா வெனுமடிய
ரச்சந்தவிர்த் தருண்மயில்
ஆயிரத் தெட்டண்ட முட்டையென வேயணைத்
தசுரரைக் கொன்றிடுமயில்
பெரியநவ கண்டமொடு மேருகிரி குலகிரி
பெருங்கடல்க ளுள்ளடக்கும்
பெருஞ்சக்ர வாளகிரி யரைநொடியி னுக்குளே
பிரதக்ஷிணஞ் செயுமயில்
விரிபணா டவியுரக முங்கோடி யண்டமும்
விழுங்கியே பின்னுமிழ்மயில்
வேலநீ யேறுமயில் வெகுபராக் கிரமமெனில்
வினையனேன் மாயையென்னுங்
கரியபாம் பைப்பொடி படுத்தலரி தோவுன்
லாபமயிலுக் கருளுவாய்
கங்கையுமை பாலனே கதிர்காம வேலனே
கந்தசுவாமிக் கடவுளே. 5

தருங்கற்ப காடவியி லிந்த்ராதி வானவர்கள்
தளரச்ச மாங்கங்குலுஞ்
சக்ராயு தக்கடவு ளச்சமிகு கங்குலுஞ்
சதுமுகத்தோ னச்சமாம்
பெருங்கங்கு லும்மவுண ராங்கங்குலுந் துயர்செய்
பெரியபிர பஞ்சத்துளே
பிரியாத கங்குலுமுன் னடியரா யானோர்கள்
பிறவிக்கு மூலமான
அருங்கங்கு லும்விடிய வேகடுங் குரலையிடும்
அதிபலப ராக்கிரமமாம்
அருஞ்சிறைச் சேவலுன் கைத்துவச மாமென்னி
லடியனா ணவதிமிரமாம்
கருங்கங்குல் விடியவே கூவுதற் கரிதோசொல்
காலாயு தத்தினுக்குக்
கங்கையுமை பாலனே கதிர்காம வேலனே
கந்தசுவாமிக் கடவுளே. 6



ஆருக்கு வந்திடு விருந்தோவி தென்றுநீ
யறியாது போலிருந்தால்
அடியேனை யஞ்சலென் பார்களா ரிங்குனக்
கடிமைமே லன்பில்லையோ
ஊருக்கு வந்தவ ளொருத்திபிள் ளைக்குமுலை
யூட்டுவளோ சொல்லுவாய்
உனக்கடிமை யாகியும் உன்புகழ்கள் பாடியுமென்
உயிர்வருந்திட னீதியோ
பாருக்கு ளேகலி யுகத்திலே கண்கண்ட
பரதெய்வ மென்றேயுனைப்
பாருளோர் மெச்சுமது மெய்யாகு மிப்போது
பாவியேற் கருள்புரிந்தால்
காருக்கு மதிகவர மழைபொழியு மீராறு
கரகமல சர்வஞ்ஞனே
கங்கையுமை பாலனே கதிர்காம வேலனே
கந்தசுவாமிக் கடவுளே. 7

அஞ்சுமுக னுன்பிதா இமயமா மலையுதவும்
அமலைநின் னன்னையாகும்
அண்ணன்முன் கயமுகத் தசுரனுயிர் வீட்டியரு
ளைங்கரக் கடவுள்நெடிய
மஞ்சுவண் ணன்மாமனுன் மைத்துனன் மன்மதன்
மலரினய னுன்சீடனாம்
வானவர்க ளுன்னடிய ராயிரத் தெட்டண்ட
மன்னவ னுன்வாகனம்
கொஞ்சமடி யேனையுன் னடிமையென் றோதியே
குறுமுனிக் குத்தமிழருள்
குமரகுரு பரசுவாமி யுன்னடிய ரடியார்கள்
குற்றேவல் செய்யவருள்வாய்
கஞ்சமலர் முகவள்ளி மணவாள வெங்குங்
கவின்றெய்வ யானைகணவா
கங்கையுமை பாலனே கதிர்காம வேலனே
கந்தசுவாமிக் கடவுளே. 8

உன்மலர்ப் பாதத்தின் மகிமையு மேன்மையு
முமாபதி புயங்களறியும்
ஓங்குகலை ஞானமு மாறுகுண பேதமும்
ஒருநான் முகத்துவேதன்

றன்முடி யறிந்திடுங் கரபலமும் வீரமுந்
தகுசூர னங்கையறியும்
தருகடைக் கண்ணருளின் ஞானமுந் தீக்கையுந்
தமிழ்முனிவ னோக்கமறியும்
மன்மத னுருவறியு நித்தியமு மழகுமெய்
வாழ்வுமா நந்தசுகமும்
மகிழ்வள்ளி தெய்வயா னையுமறிவ ரடியருன்
மகிமையெல் லாமறிவரென்
கன்மன மறிந்துருக மாட்டுமோ வறியக்
கடாக்ஷம்வைத் தருள்முருகனே
கங்கையுமை பாலனே கதிர்காம வேலனே
கந்தசுவாமிக் கடவுளே. 9

அடையாள மாம்பரங் குன்றுமுத லாறுபதி
யம்பலங் காசிகமலை
அணிகோண மாமலை யாதிகே தீச்சரம்
அருள்சம்பு குண்டமாதி
இடைவிடா தேநிறைந் தோமா கிலும்புவி
யெறும்பாதி காசிமேவி
இறந்ததென் றான்முத்தி செய்துமென் றருள்செய்த
எந்தைமொழி நம்புதலினால்
திடமுடைய பத்தியில் லாதவெளி யேனுஞ்
சிவானந்த நாதனென்னிற்
சிவநாம வாக்கியஞ் சென்னிமேற் சூட்டலாற்
சிவகாசீ தனிலுறைதலால்
கடையேனை யும்மடிமை யாக்கத் தகுந்தகுங்
கருணாநிதித் தெய்வமே
கங்கையுமை பாலனே கதிர்காம வேலனே
கந்தசுவாமிக் கடவுளே. 10

கதிர்காம வேலர் திருவருட்பா முற்றிற்று



உ

சிவமயம்

# திரு அருட்பா

## திருஅருட்பிரகாச வள்ளலார்

முதல் திருமுறை

## 1. தெய்வமணி மாலை

### சென்னைக் கந்தகோட்டம்

பன்னிரு சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருஓங்கு புண்ணியச் செயல்ஓங்கி அன்பருள்
திறலோங்கு செல்வம்ஓங்கச்
செறிவோங்க அறிவோங்கி நிறைவான இன்பம்
திகழ்ந்தோங்க அருள்கொடுத்து
மருஓங்கு செங்கமல மலர்ஓங்கு வணம்ஓங்க
வளர்கருணை மயம்ஓங்கிஓர்
வரம்ஓங்கு தெள்அமுத வயம்ஓங்கி ஆனந்த
வடிவாகி ஓங்கிஞான
உருஓங்கும் உணர்வின்நிறை ஒளிஓங்கி ஓங்கும்மயில்
ஊர்ந்தோங்கி எவ்வுயிர்க்கும்
உறவோங்கும் நின்பதம்என் உளம்ஓங்கி வளம்ஓங்க
உய்கின்ற நாள்எந்தநாள்
தருஓங்கு சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்
தலம்ஓங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே. 1

பரம்ஏது வினைசெயும் பயன்ஏது பதிஏது
பசுஏது பாசம்ஏது
பத்திஏ தடைகின்ற முத்திஏ தருள்ஏது
பாவபுண் யங்கள்ஏது
வரம்ஏது தவம்ஏது விரதம்ஏ தொன்றும்இலை
மனம்விரும் புணவுண்டுநல்

வத்திரம் அணிந்துமட மாதர்தமை நாடிநறு
மலர்சூடி விளையாடிமேல்
கரமேவ விட்டுமுலை தொட்டுவாழ்ந் தவரொடு
கலந்துமகிழ் கின்றசுகமே
கண்கண்ட சுகம்இதே கைகண்ட பலன்எனும்
கயவரைக் கூடாதருள்
தரமேவு சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்
தலம்ஓங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே. 2

துடிஎன்னும் இடைஅனம் பிடிஎன்னும் நடைமுகில்
துணைஎனும் பிணையல்அளகம்
சூதென்னும் முலைசெழுந் தாதென்னும் அலைபுனல்
சுழிஎன்ன மொழிசெய்உந்தி
வடிஎன்னும் விழிநிறையும் மதிஎன்னும் வதனம்என
மங்கையர்தம் அங்கம்உற்றே
மனம்என்னும் ஒருபாவி மயல்என்னும் அதுமேவி
மாழ்கநான் வாழ்கஇந்தப்
படிஎன்னும் ஆசையைக் கடிஎன்ன என்சொல்இப்
படிஎன்ன அறியாதுநின்
படிஎன்ன என்மொழிப் படிஇன்ன வித்தைநீ
படிஎன்னும் என்செய்குவேன்
தடிதுன்னும் மதில்சென்னை கந்தகோட் டத்துள்வளர்
தலம்ஓங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே. 3

வள்ளல்உனை உள்ளபடி வாழ்த்துகின் றோர்தமை
மதித்திடுவ தன்றிமற்றை
வானவரை மதிஎன்னில் நான்அவரை ஒருகனவின்
மாட்டினும் மறந்தும்மதியேன்
கள்ளம்அறும் உள்ளம்உறும் நின்பதம்அ லால்வேறு
கடவுளர் பதத்தைஅவர்என்
கண்எதிர் அடுத்தைய நண்என அளிப்பினும்
கடுஎன வெறுத்துநிற்பேன்
எள்ளளவும் இம்மொழியி லேசுமொழி அன்றுண்மை
என்னைஆண் டருள்புரிகுவாய்



என்தந்தை யேஎனது தாயேஎன் இன்பமே
என்றன்அறி வேஎன்அன்பே
தள்ளரிய சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்
தலம்ஓங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே. 4

பதிபூசை முதலநற் கிரியையால் மனம்எனும்
பசுகரணம் ஈங்குசுத்த
பாவனை அறச்சுத்த பாவனையில் நிற்கும்மெய்ப்
பதியோக நிலைமைஅதனால்
மதிபாசம் அற்றதின் அடங்கிடும் அடங்கவே
மலைவில்மெய்ஞ் ஞானமயமாய்
வரவுபோக் கற்றநிலை கூடும்என எனதுளே
வந்துணர்வு தந்தகுருவே
துதிவாய்மை பெறுசாந்த பதம்மேவு மதியமே
துரிசறு சுயஞ்சோதியே
தோகைவா கனமீ திலங்கவரு தோன்றலே
சொல்லரிய நல்லதுணையே
ததிபெறும் சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்
தலமோங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே. 5

காமஉட் பகைவனும் கோபவெங் கொடியனும்
கனலோப முழுமூடனும்
கடுமோக வீணனும் கொடுமதம் எனுந்துட்ட
கண்கெட்ட ஆங்காரியும்
ஏமம்அறு மாச்சரிய விழலனும் கொலைஎன்
றியம்புபா தகனுமாம்இவ்
வெழுவரும் இவர்க்குற்ற உறவான பேர்களும்
எனைப்பற்றி டாமல்அருள்வாய்
சேமமிகு மாமறையின் ஓம்எனும் அருட்பதத்
திறன்அருளி மலயமுனிவன்
சிந்தனையின் வந்தனைஉ வந்தமெய்ஞ் ஞானசிவ
தேசிக சிகாரத்னமே
தாமம்ஒளிர் சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்
தலம்ஓங்கு கந்தவேளே

தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே. 6

நிலைஉறும் நிராசையாம் உயர்குலப் பெண்டிரொடு
நிகழ்சாந்த மாம்புதல்வனும்
நெறிபெறும் உதாரகுணம் என்னும்நற் பொருளும்மருள்
நீக்கும்அறி வாம்துணைவனும்
மலைவறு நிராங்கார நண்பனும் சுத்தமுறு
மனம்என்னும் நல்ஏவலும்
வருசகல கேவலம் இலாதஇட மும்பெற்று
வாழ்கின்ற வாழ்வருளுவாய்
அலைஇலாச் சிவஞான வாரியே ஆனந்த
அமுதமே குமுதமலர்வாய்
அணிகொள்பொற் கொடிபசுங் கொடிஇரு புறம்படர்ந்
தழகுபெற வருபொன்மலையே
தலைவர்புகழ் சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்
தலம்ஓங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே. 7

ஒருமையுடன் நினதுதிரு மலரடி நினைக்கின்ற
உத்தமர்தம் உறவுவேண்டும்
உள்ஒன்று வைத்துப் புறம்பொன்று பேசுவார்
உறவுகல வாமைவேண்டும்
பெருமைபெறு நினதுபுகழ் பேசவேண் டும்பொய்மை
பேசா திருக்கவேண்டும்
பெருநெறி பிடித்தொழுக வேண்டும்மத மானபேய்
பிடியா திருக்கவேண்டும்
மருவுபெண் ஆசையை மறக்கவே வேண்டும்உனை
மறவா திருக்கவேண்டும்
மதிவேண்டும் நின்கருணை நிதிவேண்டும் நோயற்ற
வாழ்வில்நான் வாழவேண்டும்
தருமமிகு சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்
தலம்ஓங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே. 8



ஈஎன்று நான்ஒருவர் இடம்நின்று கேளாத
இயல்பும்என் னிடம்ஒருவர்ஈ
திடுஎன்ற போதவர்க் கிலைஎன்று சொல்லாமல்
இடுகின்ற திறமும்இறையாம்
நீஎன்றும் எனைவிடா நிலையும்நான் என்றும்உள
நினைவிடா நெறியும்அயலார்
நிதிஒன்றும் நயவாத மனமும்மெய்ந் நிலைநின்று
நெகிழாத திடமும்உலகில்
சீஎன்று பேய்என்று நாய்என்று பிறர்தமைத்
தீங்குசொல் லாததெளிவும்
திரம்ஒன்று வாய்மையும் தூய்மையும் தந்துநின்
திருவடிக் காளாக்குவாய்
தாய்ஒன்று சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்
தலம்ஓங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே. 9

கரையில்வீண் கதைஎலாம் உதிர்கருங் காக்கைபோல்
கதறுவார் கள்ளுண்டதீக்
கந்தம்நா றிடஊத்தை காதம்நா றிடஉறு
கடும்பொய்இரு காதம்நாற
வரையில்வாய் கொடுதர்க்க வாதம்இடு வார்சிவ
மணங்கமழ் மலர்ப்பொன்வாய்க்கு
மவுனம்இடு வார்இவரை மூடர்என ஓதுறு
வழக்குநல் வழக்கெனினும்நான்
உரையிலவர் தமையுறா துனதுபுகழ் பேசும்அவ
ரோடுறவு பெறஅருளுவாய்
உயர்தெய்வ யானையொடு குறவர்மட மானும்உள்
உவப்புறு குணக்குன்றமே
தரையில்உயர் சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்
தலம்ஓங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே. 10

நாம்பிரமம் நமைஅன்றி ஆம்பிரமம் வேறில்லை
நன்மைதீ மைகளும்இல்லை
நவில்கின்ற வாகிஆந் தரம்இரண் டினும்ஒன்ற
நடுநின்ற தென்றுவீணாள்

போம்பிரம நீதிகேட் போர்பிரமை யாகவே
போதிப்பர் சாதிப்பர்தாம்
புன்மைநெறி கைவிடார் தம்பிரமம் வினைஒன்று
போந்திடில் போகவிடுவார்
சாம்பிரம மாம்இவர்கள் தாம்பிரமம் எனும்அறிவு
தாம்புபாம் பெனும்அறிவுகாண்
சத்துவ அகண்டபரி பூரணா காரஉப
சாந்தசிவ சிற்பிரமநீ
தாம்பிரிவில் சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்
தலம்ஓங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே. 11

பார்கொண்ட நடையில்வன் பசிகொண்டு வந்திரப்
பார்முகம் பார்த்திரங்கும்
பண்பும்நின் திருவடிக் கன்பும்நிறை ஆயுளும்
பதியும்நல் நிதியும்உணர்வும்
சீர்கொண்ட நிறையும்உட் பொறையும்மெய்ப் புகழும்நோய்த்
தீமைஒரு சற்றும்அணுகாத்
திறமும்மெய்த் திடமும்நல் இடமும்நின் அடியர்புகழ்
செப்புகின் றோர்அடைவர்காண்
கூர்கொண்ட நெட்டிலைக் கதிர்வேலும் மயிலும்ஒரு
கோழியங் கொடியும்விண்ணோர்
கோமான்தன் மகளும்ஒரு மாமான்தன் மகளும்மால்
கொண்டநின் கோலமறவேன்
தார்கொண்ட சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்
தலம்ஓங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே. 12

வன்பெரு நெருப்பினைப் புன்புழுப் பற்றுமோ
வானைஒரு மான்தாவுமோ
வலியுள்ள புலியைஓர் எலிசீறு மோபெரிய
மலையைஓர் ஈச்சிறகினால்
துன்புற அசைக்குமோ வச்சிரத் தூண்ஒரு
துரும்பினால் துண்டமாமோ



சூரியனை இருள்வந்து சூழுமோ காற்றில்மழை
தோயுமோ இல்லை அதுபோல்
அன்புடைய நின்அடியர் பொன்அடியை உன்னும்அவர்
அடிமலர் முடிக்கணிந்தோர்க்
கவலமுறு மோகாமம் வெகுளிஉறு மோமனத்
தற்பமும்வி கற்பம்உறுமோ
தன்புகழ்செய் சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்
தலம்ஓங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே. 13

கானலிடை நீரும்ஒரு கட்டையில் கள்வனும்
காண்உறு கயிற்றில்அரவும்
கடிதரு கிளிஞ்சிலிடை வெள்ளியும் பொன்னைக்
கதித்தபித் தளையின்இடையும்
மானலில் கண்டுள மயங்கல்போல் கற்பனையை
மாயையில் கண்டுவீணே
மனைஎன்றும் மகவென்றும் உறவென்றும் நிதிஎன்றும்
வாழ்வென்றும் மானம்என்றும்
ஊனலின் உடம்பென்றும் உயிரென்றும் உளம்என்றும்
உள்என்றும் வெளிஎன்றும்வான்
உலகென்றும் அளவறுவி காரம்உற நின்றஎனை
உண்மைஅறி வித்தகுருவே
தானமிகு சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்
தலம்ஓங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே. 14

கற்றொளிகொள் உணர்வினோர் வேண்டாத இப்பெருங்
கன்மவுட லில்பருவம்நேர்.
கண்டழியும் இளமைதான் பகல்வேட மோபுரைக்
கடல்நீர்கொ லோகபடமோ
உற்றொளியின் வெயில்இட்ட மஞ்சளோ வான்இட்ட
ஒருவிலோ நீர்க்குமிழியோ
உலைஅனல் பெறக்காற்றுள் ஊதும் துருத்தியோ
ஒன்றும்அறி யேன்இதனைநான்
பற்றுறுதி யாக்கொண்டு வனிதையர்கண் வலையினில்
பட்டுமதி கெட்டுழன்றே

பாவமே பயில்கின்ற தல்லாது நின்அடிப்
பற்றணுவும் உற்றறிகிலேன்
சற்றைஅகல் சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்
தலம்ஓங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே. 15

சடமாகி இன்பம் தராதாகி மிகுபெருஞ்
சஞ்சலா காரமாகிச்
சற்றாகி வெளிமயல் பற்றாகி ஓடும்இத்
தன்மைபெறு செல்வமந்தோ
விடமாகி ஒருகபட நடமாகி யாற்றிடை
விரைந்துசெலும் வெள்ளம்ஆகி
வேலைஅலை யாகிஆங் காரவலை யாகிமுதிர்
வேனில்உறு மேகம்ஆகிக்
கடமாய சகடமுறு காலாகி நீடுவாய்க்
காலோடும் நீராகியே
கற்பிலா மகளிர்போல் பொற்பிலா துழலும்இது
கருதாத வகைஅருளுவாய்
தடமேவு சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்
தலம்ஓங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே. 16

உப்புற்ற பாண்டம்என ஒன்பது துவாரத்துள்
உற்றசும் பொழுகும்உடலை
உயர்கின்ற வானிடை எறிந்தகல் என்றும்மலை
உற்றிழியும் அருவிஎன்றும்
வெப்புற்ற காற்றிடை விளக்கென்றும் மேகம்உறு
மின்என்றும் வீசுகாற்றின்
மேற்பட்ட பஞ்சென்றும் மஞ்சென்றும் வினைதந்த
வெறுமாய வேடம்என்றும்
கப்புற்ற பறவைக் குடம்பைஎன் றும்பொய்த்த
கனவென்றும் நீரில்எழுதும்
கைஎழுத் தென்றும்உட் கண்டுகொண் டதிலாசை
கைவிடேன் என்செய்குவேன்
தப்பற்ற சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்
தலம்ஓங்கு கந்தவேளே



தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே. 17

எந்தைநினை வாழ்த்தாத பேயர்வாய் கூழுக்கும்
ஏக்கற்றி ருக்கும்வெறுவாய்
எங்கள்பெரு மான்உனை வணங்காத மூடர்தலை
இகழ்விற கெடுக்கும்தலை
கந்தமிகு நின்மேனி காணாத கயவர்கண்
கலநீர் சொரிந்தஅழுகண்
கடவுள்நின் புகழ்தனைக் கேளாத வீணர்செவி
கைத்திழவு கேட்கும்செவி
பந்தம்அற நினைஎணாப் பாவிகள் தம்நெஞ்சம்
பகீர்என நடுங்கும்நெஞ்சம்
பரமநின் திருமுன்னர் குவியாத வஞ்சர்கை
பலிஏற்க நீள்கொடுங்கை
சந்தமிகு சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்
தலம்ஓங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே. 18

ஐயநின் சீர்பேசு செல்வர்வாய் நல்லதெள்
அமுதுண் டுவந்ததிருவாய்
அப்பநின் திருவடி வணங்கினோர் தலைமுடி
அணிந்தோங்கி வாழுந்தலை
மெய்யநின் திருமேனி கண்டபுண் ணியர்கண்கள்
மிக்கஒளி மேவுகண்கள்
வேலநின் புகழ்கேட்ட வித்தகர் திருச்செவி
விழாச்சுபம் கேட்கும்செவி
துய்யநின் பதம்எண்ணும் மேலோர்கள் நெஞ்சம்மெய்ச்
சுகரூப மானநெஞ்சம்
தோன்றல்உன் திருமுன் குவித்தபெரி யோர்கைகள்
சுவர்ன்னமிடு கின்றகைகள்
சையம்உயர் சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்
தலம்ஓங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே. 19

உழல்உற்ற உழவுமுதல் உறுதொழில் இயற்றிமலம்
ஒத்தபல பொருள்ஈட்டிவீண்

உறுவயிறு நிறையவெண் சோறடைத் திவ்வுடலை
ஒதிபோல் வளர்த்துநாளும்
விழல்உற்ற வாழ்க்கையை விரும்பினேன் ஐயஇவ்
வெய்யஉடல் பொய்என்கிலேன்
வெளிமயக் கோமாய விடமயக் கோஎனது
விதிமயக் கோஅறிகிலேன்
கழல்உற்ற நின்துணைக் கால்மலர் வணங்கிநின்
கருணையை விழைந்துகொண்டெம்
கனைகணே ஈராறு கண்கொண்ட என்றன்இரு
கண்ணேஎ னப்புகழ்கிலேன்
தழைவுற்ற சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்
தலம்ஓங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே. 20

வானம்எங் கேஅமுத பானம்எங்கே அமரர்
வாழ்க்கைஅபி மானம்எங்கே
மாட்சிஎங் கேஅவர்கள் சூழ்ச்சிஎங் கேதேவ
மன்னன்அர சாட்சிஎங்கே
ஞானம்எங் கேமுனிவர் மோனம்எங் கேஅந்த
நான்முகன் செய்கைஎங்கே
நாரணன் காத்தலை நடத்தல்எங் கேமறை
நவின்றிடும் ஒழுக்கம்எங்கே
ஈனம்அங் கேசெய்த தாருகனை ஆயிர
இலக்கம்உறு சிங்கமுகனை
எண்அரிய திறல்பெற்ற சூரனை மறக்கருணை
ஈந்துபணி கொண்டிலைஎனில்
தானமிங் கேர்சென்னை கந்தகோட் டத்துள்வளர்
தலம்ஓங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே. 21

மனமான ஒருசிறுவன் மதியான குருவையும்
மதித்திடான் நின்அடிச்சீர்
மகிழ்கல்வி கற்றிடான் சும்மாஇ ரான்காம
மடுவினிடை வீழ்ந்துசுழல்வான்
சினமான வெஞ்சுரத் துழலுவன் உலோபமாம்
சிறுகுகையி னூடுபுகுவான்



செறுமோக இருளிடைச் செல்குவான் மதம்எனும்
செய்குன்றில் ஏறிவிழுவான்
இனமான மாச்சரிய வெங்குழியின் உள்ளே
இறங்குவான் சிறிதும்அந்தோ
என்சொல்கே ளான்எனது கைப்படான் மற்றிதற்
கேழையேன் என்செய்குவேன்
தனநீடு சென்னையில் கத்தகோட் டத்துள்வளர்
தலம்ஓங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே. 22

வாய்கொண் டுரைத்தல்அரி தென்செய்கேன்
என்செய்கேன்
வள்ளல்உன் சேவடிக்கண்
மன்னாது பொன்னாசை மண்ணாசை பெண்ணாசை
வாய்ந்துழலும் எனதுமனது
பேய்கொண்டு கள்உண்டு கோலினால் மொத்துண்டு
பித்துண்ட வன்குரங்கோ
பேசுறு குலாலனாற் சுழல்கின்ற திகிரியோ
பேதைவிளை யாடுபந்தோ
காய்கொண்டு பாய்கின்ற வெவ்விலங் கோபெருங்
காற்றினாற் சுழல்கறங்கோ
காலவடி வோஇந்த்ர ஜாலவடி வோஎனது
கர்மவடி வோஅறிகிலேன்
தாய்கொண்ட சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்
தலம்ஓங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே. 23

கற்றமே லவரொடும் கூடிநில் லேன்கல்வி
கற்கும்நெறி தேர்ந்துகல்லேன்
கனிவுகொண் டுனதுதிரு அடியைஒரு கனவினும்
கருதிலேன் நல்லன்அல்லேன்
குற்றமே செய்வதென் குணமாகும் அப்பெருங்
குற்றம்எல் லாம்குணம்எனக்
கொள்ளுவது நின்அருட் குணமாகும் என்னில்என்
குறைதவிர்த் தருள்புரிகுவாய்

பெற்றமேல் வரும்ஒரு பெருந்தகையின் அருள்உருப்
பெற்றெழுந் தோங்குசுடரே
பிரணவா காரசின் மயவிமல சொரூபமே
பேதமில் பரப்பிரமமே
தற்றகைய சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்
தலம்ஓங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே. 24

பாய்ப்பட்ட புலிஅன்ன நாய்ப்பட்ட கயவர்தம்
பாழ்ப்பட்ட மனையில்நெடுநாள்ர்
பண்பட்ட கழுநீரும் விண்பட்ட இன்னமுது
பட்டபா டாகும்அன்றிப்
போய்ப்பட்ட புல்லுமணி பூப்பட்ட பாடும்நற்
பூண்பட்ட பாடுதவிடும்
புன்பட்ட உமியும்உயர் பொன்பட்ட பாடவர்கள்
போகம்ஒரு போகமாமோ
ஆய்ப்பட்ட மறைமுடிச் சேய்ப்பட்ட நின்அடிக்
காட்பட்ட பெருவாழ்விலே
அருள்பட்ட நெறியும்மெய்ப் பொருள்பட்ட
நிலையும்உற
அமர்போக மேபோகமாம்
தாய்ப்பட்ட சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்
தலம்ஓங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே. 25

சேவலம் கொடிகொண்ட நினைஅன்றி வேறுசிறு
தேவரைச் சிந்தைசெய்வோர்
செங்கனியை விட்டுவேப் பங்கனியை உண்ணும்ஒரு
சிறுகருங் காக்கைநிகர்வார்
நாவலங் காரம்அற வேறுபுகழ் பேசிநின்
நற்புகழ் வழுத்தாதபேர்
நாய்ப்பால் விரும்பிஆன் தூய்ப்பாலை நயவாத
நவையுடைப் பேயர்ஆவார்
நீவலந் தரநினது குற்றேவல் புரியாது
நின்றுமற் றேவல்புரிவோர்



நெல்லுக் கிறைக்காது புல்லுக் கிறைக்கின்ற
நெடியவெறு வீணராவார்
தாவலம் சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்
தலம்ஓங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே. 26

பிரமன்இனி என்னைப் பிறப்பிக்க வல்லனோ
பெய்சிறையில் இன்னும்ஒருகால்
பின்பட்டு நிற்குமோ முன்பட்ட குட்டில
பெறுந்துயர் மறந்துவிடுமோ
இரவுநிறம் உடைஇயமன் இனிஎனைக் கனவினும்
இறப்பிக்க எண்ணம்உறுமோ
எண்ணுறான் உதைஉண்டு சிறைஉண்ட தன்உடல்
இருந்தவடு எண்ணுறானோ
கரவுபெறு வினைவந்து நலியுமோ அதனைஒரு
காசுக்கும் மதியேன்எலாம்
கற்றவர்கள் பற்றும்நின் திருஅருளை யானும்
கலந்திடப் பெற்றுநின்றேன்
தரமருவு சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்
தலம்ஓங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே. 27

நீர்உண்டு பொழிகின்ற கார்உண்டு விளைகின்ற
நிலன்உண்டு பலனும்உண்டு
நிதிஉண்டு துதிஉண்டு மதிஉண்டு கதிகொண்ட
நெறிஉண்டு நிலையும்உண்டு
ஊர்உண்டு பேர்உண்டு மணிஉண்டு பணிஉண்டு
உடைஉண்டு கொடையும்உண்டு
உண்டுண்டு மகிழவே உணவுண்டு சாந்தம்உறும்
உளம்உண்டு வளமும்உண்டு
தேர்உண்டு கரிஉண்டு பரிஉண்டு மற்றுள்ள
செல்வங்கள் யாவும்உண்டு
தேன்உண்டு வண்டுறு கடம்பணியும் நின்பதத்
தியானமுண் டாயில்அரசே

தார்உண்ட சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்
தலம்ஓங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே. 28

உளம்எனது வசம்நின்ற தில்லைஎன் தொல்லைவினை
ஒல்லைவிட் டிடவுமில்லை
உன்பதத் தன்பில்லை என்றனக் குற்றதுணை
உனைஅன்றி வேறும்இல்லை
இளையன்அவ னுக்கருள வேண்டும்என் றும்பால்
இசைக்கின்ற பேரும்இல்லை
ஏழையவ னுக்கருள்வ தேன்என்றுன் எதிர்நின்
றியம்புகின் றோரும்இல்லை
வளமருவும் உனதுதிரு அருள்குறைவ தில்லைமேல்
மற்றொரு வழக்கும்இல்லை
வந்திரப் போர்களுக் கிலைஎன்ப தில்லைநீ
வன்மனத் தவனும்அல்லை
தளர்விலாச் சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்
தலம்ஓங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே. 29

எத்திக்கும் என்உளம் தித்திக்கும் இன்பமே
என்உயிர்க் குயிராகும்ஓர்
ஏகமே ஆனந்த போகமே யோகமே
என்பெருஞ் செல்வமேநன்
முத்திக்கு முதலான முதல்வனே மெய்ஞ்ஞான
மூர்த்தியே முடிவிலாத
முருகனே நெடியமால் மருகனே சிவபிரான்
முத்தாடும் அருமைமகனே
பத்திக் குவந்தருள் பரிந்தருளும் நின்அடிப்
பற்றருளி என்னைஇந்தப்
படியிலே உழல்கின்ற குடியிலே ஒருவனாப்
பண்ணாமல் ஆண்டருளுவாய்
சத்திக்கும் நீர்ச்சென்னை கந்தகோட் டத்துள்வளர்
தலம்ஓங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே. 30



நான்கொண்ட விரதம்நின் அடிஅலால் பிறர்தம்மை
நாடாமை ஆகும்இந்த
நல்விரத மாம்கனியை இன்மைஎனும் ஒருதுட்ட
நாய்வந்து கவ்விஅந்தோ
தான்கொண்டு போவதினி என்செய்வேன் என்செய்வேன்
தளராமை என்னும்ஒருகைத்
தடிகொண் டடிக்கவோ வலியிலேன் சிறியனேன்
தன்முகம் பார்த்தருளுவாய்
வான்கொண்ட தெள்அமுத வாரியே மிகுகருணை
மழையே மழைக்கொண்டலே
வள்ளலே என்இருகண் மணியேஎன் இன்பமே
மயில்ஏறு மாணிக்கமே
தான்கொண்ட சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்
தலம்ஓங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே. 31

## 2. கந்தர் சரணப்பத்து

### சென்னைக் கந்தகோட்டம்

#### எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

அருளார் அமுதே சரணம் சரணம்
அழகா அமலா சரணம் சரணம்
பொருளா எனைஆள் புனிதா சரணம்
பொன்னே மணியே சரணம் சரணம்
மருள்வார்க் கரியாய் சரணம் சரணம்
மயில்வா கனனே சரணம் சரணம்
கருணா லயனே சரணம் சரணம்
கந்தா சரணம் சரணம் சரணம். 1

பண்ணோர் மறையின் பயனே சரணம்
பதியே பரமே சரணம் சரணம்
விண்ணோர் ஒளியே வெளியே சரணம்
வெளியின் விளைவே சரணம் சரணம்

உண்ணேர் உயிரே உணர்வே சரணம்
உருவே அருவே உறவே சரணம்
கண்ணே மணியே சரணம் சரணம்
கந்தா சரணம் சரணம் சரணம். 2

முடியா முதலே சரணம் சரணம்
முருகா குமரா சரணம் சரணம்
வடிவேல் அரசே சரணம் சரணம்
மயிலூர் மணியே சரணம் சரணம்
அடியார்க் கெளியாய் சரணம் சரணம்
அரியாய் பெரியாய் சரணம் சரணம்
கடியாக் கதியே சரணம் சரணம்
கந்தா சரணம் சரணம் சரணம். 3

பூவே மணமே சரணம் சரணம்
பொருளே அருளே சரணம் சரணம்
கோவே குகனே சரணம் சரணம்
குருவே திருவே சரணம் சரணம்
தேவே தெளிவே சரணம் சரணம்
சிவசண் முகனே சரணம் சரணம்
காவேர் தருவே சரணம் சரணம்
கந்தா சரணம் சரணம் சரணம். 4

நடவும் தனிமா மயிலோய் சரணம்
நல்லார் புகழும் வல்லோய் சரணம்
திடமும் திருவும் தருவோய் சரணம்
தேவர்க் கரியாய் சரணம் சரணம்
தடவண் புயனே சரணம் சரணம்
தனிமா முதலே சரணம் சரணம்
கடவுள் மணியே சரணம் சரணம்
கந்தா சரணம் சரணம் சரணம். 5

கோலக் குறமான் கணவா சரணம்
குலமா மணியே சரணம் சரணம்
சீலத் தவருக் கருள்வோய் சரணம்
சிவனார் புதல்வா சரணம் சரணம்
ஞாலத் துயர்தீர் நலனே சரணம்
நடுவா கியநல் ஒளியே சரணம்



காலன் தெறுவோய் சரணம் சரணம்
கந்தா சரணம் சரணம் சரணம். 6

நங்கட் கினியாய் சரணம் சரணம்
நந்தா உயர்சம் பந்தா சரணம்
திங்கட் சடையான் மகனே சரணம்
சிவைதந் தருளும் புதல்வா சரணம்
துங்கச் சுகம்நன் றருள்வோய் சரணம்
சுரர்வாழ்த் திடுநம் துரையே சரணம்
கங்கைக் கொருமா மதலாய் சரணம்
கந்தா சரணம் சரணம் சரணம். 7

ஒளியுள் ஒளியே சரணம் சரணம்
ஒன்றே பலவே சரணம் சரணம்
தெளியும் தெருளே சரணம் சரணம்
சிவமே தவமே சரணம் சரணம்
அளியும் கனியே சரணம் சரணம்
அமுதே அறிவே சரணம் சரணம்
களியொன் றருள்வோய் சரணம் சரணம்
கந்தா சரணம் சரணம் சரணம். 8

மன்னே எனைஆள் வரதா சரணம்
மதியே அடியேன் வாழ்வே சரணம்
பொன்னே புனிதா சரணம் சரணம்
புகழ்வார் இதயம் புகுவாய் சரணம்
அன்னே வடிவேல் அரசே சரணம்
அறுமா முகனே சரணம் சரணம்
கன்னேர் புயனே சரணம் சரணம்
கந்தா சரணம் சரணம் சரணம். 9

வேதப் பொருளே சரணம் சரணம்
விண்ணோர் பெருமான் சரணம் சரணம்
போதத் திறனே சரணம் சரணம்
புனைமா மயிலோய் சரணம் சரணம்
நாதத் தொலியே சரணம் சரணம்
நவைஇல் லவனே சரணம் சரணம்
காதுக் கினிதாம் புகழோய் சரணம்
கந்தா சரணம் சரணம் சரணம். 10

# திருத்தணிகைப் பதிகங்கள்

## 3. பிரார்த்தனை மாலை

### கட்டளைக் கலித்துறை

சீர்கொண்ட தெய்வ வதனங்கள் ஆறும் திகழ்கடப்பந்
தார்கொண்ட பன்னிரு தோள்களும் தாமரைத் தாள்களும்ஓர்
கூர்கொண்ட வேலும் மயிலும்நற் கோழிக் கொடியும்அருட்
கார்கொண்ட வண்மைத் தணிகா சலமும்என் கண்ணுற்றதே. 1

கண்மூன் றுறுசெங் கரும்பின்முத் தேபதம் கண்டிடுவான்
மண்மூன் றுலகும் வழுத்தும் பவள மணிக்குன்றமே
திண்மூன்று நான்கு புயங்கொண் டொளிர்வச் சிரமணியே
வண்மூன் றலர்மலை வாழ்மயில் ஏறிய மாணிக்கமே. 2

மாணித்த ஞான மருந்தேஎன் கண்ணின்உள் மாமணியே
ஆணிப்பொன் னேஎன தாருயி ரேதணி காசலனே
தாணிற்கி லேன்நினைத் தாழாத வஞ்சர் தமதிடம்போய்ப்
பேணித் திரிந்தனன் அந்தோஎன் செய்வன்இப் பேதையனே. 3

அன்னே எனைத்தந்த அப்பாஎன் றேங்கி அலறுகின்றேன்
என்னேஇவ் வேழைக் கிரங்காது நீட்டித் திருத்தல்எந்தாய்
பொன்னே சுகுணப் பொருப்பே தணிகைப் பொருப்பமர்ந்த
மன்னே கலப மயில்மேல் அழகிய மாமணியே. 4

மணியே தினைப்புன வல்லியை வேண்டி வளர்மறைவான்
கணியே எனநின்ற கண்ணே என்உள்ளக் களிநறவே
பணியேன் எனினும் எனைவலிந் தாண்டுன் பதந்தரவே
நணியே தணிகைக்கு வாஎன ஓர்மொழி நல்குவையே. 5

நல்காத ஈனர்தம் பாற்சென் றிரந்து நவைப்படுதல்
மல்காத வண்ணம் அருள்செய்கண் டாய்மயில் வாகனனே
பல்காதல் நீக்கிய நல்லோர்க் கருளும் பரஞ்சுடரே
அல்காத வண்மைத் தணிகா சலத்தில் அமர்ந்தவனே. 6

அமரா வதிஇறைக் காருயிர் ஈந்த அருட்குன்றமே
சமரா புரிக்கர சேதணி காசலத் தற்பரனே
குமரா பரம குருவே குகாஎனக் கூவிநிற்பேன்
எமராஜன் வந்திடுங் கால்ஐய னேஎனை ஏன்றுகொள்ளே. 7



கொள்உண்ட வஞ்சர்தம் கூட்டுண்டு வாழ்க்கையில்
குட்டுண்டுமேல்
துள்உண்ட நோயினில் சூடுண்டு மங்கையர் தோய்வெனும்ஓர்
கள்உண்ட நாய்க்குன் கருணைஉண் டோநற் கடல்அமுதத்
தெள்உண்ட தேவர் புகழ்தணி காசலச் சிற்பரனே. 8

சிற்பகல் மேவும்இத் தேகத்தை ஓம்பித் திருஅனையார்
தற்பக மேவிழைந் தாழ்ந்தேன் தணிகை தனில்அமர்ந்த
கற்பக மேநின் கழல்கரு தேன்இக் கடைப்படும்என்
பொற்பகம் மேவிய நின்அருள் என்என்று போற்றுவதே. 9

போற்றேன் எனினும் பொறுத்திடல் வேண்டும் புவிநடையாம்
சேற்றே விழுந்து தியங்குகின் றேனைச் சிறிதும்இனி
ஆற்றேன் எனதர சேஅமு தேஎன் அருட்செல்வமே
மேற்றேன் பெருகு பொழில்தணி காசல வேலவனே. 10

வேல்கொண்ட கையும் விறல்கொண்ட தோளும் விளங்குமயில்
மேல்கொண்ட வீறும் மலர்முகம் ஆறும் விரைக்கமலக்
கால்கொண்ட வீரக் கழலும்கண் டால்அன்றிக் காமன்எய்யும்
கோல்கொண்ட வன்மை அறுமோ தணிகைக் குருபரனே. 11

குருவே அயன்அரி ஆதியர் போற்றக் குறைதவிர்ப்பான்
வருவேல் பிடித்து மகிழ்வள்ள லேகுண மாமலையே
தருவே தணிகைத் தயாநிதி யேதுன்பச் சாகரமாம்
கருவேர் அறுத்திக் கடையனைக் காக்கக் கடன்உனக்கே. 12

உனக்கே விழைவுகொண் டோலமிட் டோங்கி உலறுகின்றேன்
எனக்கே அருள்இத் தமியேன் பிழைஉளத் தெண்ணியிடேல்
புனக்கேழ் மணிவல்லி யைப்புணர்ந் தாண்டருள் புண்ணியனே
மனக்கேத மாற்றும் தணிகா சலத்தமர் வானவனே. 13

வானோர் குடிகளை வாழ்வித்த தெய்வ மணிச்சுடரே
நானோர்எளியன்என் துன்பறுத் தாள்என நண்ணிநின்றேன்
ஏனோநின் நெஞ்சம் இரங்காத வண்ணம் இருங்கணிப்பூந்
தேனோ டருவி பயிலும் தணிகைச் சிவகுருவே. 14

கையாத துன்பக் கடல்மூழ்கி நெஞ்சம் கலங்கிஎன்றன்
ஐயாநின் பொன்அடிக் கோலமிட் டேன்என்னை
ஆண்டுகொள்ளாய்
மையார் தடங்கண் மலைமகள் கண்டு மகிழ்செல்வமே
செய்யார் தணிகை மலைஅர சேஅயிற் செங்கையனே. 15

செங்கைஅம் காந்தள் அனையமின் னார்தம் திறத்துழன்றே
வெங்கயம் உண்ட விளவாயி னேன்விறல் வேலினைஓர்
அங்கையில் ஏந்திய ஐயா குறவர் அரிதில்பெற்ற
மங்கை மகிழும் தணிகேச னேஅருள் வந்தெனக்கே. 16

கேளாது போல்இருக் கின்றனை ஏழைஇக் கீழ்நடையில்
வாளா இடர்கொண் டலறிடும் ஓலத்தை மாமருந்தே
தோளா மணிச்சுட ரேதணி காசலத் தூய்ப்பொருளே
நாளாயின் என்செய்கு வேன்இறப் பாய நவைவருமே. 17

நவையே தருவஞ்ச நெஞ்சகம் மாயவும் நான்உன்அன்பர்
அவையே அணுகவும் ஆனந்த வாரியில் ஆடிடவும்
சுவையே அமுதன்ன நின்திரு நாமம் துதிக்கவும்ஆம்
இவையேஎன் எண்ணம் தணிகா சலத்துள் இருப்பவனே. 18

இருப்பாய மாய மனத்தால் வருந்தி இளைத்துநின்றேன்
பொருப்பாய கன்மப் புதுவாழ்வில் ஆழ்ந்தது போதும்இன்றே
கருப்பாழ் செயும்உன் கழல்அடிக் கேஇக் கடையவனைத்
திருப்பாய் எனில்என்செய் கேன்தணி காசலத் தெள்ளமுதே. 19

தெள்அகத் தோங்கிய செஞ்சுட ரேசிவ தேசிகனே
கள்அகத் தேமலர்க் காஆர் தணிகைஎங் கண்மணியே
எள்அகத் தேஉழன் றென்நின் றலைத்தெழுந் திங்கும்அங்கும்
துள்அகத் தேன்சிரம் சேரும்கொ லோநின் துணைஅடியே. 20

அடியேன் எனச்சொல்வ தல்லால்நின் தாள்அடைந்
தாரைக்கண்டே
துடியேன் அருண கிரிபாடும் நின்அருள் தோய்புகழைப்
படியேன் பதைத்துரு கேன்பணி யேன்மனப் பந்தம்எலாம்
கடியேன் தணிகையைக் காணேன்என் செய்வேன்எம்
காதலனே. 21

தலனே அடியர் தனிமன மாம்புகழ் சார்தணிகா
சலனே அயன்அரி ஆதியர் வாழ்ந்திடத் தாங்கயில்வேல்
வலனேநின் பொன்அருள் வாரியின் மூழ்க மனோலயம்வாய்த்
திலனேல் சனன மரணம்என் னும்கடற் கென்செய்வனே. 22

என்செய்கை என்செய்கை எந்தாய்நின் பொன்அடிக்
கேஅலங்கல்
வன்செய்கை நீங்க மகிழ்ந்தணி யேன்துதி வாய்உரைக்க



மென்செய்கை கூப்ப விழிநீர் துளித்திட மெய்சிலிர்க்கத்
தன்செய்கை என்பதற் றேதணி காசலம் சார்ந்திலனே. 23

சாரும் தணிகையில் சார்ந்தோய்நின் தாமரைத் தாள்துணையைச்
சேரும் தொழும்பர் திருப்பதம் அன்றிஇச் சிற்றடியேன்
ஊரும் தனமும் உறவும் புகழும் உரைமடவார்
வாருந் தணிமுலைப் போகமும் வேண்டிலன்
மண்விண்ணிலே. 24

மண்நீர் அனல்வளி வான்ஆகி நின்றருள் வந்துஎன்றே
தெண்நீர்மை யால்புகழ் மால்அய னேமுதல் தேவர்கள்தம்
கண்நீர் துடைத்தருள் கற்பக மேஉனைக் கண்டுகொண்டேன்
தண்நீர் பொழிற்கண் மதிவந் துலாவும் தணிகையிலே. 25

தணியாத துன்பத் தடங்கடல் நீங்கநின் தன்மலர்த்தாள்
பணியாத பாவிக் கருளும்உண் டோபசு பாசம்அற்றோர்க்
கணியாக நின்ற அருட்செல்வ மேதணி காசலனே
அணிஆ தவன்முத லாம்அட்ட மூர்த்தம் அடைந்தவனே. 26

அடையாத வஞ்சகர் பால்சென் றிரந்திங் கலைந்தலைந்தே
கடையான நாய்க்குன் கருணைஉண் டோதணி கைக்குள்நின்றே
உடையாத நல்நெஞ்சர்க் குண்மையைக் காண்பிக்கும் உத்தமனே
படையாத தேவர் சிறைமீட் டளித்தருள் பண்ணவனே. 27

பண்ணவ னேநின் பதமலர் ஏத்தும் பயன்உடையோர்
கண்ணவ னேதணி காசல னேஅயில் கையவனே
விண்ணவர் ஏத்திய மேலவ னேமயல் மேவுமனம்
புண்ணவ னேனையும் சேர்ந்தாய்என் னேஉன்றன்
பொன்அருளே. 28

பொன்ஆர் புயத்தனும் பூஉடை யோனும் புகழ்மணியே
என்ஆவி யின்துணை யேதணி காசலத் தேஅமர்ந்த
மன்னாநின் பொன்அடி வாழ்த்தாது வீணில் வருந்துறுவேன்
இன்னா இயற்றும் இயமன்வந் தால்அவற் கென்சொல்வனே. 29

சொல்லார் மலர்புனை அன்பகத் தோர்க்கருள்
சொல்லும்எல்லாம்
வல்லாய்என் றேத்த அறிந்தேன் இனிஎன்றன் வல்வினைகள்
எல்லாம் விடைகொண் டிரியும்என் மேல்இய மன்சினமும்
செல்லாது காண்ஐய னேதணி காசலச் சீர்அரைசே. 30

## 4. எண்ணப் பத்து

### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

அணிகொள் வேல்உடை அண்ணலே
நின்திரு அடிகளை அன்போடும்
பணிகி லேன்அகம் உருகிநின்
றாடிலேன் பாடிலேன் மனமாயைத்
தணிகி லேன்திருத் தணிகையை
நினைகிலேன் சாமிநின் வழிபோகத்
துணிகி லேன்இருந் தென்செய்தேன்
பாவியேன் துன்பமும் எஞ்சேனே. 1

சேல்பி டித்தவன் தந்தைஆ
தியர்தொழும் தெய்வமே சிவப்பேறே
மால்பி டித்தவர் அறியொணாத்
தணிகைமா மலைஅமர்ந் திடுவாழ்வே
வேல்பி டித்தருள் வள்ளலே
யான்சதுர் வேதமும் காணாநின்
கால்பி டிக்கவும் கருணைநீ
செய்யவும் கண்டுகண் களிப்பேனோ. 2

களித்து நின்திருக் கழலிணை
ஏழையேன் காண்பனோ அலதன்பை
ஒளித்து வன்துயர் உழப்பனோ
இன்னதென் றுணர்ந்திலேன் அருட்போதம்
தெளித்து நின்றிடும் தேசிக
வடிவமே தேவர்கள் பணிதேவே
தளிர்த்த தண்பொழில் தணிகையில்
வளர்சிவ தாருவே மயிலோனே. 3

மயிலின் மீதுவந் தருள்தரும்
நின்றிரு வரவினுக் கெதிர்பார்க்கும்
செயலி னேன்கருத் தெவ்வணம்
முடியுமோ தெரிகிலேன் என்செய்கேன்
அயிலின் மாமுதல் தடிந்திடும்
ஐயனே ஆறுமா முகத்தேவே
கயிலை நேர்திருத் தணிகைஅம்
பதிதனில் கந்தன்என் றிருப்போனே. 4



இருப்பு நெஞ்சகக் கொடியனேன்
பிழைதனை எண்ணுறேல் இனிவஞ்சக்
கருப்பு காவணம் காத்தருள்
ஐயனே கருணைஅம் கடலேஎன்
விருப்புள் ஊறிநின் றோங்கிய
அமுதமே வேல்உடை எம்மானே
தருப்பு காஇனன் விலகுறும்
தணிகைவாழ் சாந்தசற் குணக்குன்றே. 5

குன்று நேர்பிணித் துயரினால்
வருந்திநின் குரைகழல் கருதாத
துன்று வஞ்சகக் கள்ளனேன்
நெஞ்சகத் துயர்அறுத் தருள்செய்வான்
இன்று மாமயில் மீதினில்
ஏறிஇவ் வேழைமுன் வருவாயேல்
நன்று நன்றதற் கென்சொல்வார்
தணிகைவாழ் நாதநின் அடியாரே. 6

யாரை யுந்துணை கொண்டிலேன்
நின்அடி இணைதுணை அல்லால்நின்
பேரை உன்னிவாழ்ந் திடும்படி
செய்வையோ பேதுறச் செய்வாயோ
பாரை யும்உயிர்ப் பரப்பையும்
படைத்தருள் பகவனே உலகேத்தும்
சீரை உற்றிடும் தணிகைஅம்
கடவுள்நின் திருவுளம் அறியேனே. 7

உளங்கொள் வஞ்சக நெஞ்சர்தம்
இடம்இடர் உழந்தகம் உலைவுற்றேன்
வளங்கொள் நின்பத மலர்களை
நாள்தொறும் வாழ்த்திலேன் என்செய்கேன்
குளங்கொள் கண்ணனும் கண்ணனும்
பிரமனும் குறிக்கரும் பெருவாழ்வே
தளங்கொள் பொய்கைசூழ் தணிகைஅம்
பதியில்வாழ் தனிப்பெரும் புகழ்த்தேவே. 8

தேவர் நாயகன் ஆகியே
என்மனச் சிலைதனில் அமர்ந்தோனே

மூவர் நாயகன் எனமறை
வாழ்த்திடும் முத்தியின் வித்தேஇங்
கேவ ராயினும் நின்திருத்
தணிகைசென் றிறைஞ்சிடில் அவரேஎன்
பாவ நாசம்செய் தென்றனை
ஆட்கொளும் பரஞ்சுடர் கண்டாயே. 9

கண்ட னேகவா னவர்தொழும்
நின்திருக் கழல்இணை தனக்காசை
கொண்ட னேகமாய்த் தெண்டன்இட்
டானந்தக் கூத்தினை உகந்தாடித்
தொண்ட னேனும்நின் அடியரில்
செறிவனோ துயர்உழந் தலைவேனோ
அண்ட னேதிருத் தணிகைவாழ்
அண்ணலே அணிகொள்வேல் கரத்தோனே. 10

## 5. செழுஞ்சுடர் மாலை

### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

ஊனே உடையே பொருளேஎன்
றுருகி மனது தடுமாறி
வீணே துயரத் தழுந்துகின்றேன்
வேறோர் துணைநின் அடிஅன்றிக்
காணேன் அமுதே பெருங்கருணைக்
கடலே கனியே கரும்பேநல்
சேணேர் தணிகை மலைமருந்தே
தேனே ஞானச் செழுஞ்சுடரே. 1

பாரும் விசும்பும் அறியஎனைப்
பயந்த தாயும் தந்தையும்நீ
ஓரும் போதிங் கெனில்எளியேன்
ஓயாத் துயருற் றிடல்நன்றோ
பாரும் காண உனைவாதுக்
கிழுப்பேன் அன்றி என்செய்கேன்
சேரும் தணிகை மலைமருந்தே
தேனே ஞானச் செழுஞ்சுடரே. 2



கஞ்சன் துதிக்கும் பொருளேஎன்
கண்ணே நின்னைக் கருதாத
வஞ்சர் கொடிய முகம்பார்க்க
மாட்டேன் இனிஎன் வருத்தம்அறுத்
தஞ்சல் எனவந் தருளாயேல்
ஆற்றேன் கண்டாய் அடியேனே
செஞ்சந் தனம்சேர் தணிகைமலைத்
தேனே ஞானச் செழுஞ்சுடரே. 3

மின்நேர் உலக நடைஅதனால்
மேவும் துயருக் காளாகிக்
கல்நேர் மனத்தேன் நினைமறந்தேன்
கண்டேன் கண்டாய் கற்பகமே
பொன்னே கடவுள் மாமணியே
போதப் பொருளே பூரணமே
தென்னேர் தணிகை மலைஅரசே
தேவே ஞானச் செழுஞ்சுடரே. 4

வளைத்தே வருத்தும் பெருந்துயரால்
வாடிச் சவலை மகவாகி
இளைத்தேன் தேற்றும் துணைகாணேன்
என்செய் துய்கேன் எந்தாயே
விளைத்தேன் ஒழுகும் மலர்த்தருவே
விண்ணே விழிக்கு விருந்தேசீர்
திளைத்தேர் பரவும் திருத்தணிகைத்
தேவே ஞானச் செழுஞ்சுடரே. 5

அடுத்தே வருத்தும் துயர்க்கடலில்
அறியா தந்தோ விழுந்திட்டேன்
எடுத்தே விடுவார் தமைக்காணேன்
எந்தாய் எளியேன் என்செய்கேன்
கடுத்தேர் கண்டத் தெம்மான்தன்
கண்ணே தருமக் கடலேஎன்
செடித்தீர் தணிகை மலைப்பொருளே
தேனே ஞானச் செழுஞ்சுடரே. 6

உண்டால் குறையும் எனப்பசிக்கும்
உலுத்தர் அசுத்த முகத்தைஎதிர்

கண்டால் நடுங்கி ஒதுங்காது
கடைகாத் திரந்து கழிக்கின்றேன்
கொண்டார் அடியர் நின்அருளை
யானோ ஒருவன் குறைபட்டேன்
திண்டார் அணிவேல் தணிகைமலைத்
தேவே ஞானச் செழுஞ்சுடரே. 7

வேட்டேன் நினது திருஅருளை
வினையேன் இனிஇத் துயர்பொறுக்க
மாட்டேன் மணியே அன்னேஎன்
மன்னே வாழ்க்கை மாட்டுமனம்
நாட்டேன் அயன்மால் எதிர்வரினும்
நயக்கேன் எனக்கு நல்காயோ
சேட்டேன் அலரும் பொழில்தணிகைத்
தேவே ஞானச் செழுஞ்சுடரே. 8

கல்லா நாயேன் எனினும்எனைக்
காக்கும் தாய்நீ என்றுலகம்
எல்லாம் அறியும் ஆதலினால்
எந்தாய் அருளா திருத்திஎனில்
பொல்லாப் பழிவந் தடையும்உனக்
கரசே இனியான் புகல்வதென்னே
செல்லார் பொழில்சூழ் திருத்தணிகைத்
தேவே ஞானச் செழுஞ்சுடரே. 9

அன்னே அப்பா எனநின்தாட்
கார்வம் கூர்ந்திங் கலைகின்றேன்
என்னே சற்றும் இரங்கிலைநீ
என்நெஞ் சோநின் நல்நெஞ்சம்
மன்னே ஒளிகொள் மாணிக்க
மணியே குணப்பொன் மலையேநல்
தென்னேர் பொழில்சூழ் திருத்தணிகைத்
தேவே ஞானச் செழுஞ்சுடரே. 10

நடைஏய் துயரால் மெலிந்துநினை
நாடா துழலும் நான்நாயில்
கடையேன் எனினும் காத்தல்என்றன்
கண்ணே நினது கடன்அன்றோ



தடையேன் வருவாய் வந்துன்அருள்
தருவாய் இதுவே சமயம்காண்
செடிதீர்த் தருளும் திருத்தணிகைத்
தேவே ஞானச் செழுஞ்சுடரே. 11

## 6. குறைஇரந்த பத்து

### எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

சீர்பூத்த அருட்கடலே கரும்பே தேனே
செம்பாகே எனதுகுலத் தெய்வ மேநல்
கூர்பூத்த வேல்மலர்க்கை அரசே சாந்த
குணக்குன்றே தணிகைமலைக் கோவே ஞானப்
பேர்பூத்த நின்புகழைக் கருதி ஏழை
பிழைக்கஅருள் செய்வாயோ பிழையை நோக்கிப்
பார்பூத்த பவத்தில்உற விடில்என் செய்கேன்
பாவியேன் அந்தோவன் பயம்தீ ரேனே. 1

தீராத துயர்க்கடலில் அழுந்தி நாளும்
தியங்கிஅழு தேங்கும்இந்தச் சேய்க்கு நீகண்
பாராத செயல்என்னே எந்தாய் எந்தாய்
பாவிஎன விட்டனையோ பன்னா ளாக
ஏராய அருள்தருவாய் என்றே ஏமாந்
திருந்தேனே என்செய்கேன் யாரும் இல்லேன்
சீராருந் தணிகைவரை அமுதே ஆதி
தெய்வமே நின்கருத்தைத் தெளிந்தி லேனே. 2

தெளிக்குமறைப் பொருளேஎன் அன்பே என்றன்
செல்வமே திருத்தணிகைத் தேவே அன்பர்
களிக்கும்மறைக் கருத்தேமெய்ஞ் ஞான நீதிக்
கடவுளே நின்அருளைக் காணேன் இன்னும்
சுளிக்கும்மிடித் துயரும்யமன் கயிறும் ஈனத்
தொடர்பும்மலத் தடர்பும்மனச் சோர்வும் அந்தோ
அளிக்கும்எனை என்செயுமோ அறியேன் நின்றன்
அடித்துணையே உறுதுணைமற் றன்றி உண்டோ. 3

உண்டாய உலகுயிர்கள் தம்மைக் காக்க
ஒளித்திருந்தவ் வுயிர்வினைகள் ஒருங்கே நாளும்

கண்டாயே இவ்வேழை கலங்கும் தன்மை
காணாயோ பன்னிரண்டு கண்கள் கொண்டோய்
தண்டாத நின்அருட்குத் தகுமோ விட்டால்
தருமமோ தணிகைவரைத் தலத்தின் வாழ்வே
விண்டாதி தேவர்தொழும் முதலே முத்தி
வித்தேசொற் பதம்கடந்த வேற்கை யானே. 4

கையாத அன்புடையார் அங்கை மேவும்
கனியேஎன் உயிரேஎன் கண்ணே என்றும்
பொய்யாத பூரணமே தணிகை ஞானப்
பொருளேநின் பொன்அருள்இப் போதியான் பெற்றால்
உய்யாத குறைஉண்டோ துயர்சொல் லாமல்
ஓடுமே யமன்பாசம் ஓய்ந்து போம்என்
ஐயாநின் அடியரொடு வாழ்கு வேன்இங்
கார்உனைஅல் லால்எனக்கின் றருள்செய் வாயே.5

வாய்க்கும்உன தருள்என்றே அந்தோ நாளும்
வழிபார்த்திங் கிளைக்கின்றேன் வருத்தும் பொல்லா
நோய்க்கும்உறு துயர்க்கும்இலக் கானேன் மாழ்கி
நொந்தேன்நின் அருள்காணேன் நுவலும் பாசத்
தேய்க்கும்அவன் வரில்அவனுக் கியாது சொல்வேன்
என்செய்வேன் துணைஅறியா ஏழை யேனே
தூய்க்குமர குருவேதென் தணிகை மேவும்
சோதியே இரங்காயோ தொழும்பா ளர்க்கே.6

ஆளாயோ துயர்அளக்கர் வீழ்ந்து மாழ்கி
ஐயாவோ எனும்முறையை அந்தோ சற்றும்
கேளாயோ என்செய்கேன் எந்தாய் அன்பர்
கிளத்தும்உன தருள்எனக்குக் கிடையா தாகில்
நாளாய்ஓர் நடுவன்வரில் என்செய் வானோ
நாயினேன் என்சொல்வேன் நாணு வேனோ
தோளாஓர் மணியேதென் தணிகை மேவும்
சுடரேஎன் அறிவேசிற் சுகங்கொள் வாழ்வே.7

வாழ்வேநற் பொருளேநல் மருந்தே ஞான
வாரிதியே தணிகைமலை வள்ள லேயான்
பாழ்வேலை எனுங்கொடிய துயருள் மாழ்கிப்
பதைத்தையா முறையோநின் பதத்துக் கென்றே



தாழ்வேன்ஈ தறிந்திலையே நாயேன் மட்டும்
தயவிலையோ நான்பாவி தானோ பார்க்குள்
ஆழ்வேன்என் றயல்விட்டால் நீதி யேயோ
அச்சோஇங் கென்செய்கேன் அண்ணால்
அண்ணால். 8

அண்ணாவே நின்அடியை அன்றி வேறோர்
ஆதரவிங் கறியேன்நெஞ் சழிந்து துன்பால்
புண்ணாவேன் தன்னை இன்னும் வஞ்சர் பாற்போய்ப்
புலந்துமுக வாட்டம்உடன் புலம்பி நிற்கப்
பண்ணாதே யாவன்இவன் பாவிக் குள்ளும்
படுபாவி என்றென்னைப் பரிந்து தள்ள
எண்ணாதே யான்மிகவும் ஏழை கண்டாய்
இசைக்கரிய தணிகையில்வீற் றிருக்கும் கோவே.9

கோவேநல் தணிகைவரை அமர்ந்த ஞான
குலமணியே குகனேசற் குருவே யார்க்கும்
தேவேஎன் விண்ணப்பம் ஒன்று கேண்மோ
சிந்தைதனில் நினைக்கஅருள் செய்வாய் நாளும்
பூவேயும் அயன்திருமால் புலவர். முற்றும்
போற்றும்எழில் புரந்தரன்எப் புவியும் ஓங்கச்
சேவேறும் பெருமான்இங் கிவர்கள் வாழ்த்தல்
செய்துவக்கும் நின்இரண்டு திருத்தாள் சீரே.10

## 7. ஜீவசாட்சி மாலை

### எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

பண்ஏறும் மொழிஅடியர் பரவி வாழ்த்தும்
பாதமலர் அழகினைஇப் பாவி பார்க்கில்
கண்ஏறு படும்என்றோ கனவி லேனும்
காட்டென்றால் காட்டுகிலாய் கருணை ஈதோ
விண்ஏறும் அரிமுதலோர்க் கரிய ஞான
விளக்கேஎன் கண்ணேமெய் வீட்டின் வித்தே
தண்ஏறு பொழில்தணிகை மணியே ஜீவ
சாட்சியாய் நிறைந்தருளும் சகச வாழ்வே. 1

பண்டுமன துவந்துகுணம் சிறிதும் இல்லாப்
பாவியேன் தனைஆண்டாய் பரிவால் இன்று

கொண்டுகுலம் பேசுதல்போல் எளியேன் குற்றம்
குறித்துவிடில் என்செய்கேன் கொடிய னேனைக்
கண்டுதிருத் தொண்டர்நகை செய்வார் எந்தாய்
கைவிடேல் உன்ஆணை காண்முக் காலும்
தண்துளவன் புகழ்தணிகை மணியே ஜீவ
சாட்சியாய் நிறைந்தருளும் சகச வாழ்வே. 2

புன்புலைய வஞ்சகர்பால் சென்று வீணே
புகழ்ந்துமனம் அயர்ந்துறுகண் பொருந்திப் பொய்யாம்
வன்புலைய வயிறோம்பிப் பிறவி நோய்க்கு
மருந்தாய நின்அடியை மறந்தேன் அந்தோ
இன்புலைய உயிர்கொள்வான் வரில்என் பால்அவ்
வியமனுக்கிங் கென்சொல்கேன் என்செய் கேனே
தன்புகழ்காண் அருந்தணிகை மணியே ஜீவ
சாட்சியாய் நிறைந்தருளும் சகச வாழ்வே. 3

பெருங்களப முலைமடவார் என்னும் பொல்லாப்
பேய்க்கோட்பட் டாடுகின்ற பித்த னேனுக்
கிரும்புலவர்க் கரியதிரு அருள்ஈ வாயேல்
என்சொலார் அடியர்அதற் கெந்தாய் எந்தாய்
கரும்பின்இழிந் தொழுகும்அருள் சுவையே முக்கண்
கனிகனிந்த தேனேஎன் கண்ணே ஞானம்
தரும்புனிதர் புகழ்தணிகை மணியே ஜீவ
சாட்சியாய் நிறைந்தருளும் சகச வாழ்வே. 4

கல்அளவாம் நெஞ்சம்என வஞ்ச மாதர்
கண்மாயம் எனும்கயிற்றால் கட்டு வித்துச்
சொல்அளவாத் துன்பம்எனும் கடலில் வீழ்த்தச்
சோர்கின்றேன் அந்தோநல் துணைஒன் றில்லேன்
மல்அளவாய்ப் பவம்மாய்க்கும் மருந்தாம் உன்றன்
மலர்ப்பாதப் புணைதந்தால் மயங்கேன் எந்தாய்
சல்லம்உலாத் தரும்தணிகை மணியே ஜீவ
சாட்சியாய் நிறைந்தருளும் சகச வாழ்வே. 5

அன்னைமுத லாம்பந்தத் தழுங்கி நாளும்
அலைந்துவயி றோம்பிமனம் அயர்ந்து நாயேன்
முன்னைவினை யாற்படும்பா டெல்லாம் சொல்லி
முடியேன்செய் பிழைகருதி முனியேல் ஐயா



பொன்னைநிகர் அருட்குன்றே ஒன்றே முக்கட்
பூமணமே நறவேநற் புலவர் போற்றத்
தன்னைநிகர் தரும்தணிகை மணியே ஜீவ
சாட்சியாய் நிறைந்தருளும் சகச வாழ்வே. 6

பன்னரும்வன் துயரால்நெஞ் சழிந்து நாளும்
பதைத்துருகி நின்அருட்பால் பருகக் கிட்டா
துன்னரும்பொய் வாழ்க்கைஎனும் கானத் திந்த
ஊர்நகைக்கப் பாவிஅழல் உணர்ந்தி லாயோ
என்னருமை அப்பாஎன் ஐயா என்றன்
இன்னுயிர்க்குத் தலைவாஇங் கெவர்க்கும் தேவா
தன்னியல்சீர் வளர்தணிகை மணியே ஜீவ
சாட்சியாய் நிறைந்தருளும் சகச வாழ்வே. 7

கோவேநின் பதம்துதியா வஞ்ச நெஞ்சக்
கொடியோர்பால் மனவருத்தம் கொண்டாழ் கின்றேன்
சாவேனும் அல்லன்நின்பொன் அருளைக் காணேன்
தமியேனை உய்யும்வண்ணம் தருவ தென்றோ
சேவேறும் சிவபெருமான் அரிதின் ஈன்ற
செல்வமே அருள்ஞானத் தேனே அன்பர்
தாவேதம் தெறும்தணிகை மணியே ஜீவ
சாட்சியாய் நிறைந்தருளும் சகச வாழ்வே. 8

ஓயாது வரும்மிடியான் வஞ்சர் பால்சென்
றுளங்கலங்கி நாணிஇரந் துழன்றெந் நாளும்
மாயாத துயரடைந்து வருந்தித் தெய்வ
மருந்தாய நின்அடியை மறந்திட் டேனே
தாயாகித் தந்தையாய்த் தமராய் ஞான
சற்குருவாய்த் தேவாகித் தழைத்த ஒன்றே
சாயாத புகழ்த்தணிகை மணியே ஜீவ
சாட்சியாய் நிறைந்தருளும் சகச வாழ்வே. 9

மின்னாளும் இடைமடவார் அல்கு லாய
வெங்குழியில் வீழ்ந்தாழ்ந்து மெலிந்தேன் அல்லால்
எந்நாளும் உனைப்போற்றி அறியேன் என்னே
ஏழைமதி கொண்டேன்இங் கென்செய் கேனே
அன்னாய்என் அப்பாஎன் றரற்றும் அன்பர்க்
காரமுதே அருட்கடலே அமரர் கோவே

பீடேந்தும் இருமடவார் பெட்பொடும்ஆங்
கவர்கண்முலைப் பெரிய யானைக்
கோடேந்தும் அணிநெடுந்தோட் குமாரகுரு
வேபரம குருவே போற்றி. 7

நீர்வேய்ந்த சடைமுடித்துத் தோலுடுத்து
நீறணிந்து நிலவுங் கொன்றைத்
தார்வேய்ந்து விடங்கலந்த களங்காட்டி
நுதலிடைஓர் தழற்கண் காட்டிப்
பேர்வேய்ந்த மணிமன்றில் ஆடுகின்ற
பெரும்பித்தப் பெருமான் ஈன்ற
கூர்வேய்ந்த வேல்அணிதோள் குமாரகுரு
வேபரம குருவே போற்றி. 8

பெண்குணத்தில் கடைப்படும்ஓர் பேய்க்குணங்கொள்
நாயேன்றன் பிழைகள் எல்லாம்
எண்குணப்பொற் குன்றேநின் திருஉளத்தில்
சிறிதேனும் எண்ணேல் கண்டாய்
பண்குணத்தில் சிறந்திடும்நின் பத்தர்தமைப்
புரப்பதுபோல் பாவி யேனை
வண்குணத்தில் புரத்தியிலை யேனும்எனைக்
கைவிடேல் வடிவே லோனே. 9

### கலி விருத்தம்

சத்திவேல் கரத்தநின் சரணம் போற்றிமெய்ப்
பத்தியோ டருச்சனை பயிலும் பண்பினால்
முத்திசார் குவர்என மொழிதல் கேட்டுநல்
புத்தியோ டுன்பதம் புகழ்வர் புண்ணியர். 10

### கலித்துறை

தேனே அமுதே சிவமே தவமே தெளிவேஎங்
கோனே குருவே குலமே குணமே குகனேயோ
வானே வளியே அனலே புனலே மலையேஎன்
ஊனே உயிரே உணர்வே எனதுள் உறைவானே. 11



### கட்டளைக் கலித்துறை

ஆறுமு கங்கொண்ட ஐயாஎன்
துன்பம் அனைத்தும்இன்னும்
ஏறுமு கங்கொண்ட தல்லால்
இறங்குமு கம்இலையால்
வீறுமு கங்கொண்ட கைவேலின்
வீரம் விளங்கஎன்னைச்
சீறுமு கங்கொண்ட அத்துன்பம்
ஓடச் செலுத்துகவே. 12

பண்கொண்ட சண்முகத் தையா
அருள்மிகும் பன்னிரண்டு
கண்கொண்ட நீசற்றுங் கண்டிலை
யோஎன் கவலைவெள்ளம்
திண்கொண்ட எட்டுத் திசைகொண்டு
நீள்சத்த தீவுங்கொண்டு
மண்கொண்டு விண்கொண்டு பாதாளங்
கொண்டு வளர்கின்றதே. 13

வன்குலஞ் சேர்கடன் மாமுதல்
வேர்அற மாட்டிவண்மை
நன்குலஞ் சேர்விண் நகர்அளித்
தோய்அன்று நண்ணிஎன்னை
நின்குலஞ் சேர்த்தனை இன்றுவி
டேல்உளம் நேர்ந்துகொண்டு
பின்குலம் பேசுகின் றாரும்உண்
டோஇப் பெருநிலத்தே. 14

### வண்ண விருத்தம்

திருமால் ஆதியர் உள்ளம்
கொள்ளும்ஓர் செவ்விய வேலோனே
குருமா மணியே குணமணி
யேசுரர் கோவே மேலோனே
கருமா மலம்அறு வண்ணம்
தண்அளி கண்டே கொண்டேனே
கதியே பதியே கனநிதி
யேகற் கண்டே தண்தேனே

அருமா தவர்உயர் நெஞ்சம்
விஞ்சிய அண்ணா விண்ணவனே
அரசே அமுதே அறிவுரு
வேமுரு கையா மெய்யவனே
உருவா கியபவ பந்தம்
சிந்திட ஓதிய வேதியனே
ஒளியே வெளியே உலகமெ
லாம்உடை யோனே வானவனே. 15

### கொச்சகக் கலிப்பா

கூழுக் கழுவேனோ கோத்தணிகைக் கோவேஎன்
ஊழுக் கழுவேனோ ஓயாத் துயர்ப்பிறவி
ஏழுக் கழுவேனோ என்செய்கேன் என்செய்கேன்
பாழுக் கிறைத்தேன்ஈ துன்செயலோ பார்க்கும்இடம். 16

### கட்டளைக் கலிப்பா

சிந்தைக் கும்வழி இல்லைஉன் தன்மையைத்
தெரிதற் கென்னும் திருத்தணி கேசனே
உந்தைக் கும்வழி இல்லைஎன் றால்இந்த
உலகில் யாவர் உனைஅன்றி நீர்மொள்ள
மொந்தைக் கும்வழி இல்லை வரத்திரு
முண்டைக் கும்வழி இல்லை அரையில்சாண்
கந்தைக் கும்வழி இல்லை அரகர
கஞ்சிக் கும்வழி இல்லைஇங் கையனே. 17

### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

கறிபிடித்த ஊன்கடையில் கண்டவர்தம்
கால்பிடித்துக் கவ்வும் பொல்லா
வெறிபிடித்த நாய்க்கேனும் வித்தைபயிற்
றிடலாகும் வேண்டி வேண்டி
மறிபிடித்த சிறுவனைப்போல் வாத்தியார்
மனமறுகி வருந்தத் தங்கள்
குறிபிடித்துக் காட்டுவோர்க் கியாவர்படிப்
பிக்கவலார் குமர வேளே. 18



### நேரிசை வெண்பா

தாதாதா தாதாதா தாக்குறைக்கென் செய்குதுமியாம்
ஓதா தவமே யுழனெஞ்சே — மீதாத்
ததிதி யெனமயிலிற் றானாடி நாளுந்
திதிதி தருந்தணிகைத் தே. 19

ஓரிரண்டா நற்றணிகை உத்தமன்றன் ஓங்கற்றோள்
தாரிரண்டார் போனின்ற தையன்மீர் — வாரிரண்டாத்
தொய்யி லழிக்குந் துணைமுலையா ளுள்ளகத்தா
மைய லழிக்கு மருந்து. 20

ஏலுந் தயங்கென்னு மேவற் கெதிர்மறைதான்
ஆலுந் தொழிற்கேவ லாகுமோ — மாலுந்தி
மாற்றுந் தணிகையர்க்கு மாமயின்மேல் நாடோறுந்
தோற்றுந் தணிகையன்பொற் றோள். 21

## இரண்டாம் திருமுறை

# அருள் நாம விளக்கம்

## திருவொற்றியூர்

### எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

வாங்கு வில்நுதல் மங்கையர் விழியால்
மயங்கி வஞ்சர்பால் வருந்திநாள் தோறும்
ஏங்கு கின்றதில் என்பயன் கண்டாய்
எழில்கொள் ஒற்றியூர்க் கென்னுடன் போந்து
தேங்கு லாவுசெங் கரும்பினும் இனிதாய்த்
தித்தித் தன்பர்தம் சித்தத்துள் ஊறி
ஓங்கும் ஓம்சிவ சண்முக சிவஓம்
ஓம்சி வாயஎன் றுன்னுதி மனனே. 1

தவம தின்றிவன் மங்கையர் முயக்கால்
தருமம் இன்றுவஞ் சகர்கடுஞ் சார்வால்
இவகை யால்மிக வருந்துறில் என்னாம்
எழில்கொள் ஒற்றியூர்க் கென்னுடன் போந்து
பவம தோட்டிநல் ஆனந்த உருவாம்
பாங்கு காட்டிநல் பதந்தரும் அடியார்
உவகை ஓம்சிவ சண்முக சிவஓம்
ஓம்சி வாயஎன் றுன்னுதி மனனே. 2

மின்னும் நுண்ணிடைப் பெண்பெரும் பேய்கள்
வெய்ய நீர்க்குழி விழுந்தது போக
இன்னும் வீழ்கலை உனக்கொன்று சொல்வேன்
எழில்கொள் ஒற்றியூர்க் கென்னுடன் போந்து
பொன்உ லாவிய புயம்உடை யானும்
புகழ்உ லாவிய பூஉடை யானும்
உன்னும் ஓம்சிவ சண்முக சிவஓம்
ஓம்சி வாயஎன் றுன்னுதி மனனே. 3

பொன்றும் வாழ்க்கையை நிலைஎன நினைந்தே
புலைய மங்கையர் புழுநெளி அளற்றில்
என்றும் வீழ்ந்துழல் மடமையை விடுத்தே
எழில்கொள் ஒற்றியூர்க் கென்னுடன் போந்து
துன்று தீம்பலாச் சுளையினும் இனிப்பாய்த்
தொண்டர் தங்கள்நாச் சுவைபெற ஊறி
ஒன்றும் ஓம்சிவ சண்முக சிவஓம்
ஓம்சி வாயஎன் றுன்னுதி மனனே. 4

வரைக்கு நேர்முலை மங்கையர் மயலால்
மயங்கி வஞ்சரால் வருத்தமுற் றனுராம்
இரைக்கும் மாக்கடல் இடைவிழுந் தயரேல்
எழில்கொள் ஒற்றியூர்க் கென்னுடன் போந்து
கரைக்கும் தெள்ளிய அமுதமோ தேனோ
கனிகொ லோஎனக் கனிவுடன் உயர்ந்தோர்



உரைக்கும் ஓம்சிவ சண்முக சிவஓம்
ஓம்சி வாயஎன் றுன்னுதி மனனே. 5

வாது செய்ம்மட வார்தமை விழைந்தாய்
மறலி வந்துனை வாஎன அழைக்கில்
ஏது செய்வையோ ஏழைநீ அந்தோ
எழில்கொள் ஒற்றியூர்க் கென்னுடன் போந்து
போது வைகிய நான்முகன் மகவான்
புணரி வைகிய பூமகள் கொழுநன்
ஓதும் ஓம்சிவ சண்முக சிவஓம்
ஓம்சி வாயஎன் றுன்னுதி மனனே. 6

நண்ணும் மங்கையர் புழுமலக் குழியில்
நாளும் வீழ்வுற்று நலிந்திடேல் நிதமாய்
எண்ணும் என்மொழி குருமொழி ஆக
எண்ணி ஒற்றியூர்க் கென்னுடன் போந்து
பண்ணும் இன்சுவை அமுதினும் இனிதாய்ப்
பத்தர் நாள்தொறும் சித்தமுள் ளூற
உண்ணும் ஓம்சிவ சண்முக சிவஓம்
ஓம்சி வாயஎன் றுன்னுதி மனனே. 7

பந்த வண்ணமாம் மடந்தையர் மயக்கால்
பசையில் நெஞ்சரால் பரிவுறுகின்றாய்
எந்த வண்ணநீ உய்வணம் அந்தோ
எழில்கொள் ஒற்றியூர்க் கென்னுடன் போந்து
சந்த மாம்புகழ் அடியரில் கூடிச்
சனனம் என்னுமோர் சாகரம் நீந்தி
உந்த ஓம்சிவ சண்முக சிவஓம்
ஓம்சி வாயஎன் றுன்னுதி மனனே. 8

மட்டின் மங்கையர் கொங்கையை விழைந்தாய்
மட்டி லாததோர் வன்துயர் அடைந்தாய்
எட்டி அன்னர்பால் இரந்தலை கின்றாய்
எழில்கொள் ஒற்றியூர்க் கென்னுடன் போந்து
தட்டி லாதநல் தவத்தவர் வானோர்
சார்ந்தும் காண்கிலாத் தற்பரம் பொருளை
ஒட்டி ஓம்சிவ சண்முக சிவஓம்
ஓம்சி வாயஎன் றுன்னுதி மனனே. 9

நிலவும் ஒண்மதி முகத்தியர்க் குழன்றாய்
நீச நெஞ்சர்தம் நெடுங்கடை தனிற்போய்
இலவு காத்தனை என்னைநின் மதியோ
எழில்கொள் ஒற்றியூர்க் கென்னுடன் போந்து
பலவும் ஆய்ந்துநன் குண்மையை உணர்ந்த
பத்தர் உள்ளகப் பதுமங்கள் தோறும்
உலவும் ஓம்சிவ சண்முக சிவஓம்
ஓம்சி வாயஎன் றுன்னுதி மனனே. 10

## சிவசண்முகநாம சங்கீர்த்தன லகரி

### எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

### திருவொற்றியூர்

பழுது நேர்கின்ற வஞ்சகர் கடைவாய்ப்
பற்றி நின்றதில் பயன்எது கண்டாய்
பொழுது போகின்ற தெழுதிஎன் நெஞ்சே
பொழில்கொள் ஒற்றியம் புரிதனக் கேகித்
தொழுது சண்முக சிவசிவ எனநம்
தோன்ற லார்தமைத் துதித்தவர் திருமுன்
பழுது சொல்லுதும் ஐயுறல் என்மேல்
ஆணை காண்அவர் அருள்பெறல் ஆமே. 1



சூது நேர்கின்ற முலைச்சியர் பொருட்டாச்
சுற்றி நின்றதில் சுகம்எது கண்டாய்
போது போகின்ற தெழுதிஎன் நெஞ்சே
பொழில்கொள் ஒற்றியம் புரிதனக் கேகி
ஓது சண்முக சிவசிவ எனவே
உன்னி நெக்குவிட் டுருகிநம் துயராம்
ஆது சொல்லுதும் ஐயுறல் என்மேல்
ஆணை காண்அவர் அருள்பெறல் ஆமே. 2

ஞாலம் செல்கின்ற வஞ்சகர் கடைவாய்
நண்ணி நின்றதில் நலம்எது கண்டாய்
காலம் செல்கின்ற தெழுதிஎன் நெஞ்சே
கருதும் ஒற்றியம் கடிநகர்க் கேகிக்
கோலம் செய்அருள் சண்முக சிவஓம்
குழக வோஎனக் கூவிநம் துயராம்
ஆலம் சொல்லுதும் ஐயுறல் என்மேல்
ஆணை காண்அவர் அருள்பெறல் ஆமே. 3

மருட்டி வஞ்சகம் மதித்திடும் கொடியார்
வாயல் காத்தின்னும் வருந்தில்என் பயனோ
இருட்டிப் போகின்ற தெழுதிஎன் நெஞ்சே
எழில்கொள் ஒற்றியூர் எனும்தலத் தேகித்
தெருட்டி நஞ்செயும் சண்முக சிவஓம்
சிவந மாஎனச் செப்பிநம் துயராம்
அரிட்டை ஓதுதும் ஐயுறல் என்மேல்
ஆணை காண்அவர் அருள்பெறல் ஆமே. 4

இல்லை என்பதே பொருள்எனக் கொண்டோர்
ஈன வாயிலில் இடர்ப்படு கின்றாய்
எல்லை செல்கின்ற தெழுதிஎன் நெஞ்சே
எழில்கொள் ஒற்றியூர் எனும்தலத் தேகித்
தொல்லை ஓம்சிவ சண்முக சிவஓம்
தூய என்றடி தொழுதுநாம் உற்ற
அல்லல் ஓதுதும் ஐயுறல் என்மேல்
ஆணை காண்அவர் அருள்பெறல் ஆமே. 5

கரவு நெஞ்சினர் கடைத்தலைக் குழன்றாய்
கலங்கி இன்னும்நீ கலுழ்ந்திடில் கடிதே

இரவு போந்திடும் எழுதிஎன் நெஞ்சே
எழில்கொள் ஒற்றியூர் எனும்தலத் தேகிப்
பரவு சண்முக சிவசிவ சிவஓம்
பரசு யம்புசங் கரசம்பு நமஓம்
அரஎன் றேத்துதும் ஐயுறல் என்மேல்
ஆணை காண்அவர் அருள்பெறல் ஆமே. 6

ஏய்ந்து வஞ்சகர் கடைத்தலை வருந்தி
இருக்கின் றாய்இனி இச்சிறு பொழுதும்
சாய்ந்து போகின்ற தெழுதிஎன் நெஞ்சே
தகைகொள் ஒற்றியம் தலத்தினுக் கேகி
வாய்ந்து சண்முக நமசிவ சிவஓம்
வரசு யம்புசங் கரசம்பு எனவே
ஆய்ந்து போற்றுதும் ஐயுறல் என்மேல்
ஆணை காண்அவர் அருள்பெறல் ஆமே. 7

ஈர்ந்த நெஞ்சினர் இடந்தனில் இருந்தே
இடர்கொண் டாய்இனி இச்சிறு பொழுதும்
பேர்ந்து போகின்ற தெழுதிஎன் நெஞ்சே
பிறங்கும் ஒற்றியம் பெருநகர்க் கேகி
ஓர்ந்து சண்முக சரவண பவஓம்
ஓம்சு யம்புசங் கரசம்பு எனவே
ஆர்ந்து போற்றுதும் ஐயுறல் என்மேல்
ஆணை காண்அவர் அருள்பெறல் ஆமே. 8

கமைப்பின் ஈகிலா வஞ்சகர் கடையைக்
காத்தி ருக்கலை கடுகிஇப் பொழுதும்
இமைப்பில் போகின்ற தெழுதிஎன் நெஞ்சே
எழில்கொள் ஒற்றியூர் எனும்தலத் தேகி
எமைப்பு ரந்தசண் முகசிவ சிவவோம்
இறைவ சங்கர அரகர எனவே
அமைப்பின் ஏத்துதும் ஐயுறல் என்மேல்
ஆணை காண்அவர் அருள்பெறல் ஆமே. 9

உறைந்து வஞ்சர்பால் குறையிரந் தவமே
உழல்கின் றாய்இனி உரைக்கும்இப் பொழுதும்
குறைந்து போகின்ற தெழுதிஎன் நெஞ்சே
குலவும் ஒற்றியம் கோநகர்க் கேகி



நிறைந்த சண்முக குருநம சிவஓம்
நிமல சிற்பர அரகர எனவே
அறைந்து போற்றுதும் ஐயுறல் என்மேல்
ஆணை காண்அவர் அருள்பெறல் ஆமே. 10

## மூன்றாம் திருமுறை

# சிங்கபுரிக் கந்தர் பதிகம்

### காப்பு

#### நேரிசை வெண்பா

பொன்மகள்வாழ் சிங்கபுரி போதன்அறு மாமுகன்மேல்
நன்மைமிகு செந்தமிழ்ப்பா நாம்உரைக்கச் - சின்மயத்தின்
மெய்வடிவாம் நங்குருதாள் வேழமுகன் தன்னிருதாள்
பொய்யகலப் போற்றுவம்இப் போது.

#### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

சீராரு மறையொழுக்கந் தவிராது
நான்மரபு சிறக்க வாழும்
ஏராரு நிதிபதிஇந் திரன்புரமும்
மிகநாணும் எழிலின் மிக்க
வாராருங் கொங்கையர்கள் மணவாளர்
உடன்கூடி வாழ்த்த நாளும்
தேராரு நெடுவீதிச் சிங்கபுரி
தனில்அமர்ந்த தெய்வக் குன்றே. 1

உம்பர்துயர் கயிலைஅரற் கோதிடவே
அப்பொழுதே உவந்து நாதன்
தம்பொருவில் முகமாறு கொண்டுநுதல்
ஈன்றபொறி சரவ ணத்தில்
நம்புமவர் உயவிடுத்து வந்தருளும்
நம்குகனே நலிவு தீர்ப்பாய்
திங்கள்தவழ் மதில்சூழும் சிங்கபுரி
தனில்அமர்ந்த தெய்வக் குன்றே. 2

பொல்லாத சூர்க்கிளையைத் தடிந்தமரர்
படுந்துயரப் புன்மை நீக்கும்

வல்லானே எனதுபிணி நீநினைந்தால்
ஒருகணத்தில் மாறி டாதோ
கல்லாதேன் எனினும்எனை இகழாதே
நினதடியார் கழகங் கூட்டாய்
செல்லாதார் வலிஅடக்கும் சிங்கபுரி
தனில்அமர்ந்த தெய்வக் குன்றே. 3

பண்டுறுசங் கப்புலவர் அருஞ்சிறையைத்
தவிர்த்தருளும் பகவ னேஎன்
புண்தருஇந் நோய்தணிக்கப் புரையிலியோய்
யான்செய்யும் புன்மை தானோ
தண்டைஎழில் கிண்கிணிசேர் சரணமலர்க்
கனுதினமும் தமியேன் அன்பாய்த்
தெண்டனிடச் செய்தருள்வாய் சிங்கபுரி
தனில்அமர்ந்த தெய்வக் குன்றே. 4

தாவாத வசியர்குலப் பெண்ணினுக்கோர்
கரமளித்த சதுரன் அன்றே
மூவாத மறைபுகலும் மொழிகேட்டுன்
முண்டகத்தாள் முறையில் தாழ்ந்து
தேவாதி தேவன்எனப் பலராலுந்
துதிபுரிந்து சிறப்பின் மிக்க
தீவாய்இப் பிணிதொலைப்பாய் சிங்கபுரி
தனில்அமர்ந்த தெய்வக் குன்றே. 5

வானவர்கோன் மேனாளில் தரமறியா
திகழ்ந்துவிட விரைவில் சென்று
மானமதில் வீற்றிருந்தே அவன்புரிந்த
கொடுமைதனை மாற்றும் எங்கள்
தானவர்தம் குலம்அடர்த்த சண்முகனே
இப்பிணியைத் தணிப்பாய் வாசத்
தேனவிழும் பொழில்சூழும் சிங்கபுரி
தனில்அமர்ந்த தெய்வக் குன்றே. 6

மட்டாரும் பொழில்சேரும் பரங்கிரிசெந்
தூர்பழனி மருவு சாமி
நட்டாரும் பணிபுரியும் ஆறுதலை
மலைமுதலாய் நணுகி எங்கள்



ஒட்டாதார் வலிஅடக்கி அன்பர்துதி
ஏற்றருளும் ஒருவ காவாய்
தெட்டாதார்க் கருள்புரியும் சிங்கபுரி
தனில்அமர்ந்த தெய்வக் குன்றே. 7

முன்செய்த மாதவத்தால் அருணகிரி
நாதர்முன்னே முறையிட் டேத்தும்
புன்செயல்தீர் திருப்புகழை ஏற்றருளும்
மெய்ஞ்ஞானப் புனிதன் என்றே
என்செயலில் இரவுபகல் ஒழியாமல்
போற்றியிட இரங்கா தென்னே
தென்திசைசேர்ந் தருள்புரியும் சிங்கபுரி
தனில்அமர்ந்த தெய்வக் குன்றே. 8

விண்ணவர்கோன் அருந்துயர நீங்கிடவும்
மாதுதவ விளைவு நல்கும்
கண்ணகன்ற பேரருளின் கருணையினால்
குஞ்சரியைக் காத லோடு
மண்ணுலகோர் முதல்உயிர்கள் மகிழ்ந்திடவும்
மணம்புரிந்த வள்ள லேஎன்
திண்ணியதீ வினைஒழிப்பாய் சிங்கபுரி
தனில்அமர்ந்த தெய்வக் குன்றே. 9

மாசகன்ற சிவமுனிவர் அருளாலே
மானிடமாய் வந்த மாதின்
ஆசில்தவப் பேறளிக்க வள்ளிமலை
தனைச்சார்ந்தே அங்குக் கூடி
நேசமிகு மணம்புரிந்த நின்மலனே
சிறியேனை நீயே காப்பாய்
தேசுலவு பொழில்சூழும் சிங்கபுரி
தனில்அமர்ந்த தெய்வக் குன்றே. 10

திருஅருட்பா முற்றிற்று

உ

# இரத்தினகிரிப் பால முருகன் அலங்காரம்

## வி. அண்ணாமலை முதலியார்

### காப்பு

இரத்ன கிரிபா லனுக்கலங் காரம் இயற்றிடஐங்
கரத்தோ டிருசெவி மும்மதம் நால்வாய்க் கரிமுகன்றாள்
சிரமணிந் தேத்தித் தொழுது மனத்தினிற் சிந்தைசெய
சுரக்கும் அவன்றன் கருணைப் பெருக்கம் சுனையெனவே.

#### கட்டளைக் கலித்துறை

பூமேவு பொன்மகள் மார்பிற் புணர்ந்திடும் பூரணனும்
பாமேவு நங்கையை நாவினிற் கொண்டியல் நான்முகனும்
கோமேவு தேவனும் ஏத்திடும் ரத்தினக் குன்றனெங்கோன்
தூமேவு தாள்சிவ ஞானப்பூ என்றலை சூட்டினனே. 1

அஞ்ஞானத் தேன்செய் பிழைதன்னை ஆறாத அன்பதனால்
மெய்ஞ்ஞானத் தாயாய் எனதுள்ளம் மேவி வினையதனைப்
பஞ்சுமுன் பட்ட கனலெனத் தீர்ப்பன் பழமறைகள்
தஞ்ச மெனச்சேர்ந்த ரத்ன கிரியுறை தற்பரனே. 2

மெய்யென வேயெண்ணி வெவ்வினை வாழ்வினில் வீழுமெனைப்
பொய்யென உள்ளே புகுந்துண்மை செப்பிய பொன்னடியான்
துய்யவ ருள்ளும் இரத்ன கிரியினிற் றோன்றிமக்கள்
உய்யத்தன் நாமம் உணர்த்திய வேத ஒழுக்கத்தனே. 3



மகவிற்குத் தந்தை இனிமைகள் காட்டி மடியிருத்தி
அகமகிழ் வொப்ப இணைத்தாளை என்றன் அகமலரில்
செகமகி ழப்பதித் தாண்டான் கிரியுறை சேயவன்றான்
இகல்மிகு சூரனை யேவென் றருள்செய் இளையவனே. 4

என்னையு மோர்பொரு ளென்றே இதயத்தில் ஏற்றவனும்
மின்னிகர் செஞ்சடைக் கண்மா மணிதன் விறற்குமரன்
தன்நிகர் இல்லாத ரத்ன கிரியில் தனிப்பொருளாய்
நின்றவன் தன்னடி யானென்றே என்னை நிறுத்தினனே. 5

ஆறு சமயத்தோர் ஒவ்வாத வாதங்கள் ஆற்றியவர்
மாறு படவழக் காடும் சழக்கர்கள் மாற்றமுற
ஆறு முகமுடன் தோன்றிச் சமயங்கள் ஆறினுள்ளும்
வீறுடன் மேவிய ரத்ன கிரியுறை வேலவனே. 6

வானவர் தாமரைத் தாளிணை போற்றி வணங்கிடலும்
தானவர் செய்யும் கொடுவினை போக்கத் தடிந்தவன்றான்
தேனமர் சோலைசூழ் ரத்ன கிரியில் திகழ்ந்திடுவன்
நானற ஏத்திடும் தொண்டரைக் காக்க நயந்தினிதே. 7

ஆசை முதலாய் அபிமான மீறாக அன்பனைத்தும்
பூசை தனிலே நிலைத்திடச் செய்யாத பொய்யனைச்சேர்
மாசைக் களைந்திட மாதுடன் ரத்ன மலையணைந்தான்
ஓசை முதலாம் பொருள்களெல் லாம்கடந் துள்ளவனே. 8

ஞான வடிவாய் நினைப்பவர் நெஞ்சின் நடுவணைந்து
மோன முதலாகி முத்திக்கு வித்தாம் முழுமுதல்வன்
கானவர் கன்னி யுடன்கிரி தன்னில் களிப்புடனே
தானமர்ந் தான்அன் பருக்கே அருள்செயும் சண்முகனே. 9

பெற்றவர் பெற்ற பெருந்தவக் குன்றாய்ப் பெரும்புணையாய்
நற்றவர் தோற்றமாய் ஞாதுரு ஞேயமும் ஞானமதும்
அற்றவர் தம்பால் அருளைச் சுரக்கும் அறுமுகன்றான்
பற்றுடன் ரத்ன கிரியில் அமர்ந்தான் பரவுதற்கே. 10

கற்றதால் என்பயன் கற்றதை யொப்பவே கண்ணுதலான்
நற்றவச் செய்கழல் ரத்ன கிரிதனில் நாடியென்றும்
நிற்றலால் உண்டாம் சுகபோகத் தோடு நிருவிகற்பம்
பெற்றிடப் பேசாப் பெருவாழ் வதுவும் பெருகிடுமே. 11

கரையிலா இன்பக் கடலமு தேயுட் கனிந்துரத்ந
வரையி லுறைமுரு காவுனைப் போற்றி மனத்திருத்தேன்
உரையிலா ஊமைய னாக முயல்வேன் உலகினிலே
விரைவினில் நின்றாளி லொன்ற அருளாய் விருப்புடனே. 12

வினையேன் இழைத்த பிழையைப் பொறுத்திடும் மெய்ப்பொருளே
நினையேன் புகலிடம் நின்றனை யன்றியான் நின்மலனே
எனையே தொடரும் பிறவிய றுத்தெனை யேற்றருள்வாய்
அனையே கிரியுறை செவ்வே லரசே அருட்கொழுந்தே. 13

மாறிநின் றென்னை மயக்கும் புலன்கள் வழியடைத்தே
ஈறிலா வுன்னருட் செந்தேன் பொழிந்திடாய் என்னுளத்தே
ஊறிய அன்புறு ரத்ன கிரிமேல் உறைபவனே
சீறிய நாயடி யேன்உய்ய வந்த சிவக்களிறே. 14

இந்திரி யங்கள் வயமாய்த் திரியும் இழிவுடையேன்
முந்தை வினைகளை முற்றறுத் தாளும் முழுமுதலே
சிந்தை யுறுதூரை யும்சிதைத் தங்கே சிவமுறுத்தும்
எந்தை அறுமுகன் ரத்ன கிரிமேல் இருந்தனனே. 15

பொன்னார் அடிகட்கே என்முறை யீட்டைப் புகன்றிடுவேன்
மின்னார் சடையன்சேய் ரத்ன கிரியுறை மின்னயிலான்
என்னாவி காக்க உருவாய்க் குருவாய் எழுந்தருளிக்
கன்னார் உரித்தென்ன ஆண்டானென் னுள்ளம் கலந்தினிதே. 16

ஆற்றுதற் கில்லேன் அறுமுகத் தெய்வமே ஐம்புலனாம்
சேற்றினில் வீழ்ந்து பெருந்துயர் வாரியில் சிக்குமெனை
ஊற்றெனப் பாயு முனதருள் வெள்ளந்தோய்த் துன்கரத்தால்
ஏற்றிடு வாய்கிரி வாழ்சேயே ஏழையேன் இன்புறவே. 17



தினைத்தனை யாயுறும் இன்பத்தை நாளெலாம் தேடுநெஞ்சே
நினைத்தொறும் காண்தொறும் பேசுந் தொறுமருள் நீர்பெருக்குஞ்
சுனையென ரத்ன கிரிவாழ் முருகனைச் சூழ்ந்திடுவாய்
வினைகெடுத் தானந்த வெள்ளம் பொழிவான் வினையிலனே. 18

நினைந்தளிக் கும்தாயின் சாலப் பரிவுடன் நின்னடியேன்
உனைநினை யாமுன் செவியில் எழுத்தாறும் ஓதுமெந்தாய்
வினைசெய் பிறப்பறுக் கும்கிரி வேளே விடுத்தலின்றித்
தினையள வும்பிரி யாதேற்பாய் உன்றாளிற் றேங்கிடவே. 19

உலகினை ஓர்நொடி யில்வலம் வந்திட்ட உத்தமனே
அலகிற் கலையாவும் நேடியுங் காணா அறுமுகனே
இலகு கிரியமர்ந் தேயருள் காட்டும் எழிலரசே
கலங்கரை தன்விளக் கென்றேநீ காட்டாய் கழலிணையே. 20

உள்ளத் தழுக்கை அறவே அகற்றி உனதருளாம்
வெள்ளத் திலெனை அழுத்தி இருத்திட வேயருள்செய்
கள்ளவி ழும்கிரி பால முருகா கருணையனே
கொள்ளி எறும்பென ஏங்குமிப் பேதை குலவிடவே. 21

முன்னை வினையால் உனையான் நினைய முயலகில்லேன்
பின்னை உணர்ந்து பிதற்றுவ தென்னையிப் பேதையனும்
அன்னை அனைய இரத்ன கிரியாய் அறுமுகனே
உன்னை எனதுள் இருத்த வழங்கும் உனதருளே. 22

வினையாற் றொடர்ந்த பிறவி அடைந்தேன் வினையிலியாய்
உனையே தொழுவன் திருவருள் நல்கிடும் ஒண்சுடரே
கனைமா பிறவிக் கடலில் அழுந்தாமுன் கைகொடுத்தே
எனையே எடுத்துக் கரைசேர்த் திடுவாய் எழிலரசே. 23

சிந்திப் பரிய அறுமுகங் கொண்ட சிவகுமரா
பந்தித் திடுமென் பழவினை போக்கும் பரம்பொருளே
முந்திப் பொழிவாய் அருளமு தென்னுள் முருகையனே
அந்திப் பிறைசேர் அரனார் மகனே அருட்கொழுந்தே. 24

சிந்தனை நின்பதத் தென்றும் திளைத்திடச் சீரடிக்கே
வந்தனை செய்து திருப்புகழ் ஓதநல் வாக்கினையும்
தந்தனை வெற்பமர் பால முருகனே தற்பரனே
எந்தையின் மிக்க இளையாய் மயில்மீ திவர்ந்தவனே. 25

உள்ளத் தொளித்திருந் துண்மை உணர்த்தியும் வந்தெனது
கள்ள மனத்தி லுறுதூ ரகற்றிக் கருணையினால்
மெள்ள எனதுட் புகுந்திடு முன்னருள் மேவலெந்நாள்
எள்ளத் தனையும் நினையா திருந்த எளியனுக்கே. 26

பரவிப் பணிபவர் தம்வினை பற்றறப் பன்னிரண்டு
கரங்கொடுத் தேற்றிடும் ரத்ன கிரியாய் கதிர்மணியே
பிரமன் அறியாப் பொருளை உணர்த்தும் பெரும்பொருளே
சிரத்தில் உனதருட் பாதம் பதிப்பாய் சிவகுகனே. 27

திருவுளங் காணாத் திகைப்புறு கின்ற சிறியவனும்
கருவினுள் வீழ்ந்து கருத்தழி யாமுன் கடையருளால்
திருவருள் செய்தெனை அஞ்சலென் றேற்பாய் திருக்குமரா
மருவணி ரத்ன கிரியாய் மயிலேறு மன்னவனே. 28

பெற்றதம் பிள்ளைக் குணங்கள் அறிபவர் பெற்றவரே
மற்றவர் தாம்அறி வாரோ சொல்ரத்ன மலையுறைவோய்
செற்றவெஞ் சூரனை வென்றநற் செவ்வேளே செஞ்சுடரே
நற்றுணை நீயென நின்றாளைப் பற்றினேன் நன்றினிதே. 29

இப்பாரில் என்னுடல் ஆவியெல் லாம்உனக் கீந்தளித்தேன்
அப்பா அருட்கட லேரத்னக் குன்றுறை ஆறுமுகா
ஒப்பாரு மில்லாத கண்ணுதல் மைந்தா ஒருபொருளே
துப்பாய உன்னடி சேர்ப்பாய் கடையேன் துலங்கிடவே. 30

போக்கும் வரவும் இரவும் பகலற்ற புண்ணியனே
வாக்கும் பொருளற என்னுள் உவப்புடன் வந்தினிதே
தாக்கும் தருவே மனவொடுக் கந்தந்து தன்வயமே
ஆக்கும் பரனே இரத்ன கிரிவாழ் அறுமுகனே. 31



நேற்றிருந் தாரின் றழிந்தன ரென்றோர்ந்தும் நின்பதமே
போற்றிலன் வாய்த்தற் கரியநல் வாய்ப்பினைப் போக்கியிவண்
ஆற்றிலன் ரத்ன கிரியுறை செல்வனே ஆழ்பிறவிச்
சேற்றினில் வீழா தருளுவாய் உய்ந்திடச் சின்மயனே. 32

கொள்ளேன் உளத்துன் னருட்கோல மன்னநீள் குன்றுறைவோய்
நள்ளேன் உனதடி யாருறை கூட்ட நடுவுளன்றி
விள்ளேன் அருளாய உன்நாம மன்றியான் விண்ணவனே
கள்ளே சொரியுமி ரத்ன கிரியுறை கண்மணியே. 33

எனக்கென வோர்செயல் இன்றி அனைத்தும் இணையடியான்
தனக்கெனச் சொல்லும் உடல்பொரு ளாவியைத் தந்தடைந்தேன்
மனத்தகத் தொன்றி மறைந்தும் மறைக்கின்ற மாயிருளைக்
கனத்தரு ளாற்றவிர்த் தாள்ரத்னக் குன்றக் கதிரொளியே. 34

அண்ட முதலாகக் கண்ட பொருள்கள் அனைத்துமுன்றன்
பண்ட மெனவுந் தெரிதலால் உன்றாட் படைக்கவொன்றும்
கண்டில னிவ்வடி மைத்தொண்டை ஏற்பாய் கதிர்மணியே
அண்டி நினதடி சார அருளாய் அயிலரசே. 35

அஞ்ஞானத் தாலறி யாதுசெய் குற்றம் அருளுடனே
மெய்ஞானத் தால்போக்கி யென்னைத் தடுத்தருள் மேலவனே
விஞ்சையர் காணரும் முக்க ணருட்செல்வன் விண்ணவனே
தஞ்சமென் றேயடைந் தேன்றாள் அருளாய் தயையுடனே. 36

என்றுநீ தோன்றினை அன்று முதலாக இவ்வடியேன்
உன்றனை ஏத்தியும் ஆளாத தென்னோ ஒளிமயனே
இன்றுனை ஏத்திட என்வினை ஏய்ப்ப தினிதுணராய்
குன்றுறை மைந்தா குருவாய் வருவாய் குறைகளைந்தே. 37

ஊமன் கனவென நற்சிவ ஞானம் உணருகின்ற
காமரு ஞானிகள் நாடு முனதடி காண்பதென்றோ
தேமரு வுங்கூந்தல் தெய்வ மகள்சேர் திருப்புயத்தாய்
காமரு வும்ரத்ன குன்றமர்ந் தோங்கிடும் கற்பகமே. 38

தாகந் தணிக்கக் கடல்நீர் பருகும் தகவிலன்யான்
ஆகமங் காணரும் உன்னடி காண அகிலமுறு
போகத்தில் வீழ்ந்துழலு் புல்லனைக் காத்தருள் புண்ணியனே
நாகத்தை ஏற்ற சிவநற் குமரா நயந்தினிதே. 39

அருவும் உருவும் அருவுரு வுந்தானாய் ஆருயிர்கள்
இருண்மலம் போக்கத் திருமால் புதல்வியும் இந்திரன்றன்
திருமகள் சேரவே ரத்ன கிரிவந்த செய்யனேயென்
கருத்துறை செஞ்சுட ரேசேர்ப்பாய் உன்றன் கழலிணையே. 40

புன்மலம் சேர்த்து மலபோகம் தன்னைப் பொருத்துதல்போல்
நின்மல நீள்ரத்ன குன்றுறை கின்ற நியதியனே
நின்மலம் சேர்த்துயி ருள்ளுறு மாமலம் நீக்கியென்றும்
உன்னல மாகிய வேறின்மை ஈவாய் ஒளிமயனே. 41

அறிவாகி ஆனந்த மாகிப் பொருள்தள் அனைத்தினிலும்
பிறியாமல் தண்ணருள் மல்கும் இளைய பிரானவனை
நெறியாக ஏத்தவே ரத்ன கிரிகுகன் நீக்கிடுவன்
செறிவான துக்க மனைத்தும் ஒடுங்கிடச் சிற்சுகமே. 42

கரையிலா இன்பப் பெருக்கை அளிக்கும் கனியமுதே
வரையிலா தங்குமுன் றாள்பெற அன்பர் வருவரிது
வரையிலே நானுனை நாடிக் கலந்திலேன் வானவனே
உரையிலா இன்ப மளித்தினிக் காத்தருள் உண்மையனே. 43

பாச பசுஞானத் தால்அறி யாத பரம்பொருளே
பாச பசுஅறி வுந்தான் பயிலப் பணிப்பவனே
பாச பசுஅறி விற்குந்தான் மேலாம் பரசிவமே
நேசனே ரத்ன கிரியானே சேர்ப்பாய் திருவடியே. 44

மண்ணினி லோசையூ றும்ஒளி நற்சுவை மாமணமாய்த்
தண்ணிய நீரிற் சுவைமுதல் நான்காய்த் தழலிலொளி
எண்ணிய மூன்றாய் வளியினில் ஊறொலி என்றிரண்டாய்
விண்ணி லொளியாய் விளங்கிறை வாரத்ன வெற்பரசே. 45



வேதங்கள் ஐயா வெனவோங்கிக் காணா விகிர்தனுமாய்
வேத முடிவில் நடம்பயில் கின்ற விமலனுமாய்
நாத முடிவில் அமர்ந்திடு கின்ற நாதனுமாய்
போத முதலாய எண்குணத் தாய்கிரி போந்தனையே. 46

செய்யும் வினையின் முதல்வனாய் அவ்வினை செய்பொருளும்
ஐயம் இலாமல் கருமப் பயனை அளிப்பவனே
உய்யும் வினைப்பயன் காலத்தே ஊட்டி உணர்த்திடுவோய்
உய்ய உயிரெலாம் ரத்ன கிரிதனை உற்றனையே. 47

பந்தம் அகற்றும் அளவிலாப் பேரருட் பண்புடையாய்
எந்த உலகமும் தோன்றி ஒடுங்க இயக்கிடுவோய்
சந்த மறையா கமம்கலை யாவையும் தந்தவனே
இந்த இரத்ன கிரிபால னான இளையவனே. 48

உலக மனைத்துளும் நீங்காது நின்றுதான் ஒன்றெனவும்
உலக மனைத்துத் தொழிலிற் கலந்தும் உடனிருந்தும்
உலகத் தொழிலிற் கலந்துற்றும் வேறாய் உறைபவனும்
நலமுறும் ரத்ன கிரிதனிற் சேர்ந்திட்ட நாயகனே. 49

இடர்கள் அனைத்தையும் பஞ்சின் நெருப்பாய் எரித்திடுவோய்
தொடரும் பிறவிவேர் நீக்கி அருள்நிறை தொண்டனாக்கிப்
படரும் புகழினை உன்னடிக் கீழென்றும் பாடிநிற்க
அடரும் உனதருள் நல்காய் கிரியாய் அருட்குகனே. 50

மயங்கும் இடர்நீக்கும் பேரொளி யாய மலர்ப்பதத்தால்
வயங்குமுன் ஆனந்த வெள்ள மதனிற் படிவதெந்நாள்
நயந்துசீர் பாடும் அருண கிரிபால் நயந்தவனே
உயவுன்சீர் ஓத அருளாய் கிரியாய் ஒளிமயனே. 51

நாவற் பழந்தனை மண்ணினில் வீழ்த்தியிந் நானிலத்திற்
பாவலர் போற்றிடும் அவ்வைக் குணர்த்திய பாவலனே
சேவற் கொடியாய் ரத்னகிரி போந்த சிவகுமரா
தேவரும் தேடிடும் தெய்வமே சேர்ப்பாய் திருவடியே. 52

நின்பாத தாமரைக் கன்பேது மில்லாத நீசனென்றன்
புன்போத மாயப் புரைதன்னை இன்றே பொறுத்திடுவாய்
அன்பே உருவாய் அமரரைக் காத்த அறுமுகனே
என்பே உருக எளியனை ஏற்பாய் எழில்மணியே. 53

நற்கீரன் நன்முரு காற்றுப் படையை நயந்தினிதே
கற்குகை யிற்சேர்ந்த கற்றவர் துன்பமே காத்திடவுன்
அற்புறு வேலேவும் ஆறு முகனே அருங்கனியே
பொற்புற என்னுள் உறைந்தே புரைதீர்ப்பாய்
பொன்மணியே. 54

குமர குருபரன் நாவினிற் சேர்ந்த குருகுகனே
அமரரும் வேண்ட அழலுரு வாய்த்திகழ் ஆறுமுகா
சமரதைச் செய்தவெஞ் சூரனை யாண்ட சரவணனே
எமபடர் தோன்றுமுன் வந்தாள் மயிலே றிறையவனே. 55

மக்கட் பிறவி யெடுத்து முனையே வழுத்தலின்றித்
துக்கக் கடலி லழுந்தி அலைந்தேன் துரிசுடையேன்
நக்கன் மகனே மனத்துள் உறைந்தே நனிசுரப்பாய்
பொக்க மிலாவுன் கருணை யமுதையிப் பொய்யனுக்கே. 56

இப்போதே என்னுடல் ஞானங்க ளெல்லாம் இணையடிக்கே
தப்பாதே தந்தேன் தயாநிதி ஏற்றருள் தற்பரனே
ஒப்பாரு மில்லாவுன் ஞானம் அருளாய்வெற் போங்குகுகா
அப்பா அறுமுக னேகிரி தோறா டருட்கொழுந்தே. 57

சார்ந்தார்க் கருளிடும் சண்முகத் தெய்வமே தற்சிவமே
வார்ந்த பொழில்சூ ழரதன மாமலை யான்கழலை
ஓர்ந்துவெண் ணீறணிந் தாறெழுத் துள்ளத்தே உச்சரித்தால்
ஆர்ந்த சிவஞான மோங்க அலக்கண் அழிந்திடுமே. 58

பதியே அனைத்துள்ளும் ஒன்றியும் ஒன்றாப் பரஞ்சுடரே
கதியே அளித்திட ரத்ன கிரிவந்த கதிர்மணியே
நதிசேர் சடையான் குமரநின் நாமம் நயந்துரைப்பின்
சதிசேர் புலன்வழி தூர்த்தே அருளுவாய் சண்முகனே. 59



தீராத் துயர்க்கடல் வீழ்ந்தலை கின்றஇத் தீயவனைப்
பாராத தென்னோஇப் பாவியேன் உய்யப் பரஞ்சுடரே
சீரார் கிரியுறை செல்வா உனதடி சேர்ந்தணைந்தேன்
ஏரார் நினதருள் நல்காய் எழிலாய் எளியனுக்கே. 60

சும்மா இருவென் றருண கிரிக்கோது தூமணியே
சும்மா இருக்கும் நெறியெனக் கோதாய் சுடர்க்கொழுந்தே
அம்மா இரவு பகலிலா நின்றன் அருள்வெளியில்
பெம்மான் அடியேன் திளைக்க அருளாயிப் பேயனுக்கே. 61

கருவிற் புகுநாள் முதலாய்க் கழலடி காண்பதற்கே
உருகும் எளியேனை ஏற்காத தென்னோ உமைகுமரா
திருமால் மருகா இரத்ன கிரியுறை தீந்தமிழாய்
உருவாய்க் குருவாய் வருவாய் முருகாம் ஒருபொருளே. 62

கண்ணே மணியே கருத்துள் ஒளிரும் கருணையனே
விண்ணோர் வினையை அறுத்திட் டருளும் வியன்குருவே
மண்ணோர்க் கருள்செயும் ரத்ன கிரிவந்த மாதவமே
நண்ணேன் உனதடி யன்றி 'அருளாயென் நாயகமே. 63

உனது திருவடி நீழ லதனில் உறைந்திருந்தும்
உனது திருவரு ளாம்அமு துண்ணா துழல்பவனை
உனது கருணைப் பெருக்கால் உயர்கிரி உற்றெளிதில்
உனது பெருஞானம் நல்குவாய் என்னை உடையவனே. 64

உடையவ னேயுன் உடைப்பொரு ளன்றோ உமைகுமரா
கடையவ னேன்செய் வினைபோக்கி ஆள்வாய் கருணையினால்
விடையவ னின்விறல் மார்பிற் றவழும் விழுப்பொருளே
நடையைப் பயில்வாய் இரத்ன கிரியாய் நடுவுறைந்தே. 65

கண்டிலை யோயான் படும்பா டவற்றைக் கருணைவெற்பே
கண்களீ ராறுடை யாய்கண் ணுதலான் கதிரொளியே
மண்ணினில் சச்சிதா னந்தம் தனையாண்ட மாமணியே
நண்ணி யெனையாள் இரத்ன கிரியுறை நாயகனே. 66

நில்லா உடம்பை நிலையென்றே உன்னி நிலவுலகில்
பொல்லாச் செயல்கள் புரிந்தே அலையும் புலையவனை
நல்லார்பாற் சேர்த்தே மனவொடுக் கந்தனை நல்கிடுவாய்
எல்லாமாம் ஓங்கார ரூபன் கணேசற் கிளையவனே. 67

ஆசைக் கடலில் அகப்பட் டுழலும் அறிவிலியேன்
பாசம் பறித்தே சிவஞானத் தேன்பொழி பாதபத்ம
வாச மலரென் றலைசூட்டாய் ரத்ன வரையுறையும்
தேசச் சுடரொளி யேதெய்வ யானையுண் டெள்ளமுதே.68

பண்டுசெய் பாழ்வினை போக்கி அருளும் பழம்பதியாய்
கண்களால் உன்றன் அருட்கோலங் கண்டேன் கருணையினால்
தொண்டர்தம் உள்ளிருந் துண்மை உணர்த்திடும் தூமணியே
இண்டைச் சடையான் குமரா அருளாய் இளையவனே.69

எண்ணிலா எண்ணஞ்சேர் நெஞ்சேநின் துன்பங்கள் இற்றிடவுன்
கண்களும் தூங்கக் கிரியுறை செவ்வேள் கருத்தொன்றிடத்
தண்ணார் மவுனமே கூடினால் முத்தியைத் தான்பெறலாம்
விண்ணோரும் காணா விகிர்தன் அருளால் வியனுலகே.70

கண்ணின் மணியென்றே யேத்திடும் அன்பர் கருத்தினுள்ளே
நண்ணி யுறையும் அருளெனக் கெய்துநாள் நண்ணிடுமோ
மண்முத லாகவே பூதங்கள் எல்லா வடிவுமெங்கும்
பெண்ணுமா ணாகியல் லானே கிரிசேர் பெரும்பொருளே.71

அருள்சேர் பழத்தின் சுவையே அமுதே அரிதெனுநற்
பொருளினைத் தந்தருள் புண்ணிய னேஎன் புலத்துறைந்து
கருதரும் காலமும் தேசம் வகுத்துக் கருவிமுதல்
இருவினை கூட்டி உயிர்களை ஆட்டும் இளையவனே. 72

தெள்ளுவெண் ணீறக்க மாலை யணியத் தெளிமனத்தி
னுள்ளேஉன் நாமம் துன்னிட உண்மை உணர்பவர்தம்
கள்ளமில் கேண்மை அருளாய் பரசிவன் கண்ணொளியே
வள்ளலே தொண்டர்தம் உள்ளுறை கின்ற மலைத்தெய்வமே.73



சும்மா இருக்கல் சுகமென்றே கூறச் சுருதியெலாம்
அம்மா அதன்பொருள் ஓராத பேதை அறிவிலியேன்
வெம்மாய ஞாலத் துழன்றலை கின்ற வினையினனை
எம்மானே ரத்ன கிரியாய் இரங்கிவந் தேற்றருளே. 74

வாயிலோர் ஐம்புல வேடர்கள் ஈர்த்து வலியவின்பத்
தீயினில் வீழ்த்திட மெய்சோரச் சிந்தை தெளிவகன்று
தாயிலாச் சேய்போல் அலைந்தேயான் கெட்டேன் தயாபரனே
நாயினேன் உய்ய அருளாய் கிரிவாழும் நாயகனே. 75

செற்ற அரக்கன் அலறிடத் தன்காற் சிறுவிரலால்
கற்குன் றடர்த்தான் செவியில் மறையைக் கழறிடுவோய்
மற்றிணை யில்லா இரத்ன கிரிவாழ் மறைமுதலே
உற்ற துணையென் றடைந்தேனீ நல்காய் உனதடியே. 76

உய்ந்திட உன்னருள் தன்னையே நல்காய் உடையவனே
பொய்யும் அழுக்கா றவாவும் உடைபட்டுப் போயழியும்
மெய்யும் அறிவும் அடியார் பணிகளும் மேவிவரும்
துய்ய இரத்ன கிரியான் எனதுள் துலங்கிடவே. 77

உள்ளத்தி னுள்ளொளித் தோங்கி அருள்தனை ஊட்டுகின்ற
கள்ளக் கருணை தனையே கசடனேன் காணுமதோ
வெள்ளந் தரித்துநஞ் சுண்டோன் குமரனே வெற்பமர்ந்தோய்
பள்ளத் துறுமீனொப் பேனுக் கருளாய் பரம்பொருளே.78

சொல்லால் பொருளால் அளவையாற் காணரும்
தொன்மையனே
நல்லார் அவையில் நணுகிடச் செய்வாயென் நாயகனே
கல்லாலின் கீழே உணர்த்திடும் கண்ணுதற் கான்முளையே
எல்லாமாய் ஒன்றாகி வேறாகும் எந்தாய் எழிலரசே. 79

எங்கேனும் எப்பொரு ளாகிப் பிறந்தாலும் இன்னருளே
தங்கு தயாநிதி ரத்ன கிரியுறை சண்முகனே
அங்கே இனிதுடன் வந்தா ருயிர்க்கே அருளிடுவோய்
இங்கே உனதடி என்னுள் இருத்தி இனிதருளே. 80

சிந்தையில் உள்ள மணலூற்றாய்ப் பாய்ந்திடும் தெள்ளமுதே
புந்தியில் ஒன்றிப் புலன்கள் அவாவினைப் போக்குகின்ற
எந்தையே எழிலார் இரத்ன கிரியுறை என்னரசே
கந்தமார் ஞானம் பெருகுதல் என்றோ கருத்தழிந்தே. 81

அங்கிங்கு மென்னாமல் எங்கும் நிறைந்துள்ள அற்புதமே
பங்கயத் தேன்மாந்தி ஆர்க்கும் சுரும்பெனப் பாதமெனும்
செங்கம லத்தமு துண்டு மயங்கிடச் செய்வதென்றோ
பொங்கலர் சோலைசூழ் ரத்ன கிரியுறை புண்ணியனே. 82

உன்னை நினைந்துன் உளத்தினில் ஒன்றி உறைவதற்கே
என்னை உனதடி நாளும் வழுத்தும் எளியவனை
அன்னை வயிற்றில் புகச்செய் திடாதே அறுமுகனே
பின்னை உனையே பொருளெலாம் கண்டு பிதற்றுவனே. 83

உய்யும் படிக்குன் அருளை அருளாய் உடையவனே
பொய்யும் அவாவும் அழுக்காறும் மற்றவும் போயகலும்
மெய்யும் அறிவும் அருட்பே றனைத்தும் விரைந்துவரும்
செய்யும் 'பணிகள் உனையே அடையும் சிவகுகனே. 84

சிந்தனை ஒன்றாய் நிறுத்திப் புலன்களும் சீரடியில்
வந்தனை செய்திடச் சிற்சுக மாயென்னுள் மன்னுகின்ற
கந்தனை காமரு ரத்ன கிரியின் கதிரொளியை
நிந்தனை யின்றி வழுத்த அருளுவன் நின்மலனே. 85

அன்னை யிலாச்சே யெனவே அலந்தேன் அறுமுகனே
என்னே! உனதருள் இன்றுயான் கண்டேன் இரத்னகிரி
மன்னும் மதலாயென் உள்ளத்தே யுற்ற மலங்கடிந்தே
என்முதற் றாயென்றே ஆண்டருள் செய்வாய் எழிலரசே. 86

எண்ணிட உன்நாமம் சேயடி யென்றலை ஏத்திடவும்
நண்ணரும் ஞானி நடுவுளே நாடுவேன் நாயகவுன்
தொண்டர்தம் தொண்டனாய் ஏற்றிடாய் தீர்வேன்
தொழும்புபிறப்(பு)
அண்டரும் காணா சிவநற் கனியே அருட்கொழுந்தே. 87



கேட்டறி யாதாய் கிளையேதும் அற்றவா கேடிலியே
வேட்புடன் வேண்டுவார் வேண்டுவ ஈந்திடும் வேலவனே
நாட்டவர் முன்சச்சி தானந்தத் துள்ளே நகைத்தவனே
மீட்டும் பிறவா தெனைக்கா கிரியுறை மேலவனே. 88

செந்தழல் ஒத்தசீர் மேனியாய் செல்வச் சிவகுமரா
அந்தமில் ஆரமு தேஅண்டர் அண்ணல் அருந்துணையே
வந்தென் னுளம்புகுந் தாள்வாய் இரத்ன வரையுகந்த
கந்தா கடம்பா கருணை மலையே கதிரொளியே. 89

பிறப்பெனும் ஆழ்கடல் வீழ்ந்திட்டே காமப் பெரும்பிடியாம்
சுறவின் பகுவாய்ச் சுழன்றலை மோதிடும் சூழ்வினையேன்
கறவைகாண் கன்றென நின்பேர் பிடித்துக் கதறுகின்றேன்
இறப்பும் பிறப்பும் இறுத்திட் டருளாய் இளையவனே. 90

வாரா வழியை அருள்வாய் குருவாய் வருபவனே
ஆரா அமுதே அருட்பெருங் குன்றே அறுமுகனே
சீரார் இரத்ன கிரியுறை கின்ற சிவகுமரா
நேரார் உனக்கே மறைகளும் காணாத நின்மலனே. 91

பொன்னும் புகழும் திருவுடன் யாவும் புணர்ப்பவனே
என்பிழை தன்னைப் பொறுத்தே அருளும் எழிற்குகனே
முன்னம் எனையே உனதடி சேர்த்தேன் முழுமுதலே
என்னே உனதருள் இன்னும் அருளா திருந்ததுவே. 92

கருணை உருவே இருகண் ணொளியே கடலமுதே
செருவினிற் சூரன் றனக்குருக் காட்டிய செஞ்சுடரே
கருவேர் அறுத்தே திருவருள் நல்கிடக் காலனவன்
வருமுன் கழலிணை காட்டாய் மயிலுடன் வந்தினிதே. 93

புததி யெனும்பாம்பின் வாய்தேரை யொத்திடும் புன்னெறியேன்
சித்தம் கலங்கித் திருவருள் காணாத் திகைத்திடுமென்
தத்துவம் நீக்கும் இரத்ன கிரியானே தற்பரனே
சுத்த பரபோகம் துய்க்க அருளாய் தூமணியே. 94

பொல்லாத ஆசைப் பிடிதனில் சிக்கிப் புலனறிவு
செல்லாமல் நன்னெறி காட்டும் கிரியானே செய்யவனே
கல்லாதேன் உன்கழல் சிக்கெனப் பற்றிக் கதறுகின்றேன்
எல்லாமாய் நிற்கும் பரனே அருளென் எழிற்குருவே. 95

தத்துவங் கள்முப்பத் தாறையும் தப்பிறத் தாண்டியபின்
நித்திய மாகவே பற்றும் நியதியை நின்மலனே
சித்தத்தே ஓதி யருள்வாய் சிவகுகா சின்மயனே
சுத்தமாம் ஆன்மாவும் உன்றாளில் தோய்ந்து சுடர்ந்திடவே. 96

உன்னருந் தாளிணைத் தம்தலை சூடிடும் உத்தமர்கள்
பன்னரும் நின்புகழ் பாமாலை பண்புடன் பாடியதில்
துன்னரும் ஞானநீர் பெய்து நயந்தேத்தித் தூவிடுவர்
சொன்னறும் பூம்புகழ் தோற்றுதல் என்றோ
சுடர்க்கொழுந்தே. 97

பொய்யான இத்தரை கானல் உறுநீர் போல்வதென
மெய்யாய் உணர்ந்தபின் மௌனம் மிடைந்ததோர்
மெய்யுணர்வால்
துய்யவுன் றாளில் மனத்தை ஒடுக்கிடும் தூநெறியார்க்
குய்ய அருளுவோய் ரத்ன கிரியாய் ஒருபொருளே. 98

எனக்கென் றிடவோர் உரிமையும் இல்லா எளியவனின்
மனத்தின் மலமற நின்றாட் கமலம் மலர்ந்திடவே
தனக்கே உரிய அருளுடன் அன்புநீர் தான்பெருக்கி
உனக்கே உரியதாய் ஏற்றருள் யான்இன் றொடுங்கிடவே. 99

செய்யும் தவம்சற்று மில்லாத நான்உன் திருவடிக்கே
உய்யும் படிக்குத் தொடுத்த அலங்காரத் தொண்மலரில்
துய்யரத் நாசலம் ஒன்றியிப் பாவால் துதிப்பவர்க்கே
மெய்மைநல் வாழ்வு விளைத்தருள் செய்வடி வேலவனே. 100

**இரத்தினகிரிப் பாலமுருகன் அலங்காரம் முற்றிற்று**



உ

# ஆறுமாமுகன் அருட்பேராயிரம்

## (ஸ்ரீ சுப்ரஹ்மண்ய சகஸ்ரநாம ஸ்தோத்ரம்)

## பண்டிதர் ச. சுப்பிரமணியம்

### காப்பு

மாயன் மகளிர் மணாளன்பேர் ஆயிரமும்
ஆயமாய் அர்ச்சிப்பான் ஆய்தமிழில் - நேயமாய்
ஓதும் உரையோங்க ஓங்கார நம்பியைமுப்
போதும்தூய்ப் போற்றுதும் போது.

### தியானம்

ஆறுமா முகமீ ராறாம் அருட்கண்ஈ கரம்ஈ ராறும்
தேறுமா மலர்த்தாள் பூவிற் பொலிமனம் குறமான் யானை
கூறுவேல் சேவல் கூடக் கோலமா மயில்மேல் வந்தெம்
ஏறுமால் உளத்தின் எய்தாய்; ஏத்தஏ ரகத்தெம் மானே.

### நூல்

### ஆயிரம் நாமம்

போற்றியோம் எண்ணி லாற்றற் புங்கவ புனித! போற்றி
போற்றிமற் றரியாய் யாரும் வெலப்படா வீர போற்றி
போற்றியோம் அநாதர்க் காத்த தவறுறாப் பயனே போற்றி
போற்றியோம் அசோக போற்றி மூப்பிலா முருக போற்றி. 1

போற்றியோம் அபய போற்றி உயர்குண வள்ளல் போற்றி
போற்றியோம் பாவ நாச முதலெண்ண நிற்பாய் போற்றி
போற்றிமால் வரைநாள் பால அநந்தமாம் மாண்ப போற்றி
போற்றியோம் எல்லை யில்லாய் அளவிலின் பருள்வாய்
போற்றி. 2

போற்றிகே டில்லாய் கேடில் முத்திதந் தருள்வாய் போற்றி
போற்றியோம் அநாதி நாத அளப்பரும் அளவே போற்றி
போற்றியோம் அழிவி லானே வழுவிலா உறுதி போற்றி
போற்றியோம் கறையி லானே அபிராம போற்றி போற்றி.3

போற்றிமுன் னேன்று நிற்பாய் அளப்பில்வீ ரியனே போற்றி
போற்றியோம் அநாதர் நாத அநாதியாம் அமல போற்றி
போற்றிசோர் விலாவுற் சாக தேவர்கள் தேவ போற்றி
போற்றிவெம் பகைகாய் தீர எவைக்குமா தார போற்றி.4

போற்றியெண் குணமாஞ் சித்த முன்னின்றே வுகிற்பாய்
போற்றி
போற்றிசஞ் சலமில் லானே அமரர்போற் றெடுப்பாய்
போற்றி
போற்றிநிட் களங்க போற்றி அள ,னா கார போற்றி
போற்றிதீப் பயந்தோய் தோமி லவயவத் துருவ போற்றி.5

போற்றியற் புதனே வேண்டும் வரமருள் பவனே போற்றி
போற்றிஐம் புலனெட் டானே அறிவரும் இயல்பா போற்றி
போற்றிகாண் பரியாய் யாரும் புணர்கிலாப் புணர்ப்பாய்
போற்றி
போற்றியா பத்தைப் போக்கி ஆரியா போற்றி போற்றி.6

போற்றுபூ ரணனே போற்றும் ஆகமத் துதியாய் போற்றி
போற்றிநோ வுற்றார்க் காப்பாய் மூலமாம் முதல்வ போற்றி
போற்றியா நந்த! மேலோர் சேவிக்கும் சீரோய் போற்றி
போற்றிசார்ந் தவர்க்கு தார ஆனந்த மயனே போற்றி. 7

போற்றியே ழையர்ச காய வியப்பருள் வடிவ போற்றி
போற்றிஆ நந்த ரூப துன்பர்துன் பொழிப்பாய் போற்றி
போற்றிஐங் கரற்குத் தம்பி ஏவர்க்கும் இனியாய் போற்றி
போற்றிமா உரித்தோன் மைந்த மறைகள் போற்றெடுப்பாய்
போற்றி. 8

போற்றியிந் திரவாழ் வீவாய் போற்றிபுண் ணியப்பே றாவாய்
போற்றியின் பன்பர்க் கீவாய் இருமையும் அளிப்பாய் போற்றி
போற்றியெம் வேண்ட லீவாய் இந்திரன் பணிதாள் போற்றி
போற்றியோம் போற்ற வுள்ளாய் ஈசனார் குமரா போற்றி.9



போற்றியீந் தருள்வாய் இட்டம் ஈதிபீ திகள்தீர் போற்றி
போற்றியோம் போற்ற வுற்றாய் வேகம்மூன் றில்லாய்
போற்றி
போற்றியீ கையினாம் கீர்த்தி ஒய்விலா துழைப்பாய் போற்றி
போற்றியாண் மையினால் மிக்கோய் மேலுயர் சத்தா
போற்றி. 10

போற்றியுற் சாக போற்றி உயர்குணத் துதார போற்றி
போற்றிநல் விழாவை வேட்பாய் மலர்தரு மலரே போற்றி
போற்றியீ சன்பால் வந்தோய் கொடியர்க்குக் கொடியாய்
போற்றி
போற்றியோம் நெடியாய் துட்டர்ச் சுடுசுடர்க் கண்ணா
போற்றி. 11

போற்றியோம் வெற்றி வேழ வெவ்வினை தணிப்பாய்
போற்றி
போற்றியோம் துயர்து டைப்பாய் நரகர்க்கு நாத போற்றி
போற்றியோம் வலிமை மிக்கோய் புராணனாய் வளர்ந்தாய்
போற்றி
போற்றியோம் உமையாள் மைந்த உதவுசீ ரகத்தாய் போற்றி.12

போற்றிசங் கரனார் மைந்த வழிமுத்திக் கருள்வாய் போற்றி
போற்றிவீ ரியத்தைக் காப்பாய் வலிமைவாய்ந் தவனே
போற்றி
போற்றிமேல் நிலைக்கே உய்ப்பாய் மேலவர் மேலோய்
போற்றி
போற்றிமே லுலக வேந்த தைரிய சாலி போற்றி. 13

போற்றியோம் புகழார் வள்ளால் மேலாநின் ஆணை
போற்றி
போற்றிவான் முனிவர் போற்றாய் கடன்மூன்றும் ஒழிப்பாய்
போற்றி
போற்றிதிவ் வியசீர் ரூப நேர்வழி உய்ப்பாய் போற்றி
போற்றிநேர் வழிகாட் டீச உண்மைவாழ் உறையுள் போற்றி.14

போற்றிநேர் மையிலே நேச காளைகண் டனையாய் போற்றி
போற்றியோம் வளர்ப்பாய் எம்மை ஒளிவளர் உண்மை
போற்றி

போற்றிதாழ்ந் தோரை மீட்பாய் புயற்பிறப் பொழிப்பாய்
போற்றி
போற்றிமான் கரத்தன் மைந்த ஏகனே போற்றி போற்றி.15

போற்றிபா வங்கள் நீப்பாய் ஆக்கமுற் றருள்வாய் போற்றி
போற்றிஇந் திரபோ கத்த புலன்களை புனித போற்றி
போற்றியிந் திரன்சேய்க் கீச வீரியா கரனே போற்றி
போற்றிமூ லிகைகள் பூத்தாய் வீரியம் விளைப்பாய் போற்றி.16

போற்றியோம் அன்ன தாதா போற்றியோம் உதார சீல
போற்றியோம் உமையாள் பால போற்றியுக் கிரனார் சேயே
போற்றிஉந் நதபே றீவாய் போற்றியோம் வரதர்க் கீச
போற்றியோம் மருந்தை ஆக்கி மருந்துமா யிருப்பாய்
போற்றி. 17

போற்றிஔ டதவா கார போற்றியோம் சுடரும் சோதி
போற்றிசூ ரியன்போற் றீச போற்றிஅம் பிகையாள் மைந்த
போற்றியன் னம்பா லிப்பாய் போற்றிகா லாரி பால
போற்றியோம் குருடு போக்கி போற்றியோம் கமலக் கண்ண.18

போற்றிமா யாதி யில்லாய் போற்றியோம் அமரர் நாத
போற்றியோம் தெளிய ஒண்ணாய் போற்றிபுண் ணியப்பே
றார்த்தி
போற்றியோம் பகையி லானே போற்றிபே தகப்பேச் சில்லாய்
போற்றிநற் கதிதந் தீவாய் போற்றியோம் கார்த்தி கேய.19

போற்றிநாம் விரும்பும் ரூப போற்றியோம் குமர போற்றி
போற்றியோம் கிரவுஞ்ச பேத போற்றிகா மியங்கள் ஈவாய்
போற்றிகா ரணனாம் பூத போற்றிகா மியமாய் உள்ளாய்
போற்றிகட் டழக போற்றி திருவருள் வாரி போற்றி. 20

போற்றிபொன் னொளியார் வண்ண போற்றிபே
ரொளிப்பி ழம்ப
போற்றியான் மாக்கட் கன்ப போற்றிஇச் சிப்ப நல்கி
போற்றிஞா னப்பா வாண போற்றிமா கீர்த்தி ஈட்டி
போற்றியோம் சேவ் லேந்தி போற்றியோம் ஆதி மூல.21

போற்றியோம் குவளைக் கண்ண போற்றிகுங் குமநேர் வண்ண
போற்றியோம் இடுக்கண் தீர்ப்பாய் போற்றிசா துரிய போற்றி



போற்றிசே வலம்ப தாகை போற்றிதீப் பொறியு தித்தாய்
போற்றிதீ யோர்கு ரூர போற்றிதீ யோரைத் தீப்பாய். 22

போற்றிவெங் கலிக்குக் கால போற்றிமன் மதன்மேல் ரூப
போற்றிகற் பகமாய் நிற்பாய் போற்றியோம் காந்தி நாத
போற்றியோம் கருதிற் றீவாய் போற்றிமங் களங்கள் செய்வாய்
போற்றியோம் கிலேச நாச போற்றியோம் கருணா மூர்த்தி.23

போற்றிமா கருணை வாரி போற்றியோம் பாவம் கல்வி
போற்றிஆள் வினையி னான்றோய் போற்றிதீ யோர்க்குக் கோர
போற்றியோம் கவசம் பூணி போற்றிகா ரியப்பே றுள்ளாய்
போற்றிகோ மளவா கார போற்றிதர்ப் பையின்மேல்
பற்றோய். 24

போற்றிநிந் தனையர் நாச போற்றியோம் கலைமி லைந்தோய்
போற்றியோம் கியாதி யாள போற்றியோம் பரிசை யேந்தி
போற்றிவா ளங்கை தாங்கி போற்றியோம் கதைகைக்
கொண்டோய்
போற்றிதீ யவர்தண் டிப்பாய் போற்றிமெய்ப் புகழ்நல் கீச.25

போற்றிவிண் சுடர்கட் கீச போற்றிமே தகவி ருப்ப
போற்றிவா னவர்போற் றாத்த போற்றிதா பங்கள் போக்கி
போற்றிவா னகத்தே வாழ்வாய் போற்றிவா னகசஞ் சார
போற்றிவா னவர்தம் பற்றே போற்றிபூண் பிறையான்
பிள்ளாய். 26

போற்றிகுன் றுகள்தோ றாடி போற்றிவிண் ணவர்தம் காப்பே
போற்றியா காய ரூப போற்றிதீ வினைகண் டித்தோய்
போற்றிவான் மகளிர் போற்றாய் போற்றிகாங் கேய போற்றி
போற்றியோம் மலைமான் செல்வ போற்றியோம் கணேசர்
தம்பி. 27

போற்றியோம் குகனே போற்றி போற்றியோம் காவற் கார
போற்றிவா னவர்சே விப்போய் போற்றிமுக் குணங்க டந்தோய்
போற்றியுட் குகையு ளானே போற்றிமேற் கதியீ வானே
போற்றியெண் குணமார் செல்வ போற்றிகாம் பீர்ய தேவ.28

போற்றிமா மலையாள் பால போற்றியோம் மறையு ளானே
போற்றியோம் வைத்ய நாத குணாதீச போற்றி போற்றி

போற்றிசற் குணமுன் னோனே போற்றியோம் மலையா னானே
போற்றியோம் வனமா னானே பேற்றியோம் மறையா
னானே. 29

போற்றியோம் அகந்தை போக்கி போற்றிசற் குணம்பா
லிப்பாய்
போற்றியோம் அந்த ரங்க போற்றியோம் குணந்தேர் ஞானி
போற்றிகீ தங்கள் தேர்வாய் போற்றியோம் கவலே இல்லாய்
போற்றிசற் குணத்தின் சார்பே போற்றிபா வுரையா னானே. 30

போற்றிகண் ணியனே போற்றி புவிதொழு பவனே போற்றி
போற்றிவிண் டலசஞ் சாரி போற்றிநற் சரிதை யானே
போற்றியோம் கிலேச மில்லாய் சற்குண வாரி போற்றி
போற்றியோம் கருணா நோக்க போற்றியொள் ளொளிக்கு
வித்தே. 31

போற்றியோம் மேக நாத மணிநாதப் பிரிய போற்றி
போற்றிவெம் பாச மோச போற்றிவான் மழைமே லார்வ
போற்றிபே ரின்ப மானாய் போற்றியோம் வெம்மை வீட்டி
போற்றியோம் காந்தி மானே போற்றிகா னேனம் எய்தாய். 32

போற்றியோம் ஒளியாய் உள்ளாய் போற்றியோம் தயாள
மூர்த்தி
போற்றியோம் நாத ரூப போற்றிதைத் தியசங் கார
போற்றிமா செல்வம் சேர்ப்பாய் மழையுமுன் இரப்பாய்
போற்றி
போற்றிமா பலவ போற்றி போற்றிசைத் திரிக போற்றி. 33

போற்றிசித் திரமாம் வண்ண ஓய்விலா தியங்கி போற்றி
போற்றிசஞ் சலமாங் காந்தி போற்றிமெய்ஞ் ஞான மானாய்
போற்றிமெய்ஞ் ஞான ரூப ஞானவா நந்த போற்றி
போற்றியோம் நீடு வாழ்வாய் போற்றிசித் திரப்பொன்
னாடை. 34

போற்றிசித் திரப்பூ ணானே போற்றிசிந் திக்க நிற்பாய்
போற்றிநின் வியப்பார் செய்கை சோரரைக் களைவாய்
போற்றி
போற்றிமா சதுரா போற்றி பெருவனப் பாள போற்றி
போற்றிபொற் பூணாய் கோடி நிலாவெயில் ஒளியாய்
போற்றி. 35



போற்றியிந் தணிந்தோன் பால மறையுறுப் புருவ போற்றி
போற்றியோம் கபடம் நீக்கி பாசமுற் றொழிப்பாய் போற்றி
போற்றிபோக் கிருள்சேர் துன்பம் புகழ்குடை கவித்தாய்
போற்றி
போற்றிதா பந்த ணிப்பாய் பாற்கடல் கடைந்தாய் போற்றி. 36

போற்றிமுக் குணவ தீத போற்றிஆ சைகளில் லாதாய்
போற்றியோம் ஐயந் தீர்ப்பாய் வேதமாம் வடிவாய் போற்றி
போற்றிவே தத்தோ டேகி பாசசே தகனே போற்றி
போற்றியோம் பிரபா ரூப புவிக்கிதம் புரிவாய் போற்றி. 37

போற்றிமா ஞாலம் போற்றி உலகின்மா முதியாய் போற்றி
போற்றியோம் உலக மானாய் போற்றிமுற் றுலகின் தந்தாய்
போற்றிகங் கைக்குப் பால பகைவென்ற பகவ போற்றி
போற்றிசற் குருவே ஞாலத் துயர்வெற்றி விகிர்தா போற்றி. 38

போற்றிஐம் புலன்க டந்தோய் வெற்றியால் விளங்கி போற்றி
போற்றிமூப் பிறப்பில் லானே சோதியுட் சோதீ போற்றி
போற்றியோம் உலக நாத உலகைவாழ் விப்பாய் போற்றி
போற்றியோம் உயிர்க்கா தார உலகெலாம் தொழுதாள்
போற்றி. 39

போற்றியோம் உலகில் மேலோய் போற்றியோம் கிலேசம்
வென்றோய்
போற்றியோம் உலகுக் கீச சகம்பணி தலைவ போற்றி
போற்றியோம் கருத்தா வானாய் சான்றாகும் சால்ப போற்றி
போற்றியோம் உலகு வப்பாய் மகபதி பணிதாள் போற்றி. 40

போற்றியோம் சயமீ வானே மனோகர மாண்ப போற்றி
போற்றியா நந்தம் நல்கி மூடம்போக் கறிஞ போற்றி
போற்றிசெம் மலர்போல் வானே போற்றிகட் கினிய ரூப
போற்றியோம் சனங்கட் கீச போற்றிசோ பனனே போற்றி. 41

போற்றியோம் பிறப்பொ ழிப்பாய் வெற்றிதந் தருள்வாய்
போற்றி
போற்றியோம் உயிர்த்துன் பாற்றி போற்றிதா னவரைச் சாடி
போற்றியோம் வென்றி ஏறே சினம்வென்ற தீர போற்றி
போற்றியோம் செருக்கை வென்றோய் உயிர்கட் கோருறவ
போற்றி. 42

போறறிவெம் புயல்போல் வேக பந்தங்கள் அறுப்பாய் போற்றி
போற்றிவெவ் வசுரர்க் கேறே முழவொலிப் பிரிய போற்றி
போற்றிமெய்ஞ் ஞான மூர்த்தி ஞானியர்க் கணியாய் போற்றி
போற்றிமெய் யறிவ போற்றி ஞானமா நிதியே போற்றி.43

போற்றி''டங் கார''க் கூத்த கொடிவச்ர தரனே போற்றி
போற்றியோம் அகில தண்ட மலவிருட் கிரவி போற்றி
போற்றிமா மகிமை யானே அகங்கார ரூப போற்றி
போற்றியோம் துடிப்பி ரீத உடுக்கினின் னுரையாய் போற்றி.44

போற்றிபுள் துடியால் தோற்றி உடுக்கொலிக் குவப்ப போற்றி
போற்றிதா னவரச் சோட்டி போற்றிவா னவர்ச காய
போற்றிதுண் டீரர் தம்பி தத்துவத் தறிஞ போற்றி
போற்றிதத் துவத்தை யுற்றாய் போற்றிதீ விரனே போற்றி.45

போற்றியோம் தவசொ ரூப தபோமய னானாய் போற்றி
போற்றியோம் சுருதி ரூப முக்காலம் அறிவாய் போற்றி
போற்றிமும் மூர்த்தி யானாய் போற்றிமுக் குணமு மாவாய்
போற்றியோம் அமரர்க் கீச போற்றிதா ரகசங் கார. 46

போற்றிமுத் தாபந் தீர்ப்பாய் தாபதர்க் கினியாய் போற்றி
போற்றியோம் மகிழ்ச்சி நல்கி போற்றிநாம் மகிழ வைப்பாய்
போற்றிதீட் சணிய போற்றி மெய்த்தவ வேட போற்றி
போற்றிமுக் காலம் காண்பாய் உமாபதி துதியாய் போற்றி.47

போற்றிநாம் துதிக்க நிற்பாய் துதியுகந் தருள்வாய் போற்றி
போற்றியோம் துதியே போற்றி தோத்திர சொரூப போற்றி
போற்றிதோத் திரப்பி ரீத போற்றியோம் இறைவ போற்றி
போற்றியோம் தாணு போற்றி போற்றிதா பகனே போற்றி.48

போற்றியோம் தூல சூக்க பருமித உருவ போற்றி
போற்றியோம் விருத்த வேட போற்றியோம் தூல ரூப
போற்றியோம் எவைக்கும் ஈட போற்றியோம் திரனே போற்றி
போற்றியோம் நிலைபே றாள அடக்கம துடையாய் போற்றி.49

போற்றியோம் தயாப ரேச யாவையும் தருவாய் போற்றி
போற்றியோம் பவவி நாச அணுகுதற் கரியாய் போற்றி
போற்றிநாக் கழக போற்றி தயாநந்த ரூப போற்றி
போற்றிதே வாதி தேவ தயாநிதி யோனே போற்றி. 50



போற்றிதாழ் வுரையி லானே தெளியொணாத் தேவ போற்றி
போற்றிவல் லாள போற்றி பளிங்கெனும் படியாய் போற்றி
போற்றியோம் சுமைக்க டங்காய் தானசீ லத்தாய் போற்றி
போற்றியீ ராறு கண்ணா போற்றிகை யிராறுள் ளானே.51

போற்றிபன் னிருகா துள்ளாய் போற்றியீ ராறு கூற
போற்றியே ழையர்பங் காள போற்றியோம் சர்ப்பர்க் கீச
போற்றியோம் சவியு ளானே போற்றிபே ரெழிலா வானே
போற்றியோம் திவ்ய தேக போற்றியோம் அடக்க மாவாய்.52

போற்றியோம் நெடியாய் போற்றி நீண்டகைத் தலத்தாய்
போற்றி
போற்றிநீண் டழகார் கண்ணா போற்றியோம் சுவர்க்க நாத
போற்றியோம் தண்ட ரூப போற்றியோம் அடக்கி யாள்வாய்
போற்றியோம் பெருமை யாள தேவர்சிங் கேறே போற்றி.53

போற்றியோம் உறுதி நோன்ப பெறற்கரும் பேறே போற்றி
போற்றியோம் அடைதற் கெட்டாய் சுடருரு வினனே போற்றி
போற்றிகாண் பரிய ஈச போற்றிதிவ் வியபூண் பூணி
போற்றிமா வுதரற் கொன்றாய் துக்கங்கள் துரப்பாய்
போற்றி. 54

போற்றிதீப் பகையைக் கொல்லி போற்றியெண் டிசைக்கும் ஈச
போற்றிவெல் லரிய சூர தேவசே னேச போற்றி
போற்றியோம் அறியொ ணாதாய் கடந்திடற் கரியாய் போற்றி
போற்றியோம் அசனி ஏறே போற்றியோம் தருக்காய்
போற்றி. 55

போற்றிமா தவர்சி ரேட்ட சோதிடர்க் கீச போற்றி
போற்றிதே வரைவாழ் விப்பாய் எம்பரம் சுமப்பாய் போற்றி
போற்றியோம் தரும பால தனமருள் தாதா போற்றி
போற்றிதை ரியம்வ ளர்ப்பாய் போற்றிதர் மேச போற்றி.56

போற்றியோம் அறநூல் கண்டாய் வல்வில்லி என்பாய் போற்றி
போற்றியோம் தரும சித்த போற்றியோம் குபேர போற்றி
போற்றியோம் செல்வ நாத போற்றிவல் லாள தேவ
போற்றிபா தகங்கள் தீர்ப்பாய் தருமகா ரணனே போற்றி.57

போற்றியோம் தரும தீர தருமமே செய்வாய் போற்றி
போற்றியோம் தருமந் தேர்ந்தோய் உறுதியாய் உள்ளாய்
போற்றி

போற்றியோம் சிருட்டி கர்த்த மதிமிக வுள்ளாய் போற்றி
போற்றிதர் மானுட் டான சிறந்தசீ ராள போற்றி. 58

போற்றியெம் பரந்தாங் கீச போற்றியோம் விரத சீல
போற்றிநாள் விழாக்கொள் வானே நித்திய நிறைவா போற்றி
போற்றியோம் சலமி லானே குறையிலா நிறைவே போற்றி
போற்றியோ ருருவி லானே களங்கமி லானே போற்றி.59

போற்றிபற் றிலானே போற்றி மமதையில் லானே போற்றி
போற்றியோம் அகந்தை யில்லாய் போற்றியோம் மோக
மில்லாய்
போற்றிதொல் லைகளில் லானே நித்தியா நந்தா போற்றி
போற்றியா தங்க மில்லாய் நிர்ப்பிர பஞ்சா போற்றி. 60

போற்றிநோ யிலானே போற்றி குற்றமற் றவனே போற்றி
போற்றியா சைகளற் றோனே இணையிலி இறைவ போற்றி
போற்றியோம் சுத்த தேக மூப்பில்விண் ணவர்கோ போற்றி
போற்றியோம் சங்கை தீர்ந்தோய் கேள்விநூற் றுதியாய்
போற்றி. 61

போற்றிசத் துருவில் லானே போற்றிசார் பொன்று மில்லாய்
போற்றிவிக் கினங்க ளில்லாய் தான்தோன்றி ஈச போற்றி
போற்றிநித் தியனே நித்த கல்யாண ரூப போற்றி
போற்றிபே தகமில் லானே பற்றுக்கோ டிலாதாய் போற்றி.62

போற்றிநா யகனாம் ஈச நிதியமாய் நிறைவாய் போற்றி
போற்றிபற் பலவாம் ரூப சுரநதி சுதனே போற்றி
போற்றிவே டிச்சி காந்த புரம்பொடி படுத்தாய் போற்றி
போற்றியோம் பெரும்பற் றாள போற்றிகண் கண்ட தேவே.63

போற்றிகண் முன்னிற் பானே பரமேச போற்றி போற்றி
போற்றியோம் நிறைவாம் புண்ய புண்ணிய வித்தே போற்றி
போற்றிபுண் ணியப்பே றானாய் புண்ணியத் துருவ போற்றி
போற்றிபுண் ணியஞ்செய் ஊக்கம் புண்ணியத் தோற்றம்
போற்றி. 64

போற்றிமிக் குயர்ந்த சோதி புண்ணியம் புரிவோய் போற்றி
போற்றிபுண் ணியம்வ ளர்ப்பாய் பராநந்தப் படிவ போற்றி



போற்றிமே லவர்க்கு மேலோய் புண்ணியப் புகழோய்
போற்றி
போற்றிமுன் னவர்முன் னோனே உவப்பருள்
உருவ போற்றி. 65

போற்றியோம் பிராண நாத போற்றிகா லிலாத சர்ப்ப
போற்றிகா லுணாக்கொள் நாக தொழும்பர்துன் பொழிப்பாய்
போற்றி
போற்றிபூ ரணனே போற்றி பார்ப்பதி பாலா போற்றி
போற்றியோம் பிரபு போற்றி சுத்தான்ம சொரூப போற்றி.66

போற்றியோம் புருட போற்றி போற்றியோம் பிராண ரூப
போற்றிகா ரணனே போற்றி புருடோத்த மனேயோம்
போற்றி
போற்றியோம் அருள்செய் சேயே தெளிந்ததூ வொளியே
போற்றி
போற்றிவித் தகனே போற்றி சகஞ்சூழும் தலைவ போற்றி.67

போற்றியோம் பரமா போற்றி பரமான்ம நாத போற்றி
போற்றியோம் பரம்ப ரேச பரோப காரா போற்றி
போற்றிகாண் பினிய மூர்த்தி தூயனே போற்றி போற்றி
போற்றியூட் டுதவு வோனே அறவினை யானாய் போற்றி.68

போற்றிசெவ் வண்ணா சேந்தா ஊட்டங்கள் வளர்ப்பாய்
போற்றி
போற்றியோம் மறங்கள் மாற்றி பாசபா ணியனே போற்றி
போற்றியோம் செருக்க ரக்கர்க் கசனியே தீர்த்தா போற்றி
போற்றிமுத் தீயாந் தேவ பூசனைக் குரியாய் போற்றி. 69

போற்றிபூ ரணவா நந்த முழுமுதற் பொருளே போற்றி
போற்றியோம் நிறைவே மேலாம் பரமேட்டி போற்றி போற்றி
போற்றியோம் தொன்மை யானே தந்தைதாய்ப் பேணி போற்றி
போற்றிமுன் துணைசெல் வானே உயிர்ப்பருள் பவனே
போற்றி. 70

போற்றியெவ் வுயிர்க்கும் தந்தாய் நாட்டுமா ணையனே போற்றி
போற்றியங் கியிலு தித்தோய் பரம்பொருள் வடிவ போற்றி
போற்றிமா நிதிக்கு வித்தே நிதிமிக வளர்த்தாய் போற்றி
போற்றியோம் ஊட்ட மாக்கி ஒளிவளர் விளக்கே பேரற்றி.71

போற்றியோம் வரப்பிர தாப அறிவறி அறிவ போற்றி
போற்றியோம் தலையாஞ் செல்வ வியாபக போற்றி போற்றி
போற்றியோம் அடல்மிக் கோனே சேடனாய்த் திகழ்வாய்
போற்றி
போற்றிநா கேச நாக ரத்தினப் பூணா போற்றி. 72

போற்றிநற் பலன்கள் நல்கி பலன்கைமேற் காட்டி போற்றி
போற்றிபூங் கண்ணா பாவம் ''பட்''டெனப் பறைவாய்
போற்றி
போற்றிபா தலர்கள் சூட்டே நீண்டகைத் தலனே போற்றி
போற்றிபே ரண்ட ரூபா அதிபல வானே போற்றி. 73

போற்றிவல் லமையி னானே வலியர்மேல் வலியாய் போற்றி
போற்றியோம் அயன்மா லீச மதிதரு மதியே போற்றி
போற்றிமா மதியர் மேலோய் போற்றிகோ மளக்கு ருந்தே
போற்றிபே ரண்ட சூலி மாணியாம் மணியே போற்றி.74

போற்றிவித் தகர்வி னோத போற்றியோம் கேள்வி மேலோய்
போற்றியோம் மதிப்பு மிக்கோய் பூசுரர்க் கினியாய் போற்றி
போற்றிபூ சுரர்ச காய போற்றிமா வலனைச் சாடி
போற்றியோம் பிரம மானாய் பரப்பிரம பிரானே போற்றி.75

போற்றிதிக் கிசைசீ ராள வெந்தீவித் துதித்தாய் போற்றி
போற்றிமா தானை யானே பிலத்துக்கண் வளர்வாய் போற்றி
போற்றியெண் ணிலவாந் தோள பலத்திரு வாள போற்றி
போற்றி பல்லசுரர்க் காய்ந்தோய் பிலத்திடை உறைவாய்
போற்றி. 76

போற்றிமா வேல்வில் ஏந்தி இளவெயி லொளியாய் போற்றி
போற்றியோம் இளங்கு மார போற்றியான் றமைந்த மார்ப
போற்றிமா காய வானே போற்றியோம் சுகசொ ரூப
போற்றியிந் திரற்கு மீச எதிர்கொளும் விளைவே போற்றி.77

போற்றியோம் பாச மோச பவசிவப் பிரிய போற்றி
போற்றிபத் தியினார் பேறே பயங்கெடுப் பவனே போற்றி
போற்றியெம் முளக்கோள் தேர்வாய் நச்சினார்க் கினிய
போற்றி
போற்றியோம் பத்தி முத்தி பாலிப்பாய் போகி போற்றி.78



போற்றியோம் பகவ செல்வ பாக்கியம் வளர்ப்பாய் போற்றி
போற்றியோம் மிளிர்கின் றோனே பாவனை மனத்தாய்
போற்றி
போற்றியோம் அனைத்தும் தாங்கி அஞ்சுதற் கமைந்தாய்
போற்றி
போற்றியச் சுறுத்தும் சத்தி பூதிதந் தருள்வாய் போற்றி.79

போற்றியோம் பூதி பூப்பாய் பயன்நுகர் பவனே போற்றி
போற்றியைம் பூத மானாய் புவனநா யகனே போற்றி
போற்றிமங் களவ சர்வ பாக்கியம் விளைப்பாய் போற்றி
போற்றிமா மருந்த சுத்த சோபனர் துணைவ போற்றி.80

போற்றியோம் பரன்கு மார பிறவிநோய் தணிப்பாய் போற்றி
போற்றியூட் டியவுற் றுண்ணி பிறப்புய்த்து மீட்பாய் போற்றி
போற்றிபோக் கியங்க ளீவாய் மருட்கையைத் தெருட்டி போற்றி
போற்றிசூ ரியனா யுள்ளாய் புவனிக்குப் புகலே போற்றி.81

போற்றிவேண் டுறுதி யீவாய் நன்றுடை யானே போற்றி
போற்றியோம் பரவற் பாலாய் பரிகார வரனே போற்றி
போற்றிமாச் சேனை நாத பெருங்கொடை வள்ளால் போற்றி
போற்றிபே ராற்ற லாள போற்றிபே ரொளியு ளானே.82

போற்றிமா புத்தி மானே பெருந்திற லான போற்றி
போற்றியுற் சாகம் மிக்கோய் மகாபல சாலி போற்றி
போற்றியோம் நிறைந்த போக மாமாயை யுடையாய் போற்றி
போற்றிமே தாவி லாச அரவரை ஞாணா போற்றி. 83

போற்றியோம் மகத்தா யுள்ளோய் முனிவரர்ச் சிதனே போற்றி
போற்றியான் றோர்தம் போற்றாய் மகாநந்த முள்ளாய்
போற்றி
போற்றிமா கீர்த்தி மானே திறமைமிக் கவனே போற்றி
போற்றிநன் மதிப்பார் செல்வ வேண்டும்பே றளிப்பாய்
போற்றி. 84

போற்றிநா முச்சி மேற்கொள் புனித! புண் ணியனே போற்றி
போற்றிமா பலமார் தீர மதிப்பருள் மஹானே போற்றி
போற்றியோம் மாலை மார்ப மதிதரு மதியாய் போற்றி
போற்றிமுத் திலங்கு மார உளங்கவர் கள்வ போற்றி. 85

போற்றியோம் நிதிக்கி ழானே எமக்கின்றி யமையாய் போற்றி
போற்றிகா ரிகையார் ரூப போற்றிமா முனிவ ரேச
போற்றியுத் தமர்சி ரேட்ட மாற்றரும் உபாய போற்றி
போற்றியீந் தருள்வாய் போகம் வழங்குமங் களனே
போற்றி. 86

போற்றியோம் முதவா கார வீடருள் விமல போற்றி
போற்றியோம் மஹாபோ கேச பாந்தளாம் படிவ போற்றி
போற்றியீட் டிசையாய் போற்றி போற்றிகுண் டலியாம் சேட
போற்றியோ கியர்தம் யோக துகளிலாத் துறவ போற்றி.87

போற்றிபே ரிசையி னானே போற்றியோம் யோக மூர்த்தி
போற்றிதக் கவரின் மிக்கோய் யோகமாச் செல்வ போற்றி
போற்றியோம் இயம முள்ளாய் துறவர்வந் திதனே போற்றி
போற்றியோம் யோக யோக! யோகந்தேர்ந் தவனே போற்றி.88

போற்றியோ கசித்தி யீவாய் போற்றியந் திரமா யுள்ளாய்
போற்றியந் திரத்தி னுள்ளாய் போற்றியந் திரந்தேர்ந் தோனே
போற்றியந் திரமுள் ளானே போற்றியந் திரத்தால் தாங்கி
போற்றிமாத் துயர்க ளில்லாய் போற்றியோம் யோக
போற்றி. 89

போற்றியோ கேச போற்றி வரயோக துங்க போற்றி
போற்றியோம் அழகி யோனே போற்றியா ரழகு ரூப
போற்றியோம் சுவைதெ ளிந்தோய் தெவிட்டாத சுவையாய்
போற்றி
போற்றியோம் இனிய வார்த்தி இன்பூட்டப் பெறுவாய்
போற்றி. 90

போற்றியோம் ஆசை யானே மனக்கினி யவனே போற்றி
போற்றிசங் கரர்கு மார போற்றியோம் போர்வி ருப்ப
போற்றியூ ராண்மைப் போராய் நசைவெறுப் பறுப்பாய் போற்றி
போற்றிமா மணிபோல் வண்ண மனோரம்ய மூர்த்தி
போற்றி. 91

போற்றிபே ரழகு பிம்ப இரத்தினாங் கதனே போற்றி
போற்றியோம் மணிப்பூண் பூணி போற்றியோர் வளரு ரூப
போற்றியோம் சுவையுண் டாக்கி சுவைப்புறு சுவையே போற்றி
போற்றியோம் மகிழ்வூட் டுற்றோய் போற்றியோம் பிணிநோய்
சிந்தி 92



போற்றிதா மரைநேர் கண்ண இராசாதி ராச போற்றி
போற்றிசெவ் வணியா ரத்த போற்றிமூ வேதம் போற்றி
போற்றிமுக் குணத்தி ணைந்தோய் போற்றிவெண்
ணிலவேர்க் கோலம்
போற்றிகுண் டலப்பூண் சோபை மணிமுடிக் காந்தி போற்றி.93

போற்றிகிண் கிணிபூண் பாத உலகுக்கோர் தலைவ போற்றி
போற்றிமூ வுலகுக் கீச கோமள குமார போற்றி
போற்றிநா யகனே எம்மான் அனைத்தையும் காப்பாய் போற்றி
போற்றிசிட் சிக்க வல்லோய் உலகெலாம் உவப்பாய்
போற்றி. 94

போற்றியோம் உறவ எல்லாம் படைத்தருள் பவனே
போற்றி
போற்றிமூ வுலக சாந்த சிரோமணிச் சீர போற்றி
போற்றியெவ் வுலகும் போற்றி போற்றிகா மருசீர் ரூப
போற்றிலீ லாவி நோத உலகுடை முதல்வ போற்றி. 95

போற்றியுத் தமகு ணத்த வரதுங்க போற்றி போற்றி
போற்றியோம் வரத ராச பிணிகடீர் வைத்ய போற்றி
போற்றியோம் விசிட்ட யாவும் தெறவல்ல திறலோய் போற்றி
போற்றியோம் பெருமாள் போற்றி விபுதர்முன் விரைவாய்
போற்றி. 96

போற்றிநம் வசமா வானே விகற்பமி லமல போற்றி
போற்றிபந் தனையில் லானே போற்றியோம் துயர்நோ
யில்லாய்
போற்றியோம் விசித்தி ராங்க சூரிய சோதி போற்றி
போற்றிவித் தியாத ரேச சுத்தான்ம சொரூப போற்றி.97

போற்றிவே தாங்க மானாய் விபுதர்க்கு விருப்ப போற்றி
போற்றிவார்த் தைகளை ஆக்கி வியாபக விமல போற்றி
போற்றிவித் தகவிஞ் ஞான வினயமுள் ளவனே போற்றி
போற்றிவித் துவசி ரேட்ட தெவ்வடு திறலோய் போற்றி.98

போற்றிவீ ரேச போற்றி ஆசையற் றவனே போற்றி
போற்றியோம் பிறப்பி லானே போற்றியோம் வணக்க
முள்ளோய்
போற்றியோம் வேத மோதி செல்வமீ செல்வ போற்றி
போற்றிதே சருளும் தேச போற்றியோம் விசால நோக்க. 99

போற்றியோம் உயர்வே உள்ளி மனம்வசப் படுத்தோய் போற்றி
போற்றிநற் சுவாதீ னத்தாய் வேதவேத் தியனே போற்றி
போற்றியோம் துரிசில் லானே வேதவித் தகனே போற்றி
போற்றியோம் விசுவ கர்ம போற்றியோம் பயமில் லானே.100

போற்றிவா கீச போற்றி வாசவன் பணிதாள் போற்றி
போற்றியோம் செறுநர்த் தேய்த்தோய் வியாபக விசுவ போற்றி
போற்றியோம் விசுவ ரூப போற்றிசீ ரிருக்கை யானே
போற்றியோம் விசாக போற்றி விமலனே போற்றி போற்றி.101

போற்றிநல் வாக்கு வல்லோய் வித்துவ சிரேட்ட போற்றி
போற்றியோம் வேத பார போற்றியோம் பிரம சாரி
போற்றிவீ ரியர்மேல் வீர போற்றியோம் வீர தீர
போற்றியோம் வித்தி யேச அமரரா சிரய போற்றி. 102

போற்றியோம் விசய துங்க போற்றியோம் விநயம் மிக்கோய்
போற்றியோம் அறிஞ ரேறே சீரியோய் போற்றி போற்றி
போற்றிரா சதமில் லானே போற்றியோம் வசுக்க ளானாய்
போற்றிவீ ரரைவெல் வீர போற்றியோம் வெம்மை
யில்லாய். 103

போற்றியோம் அறியத் தக்காய் வேகமிக் கவனே போற்றி
போற்றிவீ ரியமிக் கோனே எமைவசஞ் செய்வாய் போற்றி
போற்றியோம் சிறந்த சீல வரகுணாட் டியனே போற்றி
போற்றியோம் விடுத்த சோக குலிசபா ணியனே போற்றி.104

போற்றியோம் சத்தி ஏந்தி சரவண பவனே போற்றி
போற்றிதெவ் வரைத்தேய் தீர போற்றிமா மயிலூர் வானே
போற்றியோம் சீரார் சிட்ட திருவாளர் திலக போற்றி
போற்றியோம் வாலி யோனே சுத்தனே போற்றி போற்றி.105

போற்றிசா சுவத மூர்த்தி வேதசா கரனே போற்றி
போற்றியோம் புகலா வானே சுகமருள் சுகுண போற்றி
போற்றியோம் சுகசொ ரூப சிட்டருட் சிட்ட போற்றி
போற்றியோம் சாந்த நல்ல இலக்கண மமைந்தாய் போற்றி.106

போற்றியோம் சூல பாணி உத்தமோத் தமனே போற்றி
போற்றிதூ மனத்து மாண்ப சங்கரா போற்றி போற்றி
போற்றியோம் சிவசொ ரூப போற்றியோம் சிவகு மாரா
போற்றிதூ ரருக்குச் சூர சாந்தியீ பவனே போற்றி. 107



போற்றியோம் சோகம் கொல்லி அறுவரன் னையனே போற்றி
போற்றியோம் அறுமு கேச அறுகுணச் செல்வ போற்றி
போற்றிசட் சக்கிர வாச துயரநோய் துடைப்பாய் போற்றி
போற்றிவே தாங்க பார பிராயமா றிலாதாய் போற்றி.108

போற்றியோம் ஆறா யுள்ளாய் போற்றிசாத் திரவே தஞ்ஞ
போற்றியா றெழிற்க ழுத்தாய் பகையாறுய்த் தழிப்பாய் போற்றி
போற்றியோம் பகையா றட்டோய் ஆறுக்கும் அடைவே
போற்றி
போற்றியா றாதா ரத்தாய் திருமுடி யாறா போற்றி. 109

போற்றியோம் கிரம மாறாய் அறுகோணத் தகத்தாய் போற்றி
போற்றிபே டலிதீர்ப் பானே சேனைநா யகனே போற்றி
போற்றிசௌ பாக்கிய வானே போற்றியோம் கந்த சாமி
போற்றியோம் சுரர்க்கா நந்த சாதுக்கள் சார்பே போற்றி.110

போற்றியோம் சுப்பிர மண்ய சுரர்க்கதி பதியே போற்றி
போற்றிமுற் றறிவ போற்றி போற்றிமுற் றருள்வாய் போற்றி
போற்றியோம் சுகமுள் ளானே நச்சினார்க் கௌியாய்
போற்றி
போற்றியோம் அருள்வாய் சித்தி; சித்திசா தனனே
போற்றி. 111

போற்றிசித் தார்த்த என்றும் சித்திசங் கற்ப போற்றி
போற்றியோம் சித்த மானாய் போற்றியோம் சாது போற்றி
போற்றியோம் வரசு ரேசா சந்தமார் தோளாய் போற்றி
போற்றியா வையும றிந்தாய் கரியெனக் காண்பாய்
போற்றி. 112

போற்றிநல் வரப்பிர சாத என்றுமுள் ளவனே போற்றி
போற்றியோம் அமிர்த நாத போற்றியோம் சுயம்பிர காச
போற்றியோம் சுயம்பு நாதா முகமெங்கு முள்ளாய் போற்றி
போற்றிசா மர்த்திய வானே உபசரிப் புறுவாய் போற்றி.113

போற்றிநுண் ணியனே போற்றி போற்றியின் முகமே காட்டி
போற்றிமுற் றின்ப மூட்டி போற்றிநல் லெண்ணத் தோழ
போற்றியோம் மிகம கிழ்ந்தோய் தேவரிற் சிறந்தோய் போற்றி
போற்றியோம் சுசீல மாறா வாய்மைக்கு வலியே போற்றி.114

போற்றிநன் மதிப்பு மிக்கோய் தூயர்சே விப்பாய் போற்றி
போற்றியா கமநூல் தேர்ந்தோய் தெளிவரும் தெளிவே போற்றி
போற்றிவீ ரரிற்சி ரேட்ட சச்சிதா னந்த போற்றி
போற்றிசற் சனர்தம் சார்பே சகலலட் சணனே போற்றி.115

போற்றிமெய்த் தருமா சார போற்றிமுற் றமரர் ரூப
போற்றிசத் துவனே என்றும் சுவையுணா உதவி போற்றி
போற்றிசீர் மிகுவில் லாள போற்றிநன் மதிமிக் கோனே
போற்றிசத் தியனே சர்வ விக்கின விநாச போற்றி. 116

போற்றியெத் துயரும் சிந்தி சுகுமார போற்றி போற்றி
போற்றிசீ ராருங் கண்ட சுலோசன போற்றி போற்றி
போற்றிசீ ரிலங்குஞ் சென்னி சாரமாய்த் திகழ்வாய் போற்றி
போற்றியோம் விண்ணோர் வேந்தே சுராரியர்த் தெறுவாய் போற்றி. 117

போற்றிவிக் கிரம எல்லா எழுத்துமாய் நிற்பாய் போற்றி
போற்றிசர்ப் பேந்திர ரூப ஏழ்நாவன் புதல்வ போற்றி
போற்றிதே வேந்திர எல்லாப் படையுங்கை தேர்ந்தாய் போற்றி
போற்றிமுற் றுலகோர் நாத சிவபூசைப் பிரிய போற்றி.118

போற்றிவெண் கரியான் போற்றாய் கரியுரித் தவன்சேய் போற்றி
போற்றியோம் மலங்கள் மாய்ப்பாய் கரசித்திரா யுதனே போற்றி
போற்றியோன் மணிப்பூ ணானே மலர்தரு வதன போற்றி
போற்றியோம் பசுமை வண்ண மாமகிழ் வருளி போற்றி.119

போற்றிமா மகிழ்வுக் கூற்றே குன்றெளி திருத்தாய் போற்றி
போற்றியோம் ஹம்ச ''ஹூம்''என் றழித்தியே பாவம் போற்றி
போற்றியோம் கிரிசை பால அரிதிரு மருக போற்றி
போற்றியோம் இரண்ய ரூப மனத்தகத் தானே போற்றி.120

போற்றியோம் களிப்பு ளானே போற்றியிந் திரன்ச காய
போற்றியோம் ஹம்ச மந்திர ஹம்சத்தின் நடையாய் போற்றி



போற்றியோம் அவியா யுள்ளாய் பொன்வண்ணத் துருவ போற்றி
போற்றியோம் இதஞ்செய் வானே களிப்பருள் களிப்பே போற்றி. 121

போற்றிபொன் னணியா ராக சிவன்மகிழ் மதலாய் போற்றி
போற்றியோம் இதமே ஈவாய் பாசமுற் றறுப்பாய் போற்றி
போற்றியோம் சிவன்பால் வந்தோய் சேமமா யிருப்பாய் போற்றி
போற்றியோம் சேமம் செய்வாய் சேமத்துக் குரியாய் போற்றி. 122

போற்றிசேத் திரந்தேர்ந் தோனே உலப்பிலா ஒருவ போற்றி
போற்றியோம் சேத்திர பால பொறையினா தார போற்றி
போற்றியோம் சேம சேத்திர பொறையின துறைவே போற்றி
போற்றிபூ ரியரைக் கொல்லி பொறையருள் பொறைய போற்றி. 123

போற்றியோம் சேம மானாய் புவனபூ டணனே போற்றி
போற்றியோம் பொறையின் சார்பே புன்பவம் பொடிப்பாய் போற்றி
போற்றியோம் குன்றிப் போனார் குடிதழை விப்பாய் போற்றி
போற்றிமின் கற்றை நேர மிளிர்சடை விமல போற்றி.124

போற்றியோம் மலைமான் கஞ்ச முகமலர்க் கருண போற்றி
போற்றியோம் ஒன்பான் வீரர் படைத்துணை உடையாய் போற்றி
போற்றியோம் இன்னா நீக்கி! ஊழிகண் டுறைவாய் போற்றி
போற்றியோம் துரிசி யாவும் தூளிசெய் தூய போற்றி.125

போற்றியோம் வெப்ப சாந்தி! சந்திர வதன போற்றி
போற்றியோம் மனோவே கப்பொற் சித்திரத் தேரூர் வோனே
போற்றியோம் க்ருபா கார குமரவேள் போற்றி போற்றி
போற்றியோம் வள்ளி தேவ குஞ்சரி மணாள போற்றி.126

## பயன் வேண்டல்

கேதனமங் குசம்குலிசம் அபயம் கோல்வேல்
கிளர்வரதம் மணிமழுபூ கதைவில் தாங்கி

மாதவன்கண் மணிமகளிர் இருபால் மன்ன
மயிலேறி மலர்முகமும் கண்ணீ ராறும்
போதனதா ளிணையுகமும் பொலிய வெய்திப்
புகலும்பே ராயிரமும் போற்று வேமைக்
கோதகல உய்வழியிற் கூட்டிச் செல்லாய்
குகனேசற் குருநாத குமர வேளே.

**ஆறுமாமுகன் அருட்பேராயிரம் முற்றிற்று**



உ

# அருணை ஆற்றுப்படை

## சி. அருணைவடிவேலு முதலியார்

### காப்பு

#### நேரிசை வெண்பா

அருளருணை யண்ணறனை யாற்றுப் படையாம்
பொருண்மருவு பாடலினாற் போற்றத்—தெருண்மருவு
மிக்கவள மாமுகத்தான் மேவியடி யார்க்கருளைங்
கைக்கவள மாமுகத்தான் காப்பு.

### நூல்

கார்வரு வான மேர்பெறப் புனைந்த
சீர்தரு முத்திற் றிகழ்மீ னடுவட்
பான்மதி கிடந்த பான்மைத் தாகி
நிலவரை மருங்கிற் குலவரை நாப்பண்
வாலொளி யானாது வயக்க மாண்ட

கயிலை மால்வரைக் கடவுட் கண்டாங்
கியல்வர வணிந்த வெழில்வெண் ணீற்றொடு
துயல்வர விட்ட கண்டித் தொங்கலன்
வெஞ்சுட ராழி பிறவயிற் றோன்றினுந்
தண்சுடர் மண்டிலம் வெய்துபட் டெறிப்பினு

மாரி மறுப்பினும் வாரிவறங் கூரினு
மசைவின் றமர்ந்த வுள்ளத் தாங்க
ணசைவர மலர்ந்த நகைவாண் முகத்தன்
பெருநீர் ஞாலம் பிறிதுகுடை செல்லா
தொருகுடை வைத்த வுரவோ ராயினும்

வழிமொழி யறியா வாயின னீங்கிவன்
றுறவோன் போலும் மென்னிற் சூழ்ந்த
வுறவோர்க் காகிய வொக்கல் வாழ்க்கைய
னதா அன்று
வேறுபடு பன்மலர் மலர்ந்த வல்லியிற்

பொன்னு மணியு முத்துந் துகிரு
மின்னுபு கிடந்த விளங்கிழை மடந்தைதன்
மென்றோள் பிரியாது மேவலு முடையன்
குதலைத் தீஞ்சொற் புதல்வர் தந்தை
தேம்பாது பெற்ற செல்வந் தேம்புநர்க்

கோம்பாது வீசி யுவந்த கொள்கையன்
யாரிவ னென்னத் தேரிய செல்லாய்
பன்மாண் மருண்டு நோக்கி வினவு
நுண்மாண் கேள்வி நுழைபுலத் தொருவ
நின்னோ ரனையனே யானு முன்ன

ரும்மைத் தொடர்ந்த வுழுவ லன்பி
னிம்மை யொன்றிய வுளத்தி ராதலிற்
புணர்த்த பால்வழிப் புணர்ந்த கற்பி
னெணத்தகு மரபி னெண்ணருங் குணத்தி
னின்னுயி ரல்லது தன்னுயி ரறியா

வின்னுயி ராகிய விசையில் லாட்டியொ
டொருமைச் செய்த வெழுமைப் பேற்றின்
விழுநற் பண்பின் விளங்கிளஞ் சிறாஅரும்
பழுத்த காலைப் பழுமரந் துவன்றி
விழுத்த காலை வேறுபடு புள்ளிற்

செல்வக் காலத்துச் செறிதரச் சேஎர்ந்
தல்லற் காலத் தறுந ராகாது
வாழ்வின் வாழ்ந்து தாழ்விற் றாழ்ந்து
சூழ்விற் றீராச் சுற்றமு மென்றிவர்க்
கைவீ டெண்ணல் கடவ தென்னாய்

மெய்வீ டெண்ணும் வேட்கையுந் தவிராய்
பொய்விடு நன்னூற் புலத்தை யாதலி
னதனா



னாரா வாழ்க்கை யசைவறச் செலீஇப்
பேரா வாழ்க்கையும் பிழையா தெய்திய

நல்குநர்ப் படர்ந்து பல்வயிற் பெயர்ந்
தல்கலு மல்கி யொல்குங் காலை
மறுபொழு தில்லென வொருபொழு துண்ணா
னிருபொழு திழந்த வேழை யாளனுஞ்
செறியிதழ்ப் பொலிந்த செவ்வி நோக்கான்

மறைநிலங் கிடந்த வான்சே றுன்னி
நறுமலர் கடியு நயனி லாளனு
மான்றிடை நாறிய வருமை பேணா
னூன்பொதி வுற்ற வொன்றஃ துன்னி
மான்மதம் வெறுக்கு மாண்பி லாளனு

மெழிலுற விளங்கு மியல்பு காணா
னிழிவுறு மண்ணென் றினிய பாவையைப்
பழிபல மொழியும் பண்பிலா ளனுமென்
றினையோர் போலு நினைவின் மாக்கண்
மயிலேர் சாயன் மதைஇய நோக்கத்

தயிலே ருண்க ணரிவையர்ச் சேர்ந்தவர்
காண்டகு நல்லெழில் வேண்டுறக் கண்டு
மந்தீங் கிளவி முந்துறக் கேட்டுங்
கனியித ழமுத நனிநயந் துண்டுங்
குழன்முத னாற்றம் விழைவின் மோந்து

மெல்லிய லாகம் புல்லத் தீண்டியும்
பஞ்சிற் றூவியிற் பண்ணிப் பன்மலர்
விஞ்சுபு கிடந்த விரிமெல் லணைமே
லோத லொல்லா வூடலி னாங்கவர்
கோதை கோலாக் கோளலைப் புண்டுபிற்

சீறடி பன்மாண் செவ்விதிற் பணிந்து
கூறுபன் மாயக் கூற்றினி னுணர்த்திப்
பணைத்தோண் முயங்கிப் படியுமின் பக்கட
லெனைத்தோர் பொழுது மெய்தா ரவரைப்
புழுப்பொதி மூடை வழுப்படு நிணக்குழி

நெய்த்தோ ரூற்று நிறைமலக் குரம்பை
நொயின் வாயி லேஎஎ னவிகழ்ந்துந்
துப்புர வெவையு மெய்ப்பட நல்கும்
பொற்புறு விக்குஞ் சொற்செல விடுக்குங்
குலநல முதலாப் பலநல மளிக்கு

நிலம்புர வலரொடு கலந்துற வாக்கு
மன்புகழ் நிறுக்கும் வன்பகை தெறுக்கு
மின்பொருட் பெருமை யிறையு மெண்ணார்
நில்லா தகல்வது புல்லோர் மகிழ்வது
வன்புற் றெழுதருந் துன்பப் பிறவி

யச்சத் துறவு துச்சமென் றிகழ்ந்து
மூட்டிப் புரக்குநர்க் குறுதி யாகி
வேட்டன துய்ப்ப மிகுதுணை யாயுறு
மரும்பெறல் யாக்கைய தருமை யுன்னா
ரிரும்பொறை யூன்பொதி யிழுக்குடைப் புழுக்கூ

டெள்ளற் பிணிச்செறு பொள்ளற் சிறுகல
நீரிடை மொக்கு ணிகழ்மின் னுருவம்
யாரிது வேண்டுவ ரென்றரு வருத்தும்
பெற்ற வின்பம் பேணாது விடுத்து
மற்றை யின்ப மாண்பெனக் கொளாஅக்

கற்ற கல்வியிற் கனவிய வீடு
மாள்வினை யதுவே யருநிதி யென்னார்
தாள்வினை மறந்து கோள்வினை குறித்து
முயலா மாந்தர் முயலுநர் நெஞ்ச
மயலா கென்ன வகுத்தபல் கொடையும்

வலியின் மாக்க ணலிவுபிற ரஞ்சி
மெலிவின் வகுத்த வேறுபன் னிரையமு
நிலமிசை யின்ப நிரம்பத் துவ்வா
தலம்வரு மிடியரு மருநோ யாளரும்
விரைவன ரெய்திய நரைமூ தாளரு

மனக்கோள் சென்ற வழியெலாம் வழியாக்
கனக்கோள் கொண்டு கட்டிய துறக்கமு
மாயந் தாமென மதியாய் வாயென



நீயுந் தெளிதி போலா நீயினி
மறுமை நோக்கி மனங்கவ லாதிவ

ணுறுநல மெய்து மொன்றுபுரி யுள்ளத்துக்
கலைபல வல்லா யாயின் விலைபெறச்
சிலபல வின்பச் செய்யுள் யாத்தும்
வழக்குரை வல்லா யாயின் முழக்குற
விழைப்பில் பொருணெறிக் கெய்துவ பகர்ந்து

மந்திரம் வல்லா யாயி னந்திற்
செந்திரு மன்னர்க்குச் செறிதுணை யாகியும்
வாள்வினை வல்லா யாயி னவர்க்குத்
தாள்வினை நின்று தருவலந் தந்துமற்
றெவ்வினை யெவ்வினை வல்லா யீங்கிவ

ணவ்வினை யவ்வினை யரும்பயன் கொண்டு
மரும்பொரு ளென்ப பெரும்பெரி தீட்டி
யிரும்பே ரொக்கலொ டினிதுறை மதியென
மெல்லியர் சொல்ல நல்ல வென்னா
யில்லிடை மகாஅ ரிருமுது குரவரை

யட்டன வுண்டாங் கமர்ந்துவிளை யாடல்
பெட்டனி ரிராது பெயர்ந்துபன் முயல்விற்
சென்றுநனி யுழந்து துன்றிய விடும்பை
யொன்றுத லெவனோ வுரைமி னென்னு
நிரம்பா மென்சொலொ டொக்கு மீங்கிவ

ருரஞ்சால் பில்லா வுரையென வுண்ணகு
பாக வாக வாங்கென வவர்க்குப்
போக மொழிந்து புரைகிளைத் தியங்குழி
யிவறலும் புகழு மிரண்டுடன் கொளீஇயர்
கவலுறு மவரிற் கவர்த்தோய் கேளிவண்

வெயிலென மடியாது பனியென முனியாது
துயிலென நினையாது துன்பநனி யுழந்து
மெய்க்குறு மின்பம் வெறுத்தோர்க் கல்லது
கைப்பொரு ளெய்துங் காட்சியோ வின்று
செருக்கு மானமுஞ் சேட்செல விடுத்துப்

பொருட்குறு மருமை போற்றாது சென்று
பிற்றைநிலை முனியாது பெற்றன கொடுத்துக்
கற்றோர்க் கல்லது கல்வியு மின்றே
ஆங்க
வில்லிடை யுறையார் நல்லுடை யுடாஅர்

பல்லவை நுகரார் மெல்லணை கிடவார்
காமந் துவ்வா ரேமங் கொளாஅர்
காடு மலையும் பீடென வடைந்தாங்
கடகு நீரும் வளியு மயின்றும்
படுபவு முண்ணார் பட்டினி யாகியும்

வேனிற் காலத்து வெயிலினும் வீழ்பனி
மாரிக் காலத்து நீரினு நின்று
நோற்றோர்க் கல்லது மேற்செல வின்றே
யதனா
னிம்மை யின்ப மெனைத்து நோக்கா

யம்மை யொன்றே யகத்துற வலியா
மக்கண் மனையோ டொக்கல் வாழ்க்கை
சிக்கென விடுத்துச் சேணிடை யகன்றீண்
டுடம்படுஞ் செய்திக் கொருசிறி துன்னாது
கடம்படுஞ் செய்தி காத்தனை யிருந்து

வினைகெட வெழுபு மேன்மே லுயர்ந்து
நினைவரு முலகத்து நீடுவாழ் மதியென
வுலகொடு முடலொடு முடலுஞ் செய்திச்
சிலதெரி குநர்தெரி செப்புங் கேளாய்
நல்லோர் தமக்கு நல்ல வாகிமற்

றல்லோர் தமக்கிங் கல்ல வாகு
முடம்பியல் பிற்கவ ருணர்வுகரி யாகவு
முடம்பினை யொறுக்கு மொன்றுமுன் றுணித
னல்கூர் மாக்க ளொல்கும் பசிக்கிங்
குப்பில் புற்கை யுண்ணா துகுப்பி

னொப்பி லறுசுவை யுண்டியுண் டாகலு
முவலைக் கூரை யொள்ளெரி யூட்டிற்
றவலரு மாடந் தகவிற் பெறுதலு



மேணியை யிறுப்பி னேறச் சேறலுந்
தோணியைச் சிதைப்பிற் சுழிநீர் கடத்தலு

முளவா மென்னு மளவைய தாகலின்
வளனோ வின்றிவர் மாற்றமென் றுன்னா
வுணர்வ லுணர்வனும் முரையென வவர்க்கும்
புணர மொழிந்து போயினை யாதலிற்
கேளினி வாழியோ கேண்மைகொ ணெஞ்சினின்

கோளினி தெய்தல் கொண்டுமுன் னறிதி
பொழுது நாளும் புலப்பொடு கழியப்
பழுதொடு கிடந்து பரிந்துகை வருத்து
நிமிரா மண்டை நிமிர்க்குநர் யாரென
வமரா மென்முகத் தசைஇய நடையின்

மருங்கிடைப் பற்றி வாங்க வாராக்
கருஞ்சிதா ருடுக்கைக் கவலைச் சுற்றம்
பூந்துகி லுடுத்துப் புனையிழைப் பொலிந்தாங்
கேந்திய பொலங்கலத் தின்பா லடிசி
னெய்யிடை யிட்ட குய்யுடைக் கருனையொடு

வெய்ய வாக மேலவர்க் கருத்தி
யில்லே மென்னா விரந்துகடை நின்றோர்க்கு
வல்லே மென்னா வரையாது வீசி
யீண்டிய பலரொடு மினிதிருந் துண்ணு
மாண்டகு துழனியின் மகிழ்வின வாதலுந்

தேரு மாவுந் திகழ்தரு களிறு
மூருஞ் செய்தி யுவப்பின வாதலும்
வானிலத் தன்ன மேனிலை மாடத்
தானிலை யின்பின வாதலுங் காண்டி
யதான்று

பண்டும் பண்டும் பயின்றறி குநர்தா
முண்டென வுரைக்கு மொருபெரும் பொருளஃ
துண்டுகொ லின்றுகொ லென்றுள மலமரல்
விண்டினி தொளிர்தல் விழியிற் கண்டு
வெண்ணெய்ப் பாவை வெயிலிடைப் பட்டென

வுண்ணெக் கெங்கு முருகலி னூன்பொதி
யென்புரு வாகி யியங்கும் யாக்கை
யன்புரு வாக வாங்குறு மளவி
லின்ப வெள்ள மிகவாது படிந்தீண்
டெடுத்த பிறப்பி னின்பமு மிழவாது

விடுத்த பிறப்பின் வீடுநன் கெய்தி
நிலம்புடை பெயர்வ தாயினு நிலையிற்
கலங்குத லில்லாக் காட்சியும் பெறுதி
பிறப்பிற் றீராது பெயர்விண் ணவர்நிலை
சிறப்பென மருளுஞ் செய்கையுந் தவிர்தி

யுதுக்காண் டோன்று மொருமலை யெங்கும்
பொதுக்காண் பில்லாப் பொலிவுடைத் ததுவே
யதர்பல கடப்ப வருஞ்சேய்த் தென்னா
தெதிர்பணிந் தியறி யியன்றனி ராயி
னேனலு மிறுங்கு மெழில்செய் சீறூர்க்

கானவர் விருந்தினி ராகித் தேனொடு
செந்தினை யிடிமகிழ் சிறந்தொரு பாங்கினு
முந்துறு வள்ளி முதலொரு பாங்கினுந்
துவரை யுழுந்தே துறுபனிப் பயறே
யவரை முதலவற் றவியலோர் பாங்கினு

மைவனத் தரிசியி னாக்கிய வருஞ்சோ
றுய்வினத் தமுதி னூங்கொரு பாங்கினு
மின்சொலொ டளிப்ப வினிதுடன் பெறுதிர்
மென்சொலொ டாங்கண் வேண்டுபுலத் திறுத்து
நடைப்பெரு வருத்த நண்ணா தொழிய

வுடைப்பெருஞ் செல்வ ருவப்பொடு போகி
யெண்ணில் குன்ற மிருந்துசூழ் போற்ற
விண்ணின் விளங்கு வியன்றிரு முடியி
னண்ணா மலையா மப்பெரு மலையின்
கண்ணார் சாரல் கனிவொடுங் குறுகின்

மண்ணார் முழவின் மஞ்சுபடு முழக்கு
மெண்ணா ரருவி யிழுமெனு மிசையும்
வெஞ்சொற் பேசும் வேட்டுவ மகளி



ரஞ்சொற் கிளிக ளவைகடி குரலுந்
தண்டமிழ்க் குயிராந் தனித் திருமுறையின்

வண்டமிழ்ப் பாடல் வகைபெறு பண்ணிற்
புரகர னாகிய புண்ணியற் பரவி
யரகர வென்னு மன்பின ரொலியுஞ்
செவிக்கினி தாகச் செவ்விதிற் கேட்டுப்
புவிக்கினி தாகிய புலனுஞ் சேர்திர்

மாடமலி மறுகின் வளமனை யெங்கணும்
வேடமு நீறும் விளங்குமெய் யவரைச்
சென்றெதி ரேற்றுத் திருக்குழாத் திருத்தி
நன்றடி மண்ணுபு நன்மொழி நவிற்று
யீண்டிய வறுசுவை யினிதுறு மடிசில்

வேண்டுவ வளிக்கும் விருப்புங் காண்குதிர்
குடையுங் கொடியுங் கூறுபல் சிறப்பு
மிடையும் வீதி விண்ணவர் செறியப்
பல்லிய மியம்பப் பாடலு மாடலும்
வல்லவ ரியற்ற வகைவகை யூர்தியி

னாளு நாயக னணியொடும் போந்து
மீளுங் காட்சி விழாப்பல பணிதி
ரவ்வழிச்
செங்கதிர்ச் செல்வன் றேண்மிசை யிவர
வெண்கதி ராரன் மீனல நுகர்நாட்

புலரி யெழுந்து புனல்படிந் தருளின்
செலவுடன் படுமச் செய்கடன் முற்றிக்
கூதிர் நுண்டுளி கொண்டுட னலியினு
நோத லில்லா நோன்புடை யுளத்துப்
பெண்டிரு மகாரும் பிறங்கெழீன் மைந்தரொடு

வெண்டிரு நீற்று விளங்கொளிக் கீழாற்
றிலகந் தைஇய திருநுதல் பொலிய
நிலவுந் துகிலி னிழன்மணி யணியீ
னெல்வே றாகி யியன்மணிக் கோவையிற்
செல்வோ ராகித் திரைகடல் வளைந்தென

விடையற வில்லா தியம்பிய வொலியிற்
புடையறச் சூழ்ந்து போகுநர் தம்மொடு
வெய்யோன் றிசைபெற விளங்கிய வாயிற்
கையோங் கெடுத்துக் கடிது விழுந்தெழுந்
தச்சமு மன்பு மகத்தொருங் கெய்த

நச்சிய கிளையொடு நயந்துமென் னடையி
னருந்தவ ரிருக்கையு மளப்பிலர் செய்த
திருந்துபூந் தடமுந் தெய்வக் கோயிலும்
வயின்வயின் வயங்குவ வழிபடுந் திறத்தி
னியன்ற வியன்ற வினிதுட னிரப்பி

மரபுளி வழாது மலைவலஞ் சென் றுமுன்
னுரைபெறு வாயி லூங்கினி தடைந்து
மேக்குற நிவந்த வியனெடும் புரிசை
நோக்கரும் பன்னிலை நுண்டொழிற் சிகரி
தொழுது நுழைந்து தூமணி நிரையி

னெழுதுத லரிதா வெழில்பெற வியற்றி
ஐங்கை யண்ணலொ டறுமுகத் திளவ
றங்கு மிடங்க டகப்பணிந் ததற்பின்
விடைமுகத் தேவின் விடைகொ டுள்புக்
கடைமுதற் கோயி லதனு ளென்று

முருவுரு வாகிய வுமையொ டண்ண
லருவுரு வாயுறு மந்நிலை எய்தி
வலங்கொள வந்துடல் மலிபய னென்ன
நிலங்கொள விழுந்துணர்ந் தெழுந்து நேர்பெறக்
கண்ணீ ரரும்பக் களித்துள மலர

வெண்ணீர் மையினா னிருகையுங் கூம்ப
மெய்ம்மயிர் பொடித்து விதிர்விதிர்ப் பெய்தச்
செம்மைகொ ளுரையுஞ் சிதறுபு குழற
வுருவுபிற வாகி யிருவரறி யாமை
யெரியி னிமிர்ந்த விறையோ யிமையோர்

பகைவர் மூவெயில் படைமிகை யாக
நகையி னட்ட நற்பெரு விறலோய்
நின்னுறு மாணிக்கு நீணா ளருள்வான்



கொன்னுறு கூற்றைக் குமைத்த கழலோய்
பாம்பு மதியும் பகைதவிர்த் துடனணிந்
தோம்ப நின்ற வொண்செஞ் சடையோய்
அழிவின் றமர ராரமு துண்ணத்
தழல்விடம் பருகிய தனிப்பெருங் கடவுள்
காமற் காய்ந்த கண்ணுதல் வாமத்து
நேரிழை பிரியா வோரிய லாள

வுலகுக் கொருவ வுணர்வுக் குணர்வ
பலகற் றவருளம் பயின்ற மெய்ப்பயன்
அளந்தோர்க் கரிய வலந்தோர் புகலென
வுளந்தெற் றளவையி னுவந்தபல வேத்திச்
செல்சுட ரமையத்துச் செறிவிசும் பிடையோர்

வெல்சுடர்ப் பருமணி மிளிர்ந்த வியப்பி
னகத்திரு ளிரிக்கு மஞ்செஞ் சுடராத்
தகத்திரு மலைமிசைத் தான்முன் காட்டுங்
கார்த்திகை விளக்குக் கண்டுகை தொழுது
சீர்த்திநனி பரவிச் சேர்ந்தனை நிற்பின்

வெள்ளி மால்வரை வியனுருத் திரிந்தென
வுள்ளு மால்விடை வுமையொடு மிவரா
மைந்த ரிருவர் மகிழ்ந்துபுடை போதத்
தந்தைதா டடிந்த சண்டி பின்வரப்
பாரிட மெங்கணும் பரந்துபுடை சூழ

வோரிட மில்லா துவட்டுவை பறையொ
டண்டர் வாழ்த்தி யணுகுதல் புரியத்
தொண்டர் மலர்தூய்த் தொழுதனர் பணியக்
கண்ணரு ளெங்குங் கரவாது பொழிய
வெண்ணில வெழிலின் மென்னகை யரும்ப

விளம்பிறை துளங்க வெதிரெழுந் தருளிநின்
னுளங்கொளுங் கொள்கை யூங்கினி தறிகுவல்
கொம்ப ரில்லாக் கொடியென நீயினி
யிம்பர் ஞாலத் தலமர லோம்பென
வினிதுடன் மொழிந்துநீ யெண்ணிய பரிசே

நனிநயந் தருளி நல்குவ னாண்மதி
யகலா மீனொ டருவரை மீமிசை
யிகலார் மஞ்சி னிடையெழுந் தென்னத்
திண்கா ழகிற்புகை செறிகருங் குழலி
னொண்காழ் மணிக்குழை யொருங்குட னிமைப்ப

வெழுநிலை மாடத் தேந்திழை யவர்த
முழுதுற விளங்கு முகமு முனாஅ
தணிநிரை வீதியி னடிவடுப் படுக்கு
மணிநிரை யவையும் வருநர் தம்மி
னெல்லியும் பகலு மிடையறிந் தொழுக

வல்லுந ரில்லா வகையி னெங்கு
மிருணைய விளங்கு மிறும்பூ
தருணை மாநக ரமர்ந்துறை வோனே.

## வாழ்த்து

### நேரிசை வெண்பா

தென்னருணை வாழியரன் றேவி யுமைவாழி
பன்னுதமிழ் வாழி பணியடியார்-நன்ன
ருளத்தினனி வாழி யுலகுயிர்க ளெல்லாம்
வளத்தினனி வாழி மகிழ்ந்து.

அருணை ஆற்றுப்படை முற்றிற்று



# சென்னிமலை முருகன்

## புலவராற்றுப்படை

## வித்துவான் வே. ரா. தெய்வசிகாமணி

### காப்பு

#### கட்டளைக் கலித்துறை

தேர்கொண்ட சென்னி மலைவேலர் பாதந் தினந்துதித்துப்
பார்கொண்ட செந்தமி ழாற்றுப் படையினைப் பாடுதற்குத்
தார்கொண்ட கொன்றைச் சடையான் குமாரன் தலத்துரியான்
கார்கொண்ட மும்மதச் சந்தி விநாயகன் காப்பெமக்கே.

### நூல்

**பரிசில் பெற்று மீண்ட புலவன்**
**பரிசில் வேண்டி வரும் புலவனை நோக்கிக் கூறுதல்:-**

#### புலமைத் திறம்

நிலைமண்டில ஆசிரியப்பா

மணிவளர் கடல்சூழ் மாநில வளாகத்
தணிவளர் சாந்த மருந்தமிழ் தென்றல்
மணமிகும் பாண்டி மகள்திரு முகமாம்
பொன்றிகழ் கமலப் பொய்கையங் கோட்டுத்
தன்னிய ரமுதத் தண்மதி தழீஇய
மாட மோங்கிய மலிபுகழ்க் கூடலிற்

பாடல் சான்ற பளகறு சிறப்பின்
பிறைமுடி யணிந்த கறைகெழு மிடற்றோன்
ஆல வாயின் அவிர்சடைக் கடவுள்
தலைவ னாகத் தன்னுடன் குழீஇய
புலவரே ழெழுவரும் புலமுற வாய்ந்த

தேனுறை சங்கத் தீந்தமிழ் நூலாம்
பழந்தமிழ் நாட்டின் பண்பும் வளமும்
இயல்வர லாறு மெழில்பெறக் காட்டிச்
சேய்நோக் காடியிற் றிகழ்தரு கின்ற
பத்துப் பாட்டும் எட்டுத் தொகையும்

செய்வதுந் தவிர்வதுந் தெரிவுறக் கூறும்
நாலடி முதலா நற்கீழ்க் கணக்கும்
எழுத்துச் சொற்பொருள் யாப்பணி யென்னும்
ஒல்காப் பொருள்மிகு தொல்காப் பியத்தொ
டறுபது சூத்திரத் தன்பினைந் திணையும்

ஐங்கா வியங்களு மறிவுறப் பயின்று
பெருவிளை யாடற் றிருவிளை யாடலும்
தெய்வ மணக்குஞ் செய்யுள்க டோறும்
அரிய பொருண்மிகு பெரிய புராணமும்
நச்சிய பொருள்சேர் நளினமிக் குடைய

கச்சியப் பன்செய் கந்தபு ராணமும்
இம்ப ருலகிற் கின்சுவை யமுதாங்
கம்பர்செய் நூலுங் களியுறப் பயின்று
முத்தி யளிக்கு மூவர்தே வார
முதற்றிரு முறையு முரணிலா ஞானச்

சந்தான குரவர் சாத்திர நூல்களும்
செந்தூர் முருகன் றிருவருட் பொலிவுடன்
பாண்டித் தமிழ்வளம் பழுனிக் கிடக்கும்
குமர குருபரன் கொழுந்தமிழ் நூல்களும்
கற்பனைக் களஞ்சியக் காவியப் புலவன்

சொற்புகழ் கொண்ட தூய்தவ மாமுனி
சிவப்பிர காசன் செழுந்தமிழ்ப் பனுவலும்
ஐயமுந் திரிபு மணுவுமில் லாமல்
தெளிவுறப் பயின்ற தீந்தமிழ்ப் புலவ!
பாற்கட லமுதம் பரவுதல் போல

நாற்பொருள் விராவு நற்காவி யச்செயுள்
பொழிப்பு மகலமும் புகலுறு நுட்பமும்
அறநூல் விதியு மதிலுறு விலக்கும்
உயர்ந்தோர் வழக்கு முறுநூல் வழக்கும்
வண்டமிழ் மரபும் வடநூன் மரபும்



முன்னுறு பழமையும் பின்வரு புதுமையும்
ஐந்திலக் கணத்தி னமைதியும் பயனும்
தோன்ற விரித்துச் சொற்பொரு ணயங்கள்
விளங்குற வேது மேற்கோள் காட்டிக்
கேட்டோர் மேலுங் கேட்குறு மாறு

அவைக்கள மேறி யாற்றொழுக் கேபோல்
விரிவுரை யாற்றும் மேன்மைசா லறிஞ!
நூலுரை போதகா சிரியரின் றிறங்கள்
மேலுறப் பெற்று விளங்கா சிரிய!
எல்லாப் பொருட்கு மியல்குண முணர்ந்த

வல்லோர் குற்றம் வரும்வழிக் காட்டுவர்
வல்லோ ரறிந்து வழங்கிய குற்றம்
அல்லவென் றுரைப்ப ததுவே புலமை
என்றகத் தியனா ரியம்பின ராதலின்
சீர்மிகு மறிஞர்செய் செய்யுளிற் குற்றம்

ஆக்கிப் பின்ன ரலவெனக் கூறும்
வாதத் திறமை வளமுறப் பெற்ற
அகடித கடன வாற்றலு முடையாய்!
சேரஞ் சோழம் பாண்டிய மென்னும்
மூவகைச் செய்யுள் முறைநெறி கொண்டு

காவிளை யாடுங் கருங்குயி லனைய
தேனினு மினிய செஞ்சொற் கவிதை
நாலும் பாடி நானிலத் தறிஞர்
செய்யு ளின்பம் செவிவழிப் பருகி
மகிழ்வுறக் கூறும் வாழ்வுசால் கவிஞ!

அகப்பாப் புறப்பா வாமிரு பாவில்
புறப்பா வதனிற் பொலிவுற விளங்கும்
கடவு ளமரர் கனம்பெறு மக்க
ளாகிய தலைவர்க் கமைந்துள சிறந்த
ஒளியு மாற்றலு மோம்பா வீகையும்

அளியு மென்றிவை யாய்ந்துறப் பாடும்
பாடாண் டிணையிற் பாவல் லோயே!
நில்லா வுலகில் நிலைபெறும் புகழ்செய்
மும்மணிக் கோவையும் நான்மணி மாலையும்
மங்கல முதலா மருவிய பொருத்தமும்

எழுத்தசை முதலாம் யாப்புறு விதியும்
சொற்பொரு ளணியுந் துலங்குற வளமாய்
இம்மெனு முன்னே இயற்றிடுந் திறலோய்!
பூவு மணமும் பொருந்துறல் போல
வியல்புறு மிலக்கண விலக்கிய மென்னுங்

கலைக்கடல் கடந்துங் கலிக்கடல் கடக்கும்
வகையறி யாது மயங்கினை யந்தோ!

### புலவர் வறுமை

மான முதலா மருவிய பத்தும்
பறந்திடச் செய்யும் பசிப்பிணி யதனால்
ஒட்டிய வயிற்றொ டுறுவிலா வென்பு

இருமருங் கினிலு மெழுந்துநிற் றலினால்
வங்கினைப் பற்றும் வல்லுடும் பதனை
யுரித்துவிட் டாற்போ லுடம்பினை யாயினை
கந்தை யுடையுங் கைதனிற் கிழிந்த
புத்தகக் காட்சியும் பொலிதர வந்தனை.

முத்தமிழ் சொரிதலின் மும்மத யானை
போன்ற புலவ! பூனைபோ லாயினை
வெயில்படக் கிடந்த மென்மல ரதுபோல்
வாடினை மேனி வருந்தினை யந்தோ!
புலவர்தம் வறுமை பொல்லா தன்றோ?

காற்று மழையுங் கடுங்கதிர் வெயிலும்
ஒன்றுபி னொன்றா யுறுதுயர் செய்யும்
ஓட்டை மிகுந்த வோலையில் லத்தில்
வறுமைப் பேய்கொள வருத்தமுற் றயர்ந்து
தலைக்கிடு மெண்ணெய் தான்கா ணாமல்



மஞ்சள் பூசாது மதிமுக நுதலிற்
றிலக மிடாமல் திகழுற முன்பு
கட்டுநூற் கழுத்துங் கந்தைசூழ் இடையும்
உணவு காணாம லொட்டிய வயிறும்
துயர்கூர் முகமுந் தோன்றுறு மனைவியும்

''அம்மா! பசிகா தடைக்குதென் செய்கேம்
உப்புநீர்க் கஞ்சி யொருவாய் தாராய்''
என்றழு தேங்கு மிளமைகூர் சிறாரும்;
உறுதுயர் கண்டே யுளமிகக் கலங்கிச்
செய்வ தொன்றுந் தேர்ந்தறி யாமல்

அவர்வயிற் றுணவும் அரைதனி லுடையும்
முகத்திற் பொலிவும் முன்னுறப் பெற்று
வாழ்வுறக் காண மனத்தினி லெண்ணி
அன்னவர் தம்மை யரிதினிற் பிரிந்து
காடை காகங் கட்டிடக் கண்டும்

### பரிசில் வேண்டிச் செல்வரை நாடியது கூறல்

செல்வரை மனதிற் றெய்வமென் றெண்ணிக்
கல்முள் நிறைந்த கானக மதனில்
ஆமாத் திரியு மதர்வழி கடந்தும்
வேழந் திரியும் வியன்மலை தாண்டியும்
ஆழ மிகுந்த வாற்றினை நீந்தியும்

தேனினை நாடித் திசைதொறும் பறந்து
மலரினைத் தேடும் வண்டெனத் திரிந்து
முன்செய் வினையால் முழுப்பொருள் படைத்த
செல்வ ரில்லந் தெரிவுறக் கண்டவர்
தலைக்கடை கால்கள் தளர்வுற நின்று

கன்ன லைங்கணைகள் கரங்களிற் றிகழ
மன்மதன் போர்க்கு மகிழ்வுற வேறுந்
தென்றலந் தேருஞ் சிறுமதிக் குழலியும்
வெளிப்படக் கண்டு விரகநோய் கொண்டு
கொச்சி மஞ்சளும் குடமலைச் சாந்தும்

வசிய மருந்தும் மணமுறப் பூசி
கொங்கையு மாடையும் குலுங்குற நடந்து
நாடக நடித்தும் நல்லிசை பயின்றும்
கண்வலை வீசியும் காளையர் தமது
உளங்கவர்ந் தவர்த முறுபொருட் குவியலிற்

காணியு மின்றிக் கறந்துறும் வாழ்க்கைப்
பாசிழை யல்குற் பரத்தை யரில்லம்
அவசமுற் றோடி யடைக்கல மென்றும்
உம்மை யல்லா லுயிரிலை யென்றும்
செம்பொனும் மணியும் சீர்பெறக் கொடுத்து

மற்றவர்ப் புகழ்ந்து மகிழ்வுறச் செய்து
மழைதிகழ் மாட மஞ்சகத் தணைமேல்
அன்னவர் மார்பி னகலிடம் பெற்று
மலர்வா யமுத மகிழ்வுட னுண்டு
காம வின்பங் களிப்புறத் துய்க்கும்

செல்வருன் வருகை தெரிதலின் பொருட்டுக்
கடவுள் வணக்கமும் கலைக்குரு வணக்கமும்
உன்பெரும் புகழு முவமையில் தலைவன்
தன்பெரும் புகழுஞ் சாருமா சிரியச்
சீர்மிகு விருத்தச் சீட்டுக் கவியோர்

ஆளின் மூல மன்புற வனுப்பிச்
செல்வர்தஞ் சமயந் தெரிவுறக் கண்டு
அவர்பெருஞ் செல்வ மனைத்து முனக்கே
வந்தது போல மகிழ்ச்சிமீக் கூர்ந்து
நாவூற் றெழுந்த நனிசுவை மிகுந்த

தேனூற் றெழுந்த செழுந்தமிழ்க் கவிதை
வானூற் றெழுந்த மழையெனப் பொழிந்து
நின்று வள்ளலை நேருறக் கண்டதால்
நன்றுசெய் புண்ணியம் நான்மிக வுடையேன்
இன்றிது வேளை யிடர்செயும் வறுமைப்



பொல்லா விடத்தைப் போக்குற நின்றன்
அமுதமாங் கொடையை யளியுட னாடிப்
பெறுதற்கு வந்தேன் பெருந்தமிழ்ப் புலவன்
பொன்மனம் வைத்தெனைப் போற்றுக வெனநீ
முற்றுஞ் சொல்லி முடியா முன்பே

புலவர்க் கீந்து புகழ்மிகப் பெறலே
நில்லா வுலகி னிலையென வறியாப்
பொல்லாச் செல்வர் புற்றினில் நாகம்
என்னச் சீறி யியைபிலா மொழியில்
''நூல்பல வுணர்ந்த நுண்மதிப் புலவீர்!

வேளை தெரியும் விவேகமொன் றில்லீர்
விளைபொரு ளுள்ள வேளையை யறிந்து
மற்றோர் வேளை வரு''கெனக் கூறி
நில்லா தேகி நெடுங்கத வடைக்கப்
போன வுயிரும் பொலிவழி யுடலுமாய்

நின்றுலை நீரி னெஞ்சகங் .கொதிப்ப
ஊழினை யெண்ணி யுறுமெய்க் குறளில்
இரக்க விரக்கத் தக்கார்க் காணின்
என்றுவள் ளுவனா ரியம்புரை யறிந்தபின்
வழிவழி யாக வண்டமிழ் புரக்குங்

கொடைமிகு செல்வக் கொழுங்குடிப் பிறந்து
ஈகென வருந்தி யியம்பா முன்பே
குறிப்பறிந் துதவுங் கொள்கையின் மிகுந்த
வள்ளலை நாடி வழிகுழி யாகக்
காற்றினில் விரைந்து கடுநடை கொண்டு

பழுமர மதுதேர் பறவையிற் போல
வந்தனை நொந்து வழிதனி லன்ப!
நல்லோர் வறுமையில் நலிவுற வென்றும்
பொல்லார் செல்வம் பொருந்துதல் முறையோ
இருவே றுலகத் தியல்போ கொடிது.

### நல்லோர் வறுமையும் நலந்தரும் என்னல்

பொதிய மலையிற் புண்ணிய முனிவன்
அகத்தியன் வளர்த்த வருந்தமி ழிந்த
மண்டிணி யுலகில் வளமிகத் தந்து
ஓங்குவாழ் வளிக்கு முளங்கவ லாதே.
புலக்குடிப் பிறந்து புகழ்பெறு முன்னோர்.

வறுமையின் மெலிந்து வாட்டமுற் றவரே
தூக்கமு மின்றிச் சுட்டிடுங் கொடிய
போக்கறும் வறுமைப் புலவர்க ளுலகில்
நிலைதளர்ந் தேகி நீணிதி மிகுந்த
ஈயாச் செல்வ ரிடந்தொறு மிரந்து

ஓயாத் துயர முற்றது கண்டே
இரந்துயிர் வாழ வியற்றிய தலைவன்
பரந்து கெடுகெனப் பழமறைக் குறளில்
தெய்வப் புலவன் சீறின னன்றியும்
நல்லோர் வறுமை நலிவுறக் கண்டும்

அல்லோர் பக்க மணுகினை யாகலின்
புறவித ழேபோற் பூவுறு மகளே
நிலத்து நீறாய் நீவிளி கென்று
செல்வத் திருமேற் சீற்றமீக் கொண்டு
நாலடி நன்னூல் நவின்றது மன்றோ?

செல்வமும் வறுமையுஞ் சேர்தற் கேதுவை
எல்லா வகையிலு மெண்ணிய முன்னோர்
முன்செய் வினையென முடிவு கண்டனரே
செய்தீ வினையாற் சேர்வுறும் வறுமை
தீர வேண்டிற் றெய்வதம் பராவுந்

திருவருள் நெறியிற் சென்றிட வேண்டும்
என்று தெளிந்தீங் கிசைத்தன ரன்றியும்
அந்நெறி சென்றே யரும்பயுன் கொண்டார்
ஆதலி னீயும் அந்நெறிச் சென்று
ஓதநீ ருலகி லுயர்பயன் கொள்வாய்.



வறுமை யுலகில் மலிதுயர் செயினும்
இரவு பகலி னினிமைகாட் டுதல்போல்
வறுமை செல்வ மகத்துவ முணர்த்தும்
வறுமை யிறைவனை மறவா தென்றும்
உறுதி நினைவை யுற்றிடச் செய்யும்

ஆகலின் வறுமை யகலா தென்றும்
வேண்டு மென்று விரும்பின ருளரே
அன்னவர் வேண்டு மதனை யணியில்
வேண்ட லணியென விதித்தனர் புலவர்
வறியோர் சிலர்மிடி வருதுயர் நலிந்தும்

நெறியி னின்றும நீங்கல ராகிச்
செல்வர்க் கரிய செழும்புகழ் கொண்டார்
வறுமையும் வாழ்வும் மன்னுத லின்றிச்
சென்றுபற் றுறுவோர் சிந்தையி னளவாய்த்
துயரு மகிழ்வுந் தோன்றுறச் செய்து

நில்லா தேகு நீர்மைய வாதலின்
அறிஞ ரவற்றை யணுவு மெண்ணாமற்
செந்நெறி யதனிற் றிறமுறச் சென்று
கருதிய முடித்துக் கனமிகப் பெறுவர்
திருவருட் புலமைச் செல்வர்க ளென்னும்

அருண கிரியு மபிராமி பட்டரும்
வறுமையாம் பாவி வலிந்து வருத்தத்
தெய்வ நெறியே சென்னெ றியாக
வறுமை கடந்து வாழ்ந்தன ரன்றோ?
நெருப்பிற் சுடச்சுட நீளொளி கொள்ளும்

அரும்பொ னென்ன வடர்தரு மிடிநோய்
வருத்த வருத்த மலர்தரு ஞானம்
திருந்துற முதிர்ந்த சீலரு முளரே
பாவியர் வறுமை பற்றுவர் பற்றின்
தீநெறிச் சென்று தீமையி லழிவர்

புண்ணியர் வறுமை பொருந்தார் பொருந்தின்
நன்னெறிச் சென்று நலமிகப் பெறுவர்
வறுமையில் வாழ்ந்தும் மாண்புறு நெறியிற்
சென்றிவ் வுலகிற் சிறந்தனர் பலரே
உறுதுயர் வறுமை யுன்றனைத் துரத்திப்

பெரும்பயன் பலவும் பெற்றிடச் செய்யும்
சமய மிதுநீ தகுபயன் கொள்வாய்
முன்செய்தீ வினையின் முழுத்துயர் நீங்கப்
பின்செய்மா தவத்தின் பெரும்பய னனைத்தும்
உறுநற் கால முனக்கின் றாகலின்.

இற்றைநா ளென்ற னெதிருற வந்தாய்.

### சென்னி மலையின் சிறப்புறு மகிமை

முழுதுணர் புலவ! முன்னையூழ் வலியால்
வறுமை யெனைமுன் வந்தடர்த் திடலும்
உறுமெய்ப் பிணியு முற்றிட வவற்றால்
பசியும் வலியும் படுதுயர் செய்ய

அத்துய ரிரண்டு மகற்றிட வேண்டிச்
செல்வர் மனைகள் தேடிநின் றிரந்தும்
மருத்துவர் பலரின் மனைமருந் துண்டும்
அன்னவை யிரண்டு மகன்றில வாகிக்
காற்றுந் தீயுந் கலந்தது போலப்

பின்னுமென் மேலும் பெருகுற வளர்ந்து
தள்ளாத் துயர்பல தாஞ்செயுங் காலைச்
செய்வ தொன்றுந் தேர்ந்தறி கிலனாய்க்
கொடிது கொடிது வறுமை கொடிது
அதனினுங் கொடிது இளமையில் வறுமை

அதனினுங் கொடிது ஆற்றொணாக் கொடுநோய்
என்றுநம் மவ்வை யியம்பிய பாடல்
உண்மையை யுணர்ந்து ஒருநா ளிரவில்
விதியினை நினைந்து விழிமூ டாமல்
படுதுயர் நொந்து படுத்திருந் தேற்குத்



தீராத் தீவினை சேர்ந்துடல் பற்றிக்
கழுவா யொன்றினு நழுகா தாகிப்
பேரா மிடிநோய் பிணிப்புறுங் காலை
தன்னுயி ரிடும்பை தாங்கா தாயின்
கங்கை யமுனை நருமதை சரஸ்வதி

பொங்கு காவிரி புகழ்பெருங் குமரி
ஒன்றினீர் மூழ்கி யுயிர்துறந் திடுதல்
தக்க தென்று தகுநெறி கூறுஞ்
சிவபுரா ணப்பொருள் தேர்ந்துரை செய்த
புலவரென் னிளமையிற் புகலுரை யென்றன்

நினைவிற் றோன்ற நெஞ்சக மகிழ்ந்து
அந்நெறி நன்னெறி யாமெனத் துணிந்து
சீல மறிந்தருள் தெய்வமே போலக்
கால மறிந்துயிர் களியுறப் பெருகும்
பூவிரி சோலைக் காவிரித் தாயை

மனதினி லெண்ணி வடதிசை நோக்கிச்
சென்றேன் வழியிற் சேணகல் வானின்
கொண்டல் படியுங் குவடுகள் விளங்கத்
தண்டலை சூழ்ந்து தலைநிமிர்ந் தோங்க
வண்டினம் பாட மயில்நட மாடத்

தென்றல்வந் துலவத் தெய்வநா தங்கள்
ஓமென வொலிக்க வோங்குயர் வேங்கை
பொன்பூச் சொரியும் பொலிவொடு விளங்கப்
பறவையும் விலங்கும் பரந்தொலி செய்யச்
சாந்தமு மகிலுந் தண்மணங் கமழத்

தெய்வ மணஞ்சார் திசையெலாம் விளங்க
மஞ்சடை கிடக்கு மலையிருஞ் சாரற்
குன்றக் குறவர் கொடிச்சியர் தம்முடன்
மலையிருஞ் சுனையில் மகிழ்ந்துநீ ராடி
மலைமிசைச் செவ்வேள் மலரடி வாழ்த்தித்

தேன்குட மெடுத்துச் சென்றிடுங் காட்சியும்
செந்தீக் காந்தட் செம்மலர் மாலையுங்
காவி யுடையுங் கரந்திகழ் வேலுந்
திகழ மலைவாழ் சேந்தனைப் பாடி
யச்சமுண் டாக வாடிமுக் கால

நிகழ்ச்சிக ளனைத்து நிசமுறக் கூறி
யருளா டியர்செலு மற்புதக் காட்சியும்
வயிற்றிடைக் குட்டி வலிவுறப் பற்றச்
செம்முக மந்தி செழுமர மேறித்
தாண்டிக் குதித்துத் தான்செலுங் காட்சியும்

வழிச்செல் லடியவர் வளர்கரத் துள்ள
தெங்கங் காயைத் திடுக்குறப் பிடுங்கிக்
குடந்தலைக் கொண்ட கூன்கிழ வன்போற்
றலையிற் கடுவன் றான்சுமந் தேகுங்
காட்சியு மலிந்து கலையுணர் பெரியோ

ருள்ளம் போல வுயர்வுறு மலையைக்
கண்டேன் றலையிற் கரங்கள் குவிந்தன
காந்த மிரும்பைக் கவர்ந்தது போலவும்
சிற்றிலை நெருஞ்சிச் சிறுபொன் மலரைக்
கதிரோன் றன்முகங் கவருதல் போலவும்

என்னுளங் கவர்ந்த வெழின்மலைக் காட்சியிற்
றலையுறு பாரந் தானகன் றாற்போல்
உறுபசித் துயரு மோவிலாப் பிணியும்
சிறிது சிறிதாய்த் தீர்ந்தன காணேன்
அன்பு மின்பு மகந்தனில் பெருகு

மற்புதங் கண்டே னாங்குறும் பெரியரை
இம்மலைப் பெயரு மிதன்மகி மையுநீர்
தெரிதர வெனக்குச் செப்புதல் வேண்டும்
என்றியான் வேண்ட வியைபுறும் பெரியர்
இக்குன் றத்தின் எழில்மிகு முகட்டில்



பச்சை மயிலிற் பரஞ்சுடர் முருகன்
உதய காலத் தொளிரிளம் பரிதி
பசுங்கடல் விளங்கும் பான்மை போல
விரும்பிவீற் றிருந்து வேண்டுநர் தமக்கு
வேண்டுவ வேண்டுவ வேண்டியாங் கருளும்

சென்னி மலையிது சேர்வுறும் வடசார்
சரவண தீர்த்தஞ் சார்ந்து நீராடி
யன்பர் மனம்போ லமைவுறும் படிகள்
ஒவ்வொன் றாய்க்கடந் துயர்மலை யேறி
அறுமுகங் கரந்த வொருதிரு முகமும்

கடம்பணி மார்புங் கரந்தனிற் றண்டுந்
திகழவீற் றிருக்குந் திருமலைக் கந்தன்
குஞ்சித நிலைத்த குளிர்மலர்ப் பதங்கள்
கண்ணிணை குளிரக் காண்பவ ருலகில்
வறுமை தீர்வர் வளமுற வாழ்வர்

வேதனை மிகுந்த வியாதிக்ள் தீர்வர்
கலைஞா னங்கள் கைவரப் பெறுவர்
நீண்ட வாழ்நாள் நிலையுறப் பெறுவர்
இம்மையு மறுமையு மிரும்பய னளிக்கும்
நன்மகப் பெறுவர் நாற்பொருள் பெறுவர்

என்று மலைநல மியம்பின ரதனால்
ஓங்குயர் மலையி னுச்சியின் மீமிசைப்
பருவமே கம்பெய் பஃறுளி திரண்டு
மணியும் பொன்னும் மலர்களும் வாரிப்
பெருமலை யாரம் பிறங்கிய தென்ன

வீங்குநீ ரருவி வீழ்வுறுந் தாழ்வரைப்
பரமா னந்தப் பழங்கடல் போன்ற
சீதப் புனலிற் செழுமலர் நிறைந்த
சரவணப் பொய்கை சார்ந்துநீ ராடி
மலைமிசை யேற மனமிக விரும்பி

முத்திசோ பான முறைமையிற் றிகழுஞ்
சித்திரப் படிகள் சென்றுசென் றேறிச்
சந்தனஞ் செண்பகந் தருநிழற் புன்னை
சிந்துரம் வில்வஞ் செச்சை வேங்கை
வானுற வளர்ந்து வான்முகில் சூழத்

தேனடை கிடக்குஞ் செழும்பொழில் நடுவண்
குளிர்மதி தவழுங் கோபுரம் விளங்குஞ்
செம்பொற் கோயி றிகழ்மணித் தவிசி
லுள்ளுதோ றுள்ளுதோ றுளங்களி கொள்ளக்
காண்டொறுங் காண்டொறுங் கண்களி கொள்ள

ஒளிப்பிழம் பாகு முதயஞா யிற்றின்
மலைமிசை யெழுமுழு மாமதி யதனின்
அழகெலாந் திரண்டோ ரற்புதம் பெருக்கும்
மணங்கமழ் தெய்வத் திளநலம் பொலிய
உலகுயிர்த் தொகுதி யுய்ந்திடற் பொருட்டா

யருளுருக் கொண்ட வண்ணல் செவ்வேளின்
சேயொளி மேனியுஞ் செஞ்சுடர்க் காந்தள்
பொலிதரு சென்னியும் புதுநில வெறிக்கும்
முழுமதி முகமும் முழுமதி யுதயத்
தலர்ந்தசெங் குமுத மனையகண் களுஞ்சீர்

பொலிந்தசெவ் வாயும் புன்முறு வலும்பொற்
குன்றிரண் டனைய குவிதடந் தோள்களும்
அண்ட வாணர்த மருந்துயர் மாற்றும்
தண்டுறு கரமுந் தனியிடை சார்த்திய
இலங்கெழிற் கரமு மோர்திகழ் மலயச்

சந்தன மணக்குந் தடவரை மார்பும்
மார்பில் விளங்கும் மழைநெடுங் கானிற்
காரின் மலர்ந்த கடம்பணி மாலையும்
அரத்தம் பூப்போ லழகுற விளங்கும்
செந்நிற வாடை திகழ்தரு மிடையும்



பொய்வழி புகாத மெய்வழித் தொண்ட
ருய்வுறப் போற்று மொலிகடற் பூத்த
பவள நிறமார் பதமலர்த் துணையும்
என்று மிலதோ ரின்பங் கிளர்வர
நின்ற கோலம் நேர்படக் கண்டேன்.

வேலும் மயிலும் விரிசிறைச் சேவலும்
வேழமு முன்பில் விளங்குதல் கண்டேன்
கண்டு விரைவிற் கரஞ்சிரங் குவிய
நின்று தொழுது நிலமுற வீழ்ந்து
எண்வகை யுறுப்பு மிருநிலந் தோயப்

பன்முறை வணங்கிப் பார்தனை மறந்து
நின்ற நிலையில் நேர்பட வெழுந்து
தண்டொரு கரத்திற் றாங்கிவீற் றிருக்கும்
சென்னிமா மலைவாழ் செம்பொருள் முருகா!
அடியவர் துயரம் அகற்றிடுந் தீரா!

கடிமண மாலைக் கடம்பணி மார்பா!
மணிமயிற் குமரா! மலைகொழு வள்ளிக்
கொடிபடர் கொம்பே! குஞ்சரப் பிடிதோய்
வளர்புய மலையோய்! வளர்பிறை யணிந்த
செஞ்சடைப் பெருமான் திருநுதல் விழியில்

வெளிப்பட் டும்பர் விண்ணகம் புரந்தோய்!
அஞ்சிடா வணமெனை யாட்கொள வேண்டும்
தனக்கு நிகராய்த் தானே விளங்கும்
நின்பதி னாறு நிகரிலாப் பேர்கள்
அனைத்து மென்று மன்புறச் சொல்வி

மிடிதுயர் பகைபிணி மேவா வண்ணம்
என்று மின்ப மின்றுபோ லெய்தி
நின்றிரு வடியி னீழலில் யாமும்
வழிவழிச் சுற்றமும் வாழ்வுற வருள்வாய்
என்றியான் வேண்டி யிருந்திடும் போழ்தில்

அந்தணர் மரபி னருச்சக னொருவன்
நீறுஞ் சாந்தும் நீள்மலர் மாலையும்
கையுறத் தந்தென் கண்களி கொள்ள
என்முக நோக்கி யிம்மலை யுச்சி
வள்ளிதெய் வப்பிடி வாழ்பெருங் கோயி

லுள்ள ததனை யுவப்புடன் சென்று
கண்டு வணங்கிக் கருதிய பெறுவை
என்று மொழிந்தா னிணையடி வணங்கிச்
சென்றே னுச்சித் திருவளர் கோயில்
பொன்றிகழ் மணியிற் பொலிபூந் தவிசில்

மலைவா ழெயினர் மன்னவன் காட்டில்
வளமுற வளர்த்த வள்ளியங் கொடியும்
கற்பக நாட்டுக் காவலன் செல்வி
பொற்புறு மமுதப் பொலம்பூங் கொம்பும்
தாமரை மலருந் தண்கமழ் நீரின்

பூமல ருங்கை பொலிதர வேந்தி
மதிமுகம் பொலிய வலமிட மாக
நின்றுயிர்க் கருளு நிலையினைக் கண்டு
அற்புதம் பெருக வார்வமுற் றோடி
வணங்கித் தொழுது வாழ்த்திநின் றிருந்தேன்.

### அருளாடியர் மடத்துத் தலைவர் புலவருக்குப் பரிசில் நல்கியது கூறல்

அன்ன வேளை யழகுற மேனியில்
அரிய வெண்ணீறும் அக்கமா மணியும்
வெள்ளொலி யாடையும் விளங்குறத் தரித்த
அருளா டிகள்மடத் தருள்மிகு தலைவர்
அகத்திற் கருணை முகத்திற் பொலியவந்

தென்கரம் பற்றி யேகினர் சென்றோர்
மண்டபத் தென்னை வான்றவி சமர்த்தி
யென்முக நோக்கி யெழில்மிகு மிந்தச்
சென்னிக் குன்றந் திகழ்தரப் பொலியுங்
குன்ற மெறிந்த குமரவே ளுனக்கு



நல்லுடல் வாழ்வும் நயமுறு செல்வமும்
மன்னுற வருளை வழங்கினன் வாழ்கென
நீற்றினை யென்றன் நெற்றியிற் பூசிக்
குமரி வாழைக் குருத்தினை விரித்து
நீர்தெளித் தென்ற னேர்முக மிருந்து

திகழைந் தமுதுந் தேன்தினை மாவும்
மாம்பழங் கதலி வருக்கையின் சுளையும்
அறுசுவைக் கறிகளு மப்பள வகையும்
அன்னமும் பருப்பும் ஆன்புது நெய்யும்
சுண்டை வற்றற் சுவைமிகு குழம்பும்

நெல்லிசேர்த் தரைத்த நிகரில்மோர்க் குழம்பும்
மிளகு சீரகம் மிதமாய்த் தூதுளை
சேர்த்துச் செய்த தெளிவுறு ரசமும்
கன்னல் நெய்பால் கலந்துடன் சமைத்த
சர்க்கரைப் பொங்கலுந் தாளித மணஞ்சேர்

புளியுலை வெந்த பொன்னிறப் புழுக்கலும்
மொந்தையில் நிறைந்த முளிதயிர் விராவிய
அன்னமு மாப்பா லடிசிலும் துவையும்
அன்புறப் படைத்து ஆர்வமிக் குடைய
சொல்லினும் பொருளினுஞ் சுவையுற முகமன்

இன்னுரை பலவு மிடையிடை கூறி
உண்ணுமா றென்னை யூக்கின ருணவை
வயிறும் வாயும் வாய்த்த பயன்கொளத்
தேவ ரமுதினுந் தீஞ்சுவை மிகுந்த
தென்றமிழ்க் கவியிற் சீர்பெறச் சுவைத்து

உண்டே னுண்டபி னுற்றவென் முகத்தின்
மலர்ச்சி கண்டு மகிழ்வுறு மடியவர்
என்னை நோக்கி யிலங்கெழிற் புலவ!
முன்னைமா தவத்தின் முழுப்பயன் கூட்டச்
செம்பொன் வரையின் சிகரமென் றுரைக்குஞ்

சென்னிமா மலையிற் சேர்ந்தனை யாதலின்
இல்வாழ் வதனி னிருந்துயர் கடந்து
நல்வாழ் வதனை நயமுறப் பெறுவாய்
இம்மலை மகிமை யியம்புத லெளிதல
வாயினுஞ் சிறிதிங் கறைகுவன் கேண்மோ.

தெவ்வுசூர் மாவின் றிறலுரம் பிளந்த
செவ்வேட் சேயின் றிருவருட் பொலிவும்
போன வுயிருடல் புகுந்திடச் செய்யும்
சஞ்சீ வனிமுதற் சாற்றுநால் வகைசேர்
மருந்து களுமிம் மலைதனி லுண்டு.

மூப்பும் பிணியு முறைபெறத் தவிர்த்து
மரணமெய் தாமல் வாழ்ந்திடச் செய்யும்
கையா வெட்டியிக் கல்வரை யுண்டு
கடியர வோட்டுங் கடிமண மிகுந்த
கருநொச் சியைநீ காணலா மீங்கு.

அற்றற் றுடல்சேர் அற்புதங் கொண்டு
சினந்தெயி றதனாற் றீண்டிடிற் சித்தி
தருவதாய் முத்துந் தவளமும் போன்ற
வெண்ணிறச் சாரை மேவுமோர் பாலில்
கண்முன் றோன்றிக் காணப் பெறாத

காணாச் சுனையுங் காணுமிம் மலையில்
கருங்கொடி யென்னுங் காகமே றாத
சினகரக் கூடஞ் சிறந்திடு மோர்பால்
வானம் பெய்யாது வறட்சிமீக் கூர்ந்து
கனல்வளி வீசுங் காலநீர் சுரந்து

அருவியாய் வழியும் அற்புதம் பெருக்கு
மாமாங்கச் சுனையிம் மலைதனிற் பொலியும்
சித்தர்வாழ் குகையுந் தெய்வமூ லிகையும்
பவளக் குறிஞ்சியும் பரூஉக்கலின் முளைத்த
புல்லுரு வியுமிப் பொன்வரை யுண்டு.



இம்மலை மாதவ மெய்திவாழ்ந் திருந்திவ்
வற்புத மனைத்தும் பொற்புறக் கண்டு
சென்னிமா மலையிற் செவ்வேள் தனக்கும்
வள்ளிதெய் வப்பிடி மங்கையர் தமக்கும்
ஆலயம் கோபுரம் அழகுசேர் பதிட்டை

திருத்தேர் விழாக்கள் சிறப்புறச் செய்தோன்
அரவணி சடையோற் கன்புமா றாத
சரவண முனிவன் தமிழ்மொழிச் செய்த
தலபுரா ணமுமித் தலத்தினி லுண்டு
அன்னதன் பெருமை யாரளந் துரைப்போர்?

மணப்பூங் கடம்பணி மார்பனை யிவ்வரை
யன்புடன் கண்டவ னடிவணங் குறுவோர்
பூமகள் திருவும் புவிமகள் திறனும்
நாமகள் கல்வியும் நலமுறப் பெற்று
மனைவி மகாருடன் மகிழ்வுற வாழ்ந்து

சிவஞான சித்தியும் சீர்பெறு முத்தியும்
எய்தப் பெறுவ ரென்றினி தியம்பிச்
செம்பூம் பட்டின் சீருடை யென்றன்
மருங்கில் விளங்க மகிழ்வுட னுடுத்தி
எழுதலை முறையு மெடுக்கக் குறையாப்

பொன்னும் மணியும் புரைதவிர் முத்தும்
மணிவிர லாழியு மகரகண் டிகையும்
மரகத மாலையும் வயிரக் கடுக்கனும்
தங்கப் பதக்கமும் தகுகைக் கடகமும்
அழகு திகழுறு மணிகலன் பிறவும்

நோக்கு நுழையா நுண்ணிழை யோட்டிய
வேயுரி யன்ன வெண்டுகி லாடையும்
கம்பளச் சால்வையுங் கவின்றலைப் பாகையும்
சட்டையுங் குட்டையுந் தரிக்கு மேலாடையும்
நீறுஞ் சாந்தும் நிரல்பட நிரைத்த

பொற்பூந் தட்டைப் பொற்புற வெடுத்து
ஆர்கலி யுவகை யகந்தனிற் பெருக
அறிஞ! கொள்கவென் றன்புடன் கொடுத்துச்
சென்னிமா மலைவேள் திருவரு ளதனால்
திருவு மிகழ்வுஞ் சீருறப் பெருக

வழிவழி யாக வாழ்கென வாழ்த்திய
அருளா ளடிக ளடியிணை போற்றி
நிலம்படர் வணக்க நேருறச் செய்து
பிரியா விடையாற் பெயர்ந்தனன் வந்தேன்
வாழிய கேண்மதி வளர்மதிப் புலவ!

எல்லா மலையிலு மிருந்தருள் செவ்வேள்
சென்னி மலையிற் சிறப்புற அருள்வான்
ஆகலின் நீயு மம்மலை சென்று
வள்ளி துணைவன் மலரடி கண்டு
புகழ்ப்பொரு ளமைந்த தமிழ்க்கவி மாலை

வளமுறப் பாடி வணங்குவை யாயின்
வறுமைப் புலியும் வருத்துநோய்ப் பேயும்
வாய்விட் டோட வளர்மிகு செல்வமும்
உடலி னலமு மொளியும் பெறுகுவை
சென்னி மலைதிகழ் சீர்பெறு நாடும்

## பூந்துறை நாடு

நாட்டின் சிறப்பும் நானில வளமும்
மலைமேல் முருகன் வளர்புகழ் பாடலும்
பாட்டிற்கு வந்தவன் பரிசருள் திறமும்
சிறப்பு முறையிற் றெரிதரக் கூறுவல்
அன்புறக் கேட்டி யருந்தமிழ்ப் பாவல!

ஆதவன் சூழு மகன்றிரை யுலகின்
மாதவஞ் செய்த மாண்புறு திசையெனுந்
தென்றிசை யதனிற் செழிப்புற விளங்கி
வடதிசை வேங்கடந் தென்றிசைக் குமரி
குடதிசைக் குரைகடல் குணதிசைப் பௌவம்
எனுநான் கெல்லையு ளியல்புறக் கிடக்குந்



தகுபொருள் விரித்த தண்டமிழ் நாடு
வடிதமிழ் வலத்தால் வழிவழி வளர்த்த
முடிகெழு வேந்தர் மூவரும் புரந்த
சேரஞ் சோழம் பாண்டியங் கொங்கு
தொண்டை யென்னுந் தொல்பெயர் படைத்து

ஐவகைப் பிரிவா மவற்றினுட் கொங்கு
நீர்நில வளத்தால் நிகரில தாகிச்
செல்வமுங் கல்வியுஞ் சீர்தரு மீகையும்
வீரமும் புகழும் விளங்குறு நாடாம்
பிறைமுடிக் கண்ணிப் பெருமான் செஞ்சடை

திசையகம் பொலியத் திருநட மியற்றும்
அம்பலந் திகழு மணிகெழு காஞ்சிவாய்ப்
பிறவாப் பழனப் பேரூர்ப் பதிமுதல்
இறவாச் சிவதல மெண்ணில திகழ்வது
மாறுகொள் சூரன் வல்லுரம் பிளந்து

கூறுசெய் வேலன் குடிகொண் டிருக்கும்
ஆறு படைவீ டாமெனுந் தலத்தில்
வீறுகொ ளேரக வெற்பெனுஞ் செங்கோ
டாறுகா விரிவா யணிகொள வுடையது
இமிழ்கடல் ஞாலத் தீடிணை யின்றித்

தமிழ்ச்சுவை யெல்லாந் தாமொரு வடிவாய்ப்
புலவர்க ளெல்லாம் புத்தமு தென்னக்
களிகொண் டுள்ளக் கவலைதீர்ந் தனராய்க்
கொள்ளைகூட் டுண்ணுங் கொள்கையின் மலிந்து
ஐஞ்சிறு காவிய வடைவினு ளொன்றாய்ப்

பெருங்கா வியத்திறம் பெற்று விளங்குந்
தலைமணிக் காவியந் தானெனும் புகழ்சேர்
கொங்குவேள் மாக்கதை கொடுத்ததந் நாடு
வெண்ணைச் சடையன் வியன்குலக் காணி
நண்ணப் பெற்றது நலமுறு கொங்கம்.

மங்குறோய் மாட மதுரையிற் சொக்கர்
கொங்குதேர் வாழ்க்கை யெனுங்கவி முதலின்
மங்கலப் பேர்கொளு மாட்சிமிக் குடைய
கொங்குச் செல்வி கொளுமுறுப் பாக
இருபா னான்கெனு மெழினா டுடையாள்.

அத்திரு நாடா மணிதிகழ் மகட்குத்
திகழ்முக மாகச் சிறந்திடு நாடு
புகழ்மிகப் பொலியும் பூந்துறை நாடே
தீந்தமிழ்ச் சைவச் செழுந்துறை விளக்கும்
பூந்துறை நாடு பூவள முடையது.

பொன்றிகழ் குடகப் பொருவரைத் தோன்றிப்
பொன்னு மணியும் பொருதிரைக் கரத்தால்
வாரிக் கொழித்து வறட்சிமீக் கூர்ந்த
வேனிற் காலத்தும் விழைவுறப் பெருகிப்
பெட்புடன் மகவைப் பேணுறுந் தாய்போல்

உலகுயி ரூட்டு முயர்கா விரிநீர்ப்
பூந்துறை பொலியும் பூந்துறை நாட்டில்

### குறிஞ்சி நிலம்

செங்கேழ் முருகன் சிறந்தமர் காணியாய்க்
குறவரும் மருளும் குன்றத் துச்சியில்
அவிர்துகில் புரையு மருவியுஞ் சுனையும்

குறவர்தே னெடுத்தலும் குன்றக் குறத்தியர்
வரைத்தினை குற்றி மகிழ்வுறப் பாடும்
வள்ளைப் பாட்டின் மங்கல வொலியும்
குறக்குடிக் கன்னியர் குளிர்தினைப் புனத்தில்
ஆயோ வென்னும் அழகிய மொழியும்

மலையெதிர் சிலம்ப வந்திடு மொலியும்
சேணோன் வீசிய கவண்கல் மீதுறக்
கறையடி சீறுங் கடும்புலிக் குழாமும்
சந்தனந் தேக்கின் றழைவிரி கிளையில்
கிள்ளை கொஞ்சலுங் கிளர்மயி லாடலும்



வேங்கையும் பிணாவும் மெய்யுறக் கூடி
வாய்வாய் வைத்து மகிழ்வுறுங் காட்சியும்
தினைப்புனங் காத்த சிறுமியர் நண்பகல்
அருவி யாடியு மகன்சுனை மூழ்கியும்
கொய்தளிர்க் குறிஞ்சிக் கொழுமலர் கொய்தும்

காந்தள் பறித்தும் கண்ணிகள் புனைந்தும்
கூந்தலிற் சூடியும் குளிர்தே னுண்டும்
சிலம்பெதிர் கூவியும் திகழ்ந்திடு காட்சியும்
மண்டியே கிடக்கும் மலைநிலக் குறிஞ்சியும்

### முல்லை நிலம்

ஆழி சங்க மடுகதை வில்வாள்

பாழி நெடுங்கைப் பரூஉமல ரேந்திய
திருவுறை மார்பிற் றிருமா லென்னுங்
காயா மலர்நிகர் காட்சிகொள் மேனி
மாயோ னுறையும் வளம்மிகு காட்சியும்
ஆயர் பாடியும் ஆன்மணி யோசையும்

குடவர்வேய்ங் குழலும் குடத்தியர் குரவையும்
நாவலர் வண்டு நல்லிசை பாடக்
கானியாற் றடைகரைக் கவின்பெற மலர்ந்த
குருந்துந் தோன்றியுங் கொழுநெடுங் காதிற்
புல்வாய் முயலும் பொலிகான் கோழியும்

கார்விளை யெள்ளுங் கவின்கதிர் வரகும்
குல்லையு மேவிய குறுமுகை யவிழ்ந்த
முல்லை சான்ற முல்லையந் தினையும்

### மருத நிலம்

வெண்ணிறந் தழீஇய விளங்குநாற் கோட்டு
ஐரா வதப்பிட ரணிமணிக் குடைக்கீழ்

பொன்னரி மாலை பொலிமணி மகுடமும்
வச்சிரப் படையும் வல்லிடிக் கொடியும்
வலமுறத் தாங்கிய வானவர் தலைவன்
காம தேனுங் கற்பகச் சோலையும்
சிந்தா மணியுஞ் செழுநிதிக் குவியும்

அமுதமும் போகமு மரம்பையர் நடமும்
களியுறப் பெற்ற கண்ணா யிரத்தோன்
உலகுயிர் புரக்கு முயர்மழைச் செல்வன்
ஐந்தருச் செல்வி யகமகிழ் நாயகன்
மகட்கொடை வேட்கு வழங்கிய புகழ்சால்

இமையாச் செங்க ணிந்திரக் கடவுள்
காவல் கொள்ளுங் கடிமலர்ச் சோலையும்
செந்தா மரையுஞ் செங்கழு நீரும்
பூத்துப் புனல்வழி பொய்கையிற் பெடையொடு
அன்ன மாடும் அகன்றுறைக் காட்சியும்

மருதங் காஞ்சி மரநிழற் பொதும்பர்
மள்ள ருழத்தியர் வளர்குழல் நீவி
யூடல் தீர்க்கு முவப்புறு காட்சியும்
அரக்கித ழாம்ப லரும்பினை மேய்ந்து
குண்டுநீர்க் குட்டை குழிகளின் மூழ்கிக்

கலங்கிய நீரைக் களிமிக வருந்தி
மாவி னீழல் வளமுறத் துயிலும்
கயவாய்க் கோட்டுக் காரான் குழூஉவும்
நிலத்துக் கணிசெய் நெல்லுங் கரும்பும்
பாளைக் கமுகும் பைங்குலைத் தெங்கும்

பாசடை வாழையும் பலாவும் வஞ்சியும்
மடைநீ ரொலியும் வரம்பிடை மணியும்
களைகளை மகளிர் கள்மது வுண்டு
மழலைக் கிளியின் மகிழ்வுறப் பாடலும்
வருபுன லாடலும் மன்றணி விழாவும்

மல்கிய நீர்மலி மருதத் திணையும்



**பாலை நிலம்**

தவளப் பிறையொளிர் சடைமுடி யுடையாள்
பச்சை நிறத்தி பவள வாய்ச்சி
முத்தின் மூரல் முகமதி யுடையாள்
கயனிகர் கண்ணி கச்சார் தனத்தி

எண்டோட் செல்வி இமையவர் நாடி
அகநிறை கருணை முகமுறு சீற்றம்
பொற்புற விளங்கு மற்புதக் கன்னி
மாமறைக் கூட்டில் வளர்ந்திடுங் கிள்ளை
மகிடற் காய்ந்து வானவர்ப் புரந்தாள்

தண்டு வில்வாள் சக்கரம் சங்கம்
கொண்டு விளங்குங் கொற்றவை செல்வி
பூதவே தாளப் பொருபடை யுடையாள்
கான நாடி கருதுறு மடியர்
அஞ்சிடா வண்ண மருள்புரி சண்டிகை

தென்றல் வாடை திகழிரு புறத்துஞ்
சாமரம் வீசத் தரளமா லிகைசூழ்
திங்கட் குடைக்கீழ்த் திகழ்தர வமர்வாள்
கற்சிறைக் கோட்டங் கடுகினர் சென்று
வழிப்பறி சூறை வருபொருள் கொற்றம்

செழிப்புற வருள்வாய் தேவியே! யென்று
புலிநிகர் மறவர் புலிப்பற் றாலி
மலியணி மறத்தியர் மறப்பலி தந்து
நிலமுற வணங்கி நின்றுறு காட்சியும்
வாகையுங் கோங்கு மணமலர் சொரிதலுங்

கற்பர லுண்ட கவின்மணிப் புறாவின்
சேவலும் பேடுஞ் சென்றினி தமர்ந்து
கள்ளியுஞ் சினையிற் களிப்புறக் கூவலுந்
திலதநீ ரிலாச் சேற்றுநீர்க் கூவலும்
செங்கதிர் வெய்யோன் றெறலினாற் கரிந்த

கள்ளியும் பாலையும் காரகில் மரமும்
பசித்தீ வருத்தப் பருந்துங் கழுகும்
ஆனையு மானு மடர்செந் நாயு
மாவிபோ காம லலைதரு காட்சியுந்
தாங்கொணாப் பசித்தீத் தழற்படுங் காலை

உயர்ந்தோர் தாமு முயர்வினை விடுத்து
இழிந்தோர் நல்கு மிழியுண வுணல்போல்
திரிதர வந்த செந்நாய் வாயின்
வாங்கிய நாவின் வடிதுளி நீரைத்
தேவாங்கு நக்குஞ் சிறுபுன் காட்சியும்

கூர்த்தலைப் பரலுங் குவிமலை முரம்பும்
கார்ப்பரு வத்துங் கனலுரு வெப்பமும்
மன்னிய பாலை வன்பெருந் திணையும்
சூழக் கிடந்ததுஞ் சுடரொளி வெள்ளி
மலைவாய்த் தெய்வ மணிநிழற் காஞ்சி

மரவேர்த் தோன்றி மலரொடு சாந்தும்
வாரி வீசி வருதிரைக் கரத்தால்
போற்றி வணங்கிப் பொலிவுட னிருபாற்
சிவதலம் பலவுஞ் செழிப்புறச் செய்து
கள்ளவிழ் சோலை கடிதினிற் புகுந்து

அமர முனிவன் அகத்தியன் கொணர்ந்த
காவிரி கலக்குங் காஞ்சிமா நதியின்
அணிகெழு வடபா லமைந்தது மான

### சென்னிமலைமேல் செவ்வேளைத் தரிசித்தல்

வானுற வளர்ந்த வளமிகுஞ் சிகரச்
சென்னிமா மலையிற் செல்குவை செல்லின்

அம்மலை வழிமுத லமைவுடன் விளங்கும்
மலைவழி வேழ மாமுகற் போற்றி
மலைகா வடிகொள் மலைகா வலனாம்
மலையடி வார மண்டபத் தமரு
மிடும்பக் குமர னிணையடி பணிந்து



வழித்துணை யாதென மலைமிசை யேறி
செழிப்புறு முச்சி சேர்ந்தினி தருளும்
அந்தி வணம்போ லழகொளிர் மேனிச்
சந்தி விநாயகன் றாண்மலர் தொழுது
அண்டர் மாதவரு மருமறைக் குழாமு

மெண்டிசை யோரு மின்புறப் போற்ற
நந்தா வளமருள் நறுமணம் பொலியுஞ்
செந்தா மரைமலர்த் திருவடித் துணையும்
இடைப்பட் டிகையு மிலங்குகோ வணமுந்
தொடைமலர் மாலை துலங்குநூன் மார்பும்

வேத்திரத் தண்டம் விளங்கு கைத்தலமுஞ்
சாத்துடை யிடையிற் சார்ந்த கைத்தலமும்
ஒளிவளர் குழைதா முறுசெவித் துணையு
மளியுற நோக்கு மலர்விழித் துணையும்
பூத்தபுன் சிரிப்புப் பொலிதனி முகமும்

பின்றாழ் சடையும் பிறங்கநின் றுலக
நன்றா மாறெந் நாளும் புரக்கு
மரன்றிரு மதலையை யயில்வேற் கரனைக்
சிரங்கை குவித்துத் திருவடி தாழ்ந்து

### முருகன் புகழ் பாடுதல்

கன்னியம் பிகைசேய்! கார்த்திகை புதல்வ!

சென்னியங் கிரியிற் சேர்திரு முருகா!
பொன்னியந் துறைசேர் பூந்துறை நாட!
ஆரந் திகழு மணிகெழு மார்பின்
வீரவா குப்பேர் வீரனே முதலாம்
வீரர் தம்முடன் மேவுறுந் தலைவ!

உறுநினை வினிலு முளஞ்சுடும் பொல்லா
வறுமைநோய் பிணிப்ப வாட்டமுற் றயர்ந்தேன்
பாடும் புலவர் படுமிடர் தீர்த்து
நாடும் வாழ்வு நனிமிக வருளும்
புகழ்மிக வுடைய புண்ணியக் கடவுள்

நீயே யாகலின் நின்புகழ் பாடி
யுறுதுயர் தீர வுனைவந் தடைந்தேன்
சொல்லுறு மறையுஞ் சொல்லுதற் கரிய
வெல்லையி னின்புக ழியம்புதற் கரிதே
யெனினு மன்பி னிசைக்குவ னீயே

மூவிலைச் சூல முதற்பெருங் கடவுள்
மேவுறு நெற்றி விழிவரு பொறியாய்த்
தோன்றிக் கயிலைத் தொல்வரை யடுத்த
வடவிம யச்சார் வளர்சர வணஞ்சூழ்
தடமலர்ப் பொய்கை தன்னிலா றுருவாய்

அறுவர் தருமுலை யமுதினை யுண்டு
நறைவிரி கமல நறுமலர் வளர்ந்தனை
இமையா முக்க ணெண்டோட் செல்வ
னம்மை யப்ப னருளிய வாக்கால்
அரன்மனைக் கிழத்தி யம்பிகை கையா

லார்வமுற் றணைப்ப வறுவே றுருவுந்
திரண்டொரு வடிவாய்த் திருமுக மாறும்
ஆறிரு புயமு மணிகொளத் திகழ்ந்தனை
மண்ணுறு கடலும் வானமு மலையும்
நண்ணி யாடல் நடுக்குறச் செய்தனை.

விண்ணோர் சினந்தமர் மேவிடத் தோல்வி
நண்ணுறச் செய்தனை நடுங்கிய தேவர்
அசுரர்செ யச்ச மகன்றிடத் தம்மைக்
காக்கும் வலிமிகு கடவுணீ யென்று
தேறினர் தேவ சேனா பதியென

வாழ்த்தி வணங்கி வரிசை களாகத்
தீத்தழற் கடவுள் செஞ்சுடர்க் கோழியும்
மாத்தரு வேந்தன் மஞ்ஞையுந் தென்றிசைக்
கோமான் மறலி கொடுந்தகர்க் கடாவும்
கொடுத்தன ரவரும் கூடிய பிறரும்



வச்சிரந் தோட்டி வானுதி யம்பு
வடிவேல் மாலை மணிமழுத் தண்டம்
ஆகிய பிறவு மன்புறத் தந்தனர்
அழகுறு மனைய யாவையு மேற்றுப்
பெரிதுள மகிழ்ந்து பேரருள் செய்தனை.

தேவர் பெருந்துயர் தீர்த்திட வேண்டப்
பவளம் பூத்த பசுங்கடல் நாப்பண்
தவளப் பளிங்கின் றடந்திடர் மேய
மயேந்திரத் திருந்து மன்னுயிர் தின்று
விண்ணகம் புடைத்து விழைபொருள் கவர்ந்து

வானவர் குழாத்தை வல்விலங் கிட்டுச்
சிறைவைத் தொறுத்துத் தீத்தொழில் புரிந்த
கொன்றுண லஞ்சாக் கொடியசூர் முதல்வனும்
அசுர வெள்ளமு மடுசிறைப் புட்பேர்க்
குன்றமுங் கடலுங் கொன்றுயிர் குடித்துப்

பவளச் சிவப்பும் பாசிலைக் கூர்மையும்
தழற்கால் நுனியுந் தாரைக் ளொட்டும்
மந்திர வலியும் மலிந்தழ குற்ற
செஞ்சுடர் மணிவேற் றிருக்கரங் கொண்டனை
வன்சிறை யுற்ற வானவர் தம்மை

விண்குடி யேற்றி விளங்குறச் செய்தனை
அசுரர்செய் துயர மகன்றினி திருக்க
வாசவன் றனக்கு மணிமுடி சூட்டினை
அமுதமுந் தருவு மவிர்மணி யினமும்
மேவுறப் பெற்ற விண்ணவர் தலைவனும்

அயிராணி தேவியு மன்புட னல்கத்
தெய்வப் பிடியைத் திருப்பரங் குன்றிலும்
வள்ளி யென்னும் வளர்குறக் கொடியை
வள்ளியஞ் சிலம்பிலு மகிழ்வுற மணந்து
களவுகற் பென்னுங் கைகோ ளிரண்டுந்

தமிழ்நூல் மரபின் சால்பென விளக்கினை
நளிர்கடல் சூழு நானிலத் துயர்ந்த
குளிர்வரை யுலகக் குறிஞ்சிக் கிழவ!
மணிமருங் கொலிப்ப வளியென விரைந்து
சினத்தீ தெறிக்கச் செங்களம் புகுந்து

அவுணர்த் தேய்த்த வடல்மிகு கோட்டுப்
பிணிமுக வேழப் பிடர்த்தலைப் பெரும!
தானவர் மந்திரந் தாங்கொடு வளர்த்த
மாக்கடல் நடுவண் வலிகவர் மாவினை
அவுணர் நல்வல மடங்குற வீழ்த்திய

திறல்மிகு செவ்வேற் செவ்வேட் சேயே!
நிலநீர் தீவளி நெடுவளி யென்னு
மைம்பெரும் பூத மடைவுற வகுத்தனை
பூதத் துணர்வாய்ப் பொலிந்தனை, பூதத்
தகில வுலகு மாயினை யெண்ணில்

சமயத் தவருஞ் சார்பொரு ளாயினை
மாதவ ருள்ள மதிவிளக் காயினை
யாறுங் குளனு மாற்றுறு நடுவும்
மலையுங் கந்தும் வாழ்த்தினர்க் கருள்குவை
மலயமா தவத்தோன் மகிழ்வுறப் பொருணூல்

தெளிதர வுணர்த்திய தென்றமிழ்ப் புலவ!
ஆலவா யிறைவ னருளிய களவியல்
உரைகளி லுண்மை யுரையியல் புணர்த்தினை
ஆவண வீதி யருந்தமிழ்க் கூடல்
மேற்பரங் குன்றில் விளங்குறு செல்வ!

நந்தூ ரலைவாய்ச் செந்தூர்க் கடவுள்!
மாவினந் திகழு மாவினங் குடியாய்!
ஏரகச் செங்குன் றினிதமர்ந் துறைவோய்!
தளிர்புரை மேனித் தையலர் குழுவில்
குளிர்காந் தட்பூக் குன்றுதோ றாடல்



நனிவிரும் பியவேள்! நளிர்சிலம் பாற்றின்
அழகமர் சோலைப் பழமுதிர் சோலை
மலைமகிழ்ந் துறையு மலைமகள் புதல்வ!
அருமறை யுணர்வு மாகமத் தேர்வும்
முத்தீச் செல்வமும் முறையுறப் பெற்ற

அந்தணர் மணமல ரங்கையி லேந்தி
ஆயிரம் பேரு மன்புறச் சொல்லி
யருச்சனை புரிய வகமகிழ்ந் தருளும்
கடம்பமர் கந்தக் கடவுளிவ் வுலகில்
புலவர் சிங்க மெனப்புகல் கீரன்

ஆற்றுப் படைகேட் டருள்திருச் செவியில்
என்புன் மொழியு மேற்றருள் செய்வா
யென்னு துதிக ளியம்பிய பின்னர்
எல்லை யில்லா விருந்துயர் செய்யும்
பொல்லா வறுமைப் பொருகடல் வீழ்ந்து

வாத முதலாம் வலிவிடப் பாந்தள்
கொல்லாத் துயர்செய் கொடுமையாற் றாது
நின்றிரு வருளாம் நேசப் புணைகொடு
இன்பவாழ் வென்னு மிருங்கரை யேறி
உய்தி பெறுதற் குன்றிரு வடிகட்

காயிரங் காலெ னன்புறு வணக்கம்

### செவ்வேள் பரிசில் நல்குதல்

எனவுன் குறிப்பை இயம்பா முன்னந்
தன்னுளங் குறித்துத் தண்டமிழ்ப் புலவன்
வருத்தமுற் றயர்ந்து வண்டமிழ்த் துதிகள்
வளமுறப் பாடி வந்தன னாகலின்

அளிசெயத் தக்கான் அளிசெயத் தக்கான்
என்றருள் கொண்டுன் னூழ்வினை யேகக்
கடைக்கணித் தருளிக் கவிமதிப் புலவ!
அஞ்சலென் றருளி யகலிடத் தோர்கள்
உயர்ந்தவ னீயென் றுரைத்திடு மாறு

அறம்பொரு ளின்பம் வீடெனு நான்கின்
திறமுறும் பொருள்கள் சீர்பெற வருளுவன்

**சென்னிநகரச் சிறப்பு**

தடங்கரைச் சங்கத் தவளவெண் முத்தின்
நிலவொளிக் குமுத நெகிழ்ந்துவாய் விரியத்
தென்றல் வரவால் திருமகள் விழையும்

தாமரை மலரத் தண்புனல் நிறைந்த
வாவியு மோடையும் வன்கலிற் சுனையும்
பொறிவரிச் சுரும்பும் பூவையுங் கிளியுங்
குயிலு மிவற்றின் குரலொலி நிறைந்த
பூவார் சோலைப் பொதும்பருஞ் சூழத்

தேவர் வாழிடங்கள் செறிதர நடுவிற்
சுடர்மணிக் கோபுரந் துலங்குற விளங்குங்
கயிலை மால்வரைக் கடவுள்தன் கோயிலும்
தேர்நிலை யிடமும் திருவிழாச் சிறப்பும்
நூலிழை யனைய நுண்ணிடை மடவார்

கலாப மயிலிற் களிப்புற நடித்து
மின்னென நுடங்கி விளையாட் டயரும்
மலைநிகர் மாட மாளிகை நிரையும்
யாறுசூழ் கிடந்தென வகன்பெரு வீதியும்
கால்கொணர் பொருளும் கலங்கொணர் பொருளும்

பொன்னும் மணியும் பொலிதர விலைசெய்
ஆவண வீதியு மடியவர் மடமும்
பொன்னகர் தனிலும் பொலிவுற விளங்கும்
சென்னிமா நகரம் சீருறத் தழீஇத்
தாமரை பயின்ற நான்முகத் தொருவனும்

ஆழிசேர் மாலு மகலிரு விசும்பிற்
காவல் வேந்துங் கவின்மிகு தேவரும்
முனிவரும் பிறரு முறைமுறை சிரஞ்சேர்
கரத்தின ராகிக் கண்களி கொள்ளப்
போற்றி வணங்கப் புகலிரு விசும்பில்



ஆயிரங் கிரணத் தலர்கதிர் ஞாயிறும்
மாயிரு மதியமு மற்றுள கோள்களும்
வலமுறச் சூழ மகிழ்வுட னென்றும்
நின்றுயிர்க் கருளு நிலையினைக் கொண்டு
மன்னுறுஞ் சென்னி மலைகிழ வோனே!

**சென்னிமலை முருகன் புலவராற்றுப்படை முற்றிற்று**